# கல்கி

KALKI 3.5.98
ரூ. 4.50





# "ஷார்ஜாவுக்குத் துரத்திப் போய்க் காதலித்தேன்!"

## — சங்கீதா பிஜ்லானி பேட்டி



சங்கீதா பிஜ்லானி - லேடி சூப்பர் ஸ்டார்கள் விஜய சாந்தி, ஸ்ரீதேவி, மாதுரி எல்லாரையும் விட அதிகமாகப் பேசப்பட்டவர். காரணம், அன்று இவர் அஸாருதீனின் காதலி; இன்று மனைவி. தன்னைப் பற்றித் தாறுமாறாகவே பத்திரிகைகள் எழுதுகின்றன என்று வருந்தி, இனி ஒருக்காலும் எந்த நிருபருக்கும் பேட்டி கிடையாது என்று அறிவித்தவர். நமது நிருபர், அஸாருதீனின் நண்பர் என்பதால், அவரது சிபாரிசால்(!) பேட்டி தரச் சம்மதித்தார். முரண்டு பிடித்ததெல்லாம் முதலில்தான். பேச ஆரம்பித்தால் படு வெளிப்படை! சங்கடமான கேள்விகளுக்கும் பொறுமையாகவே பதிலளித்தார். பேட்டியிலிருந்து:

**கல்கி :** பெரிய சரிவுக்குப் பின் அஸார் மீண்டு வந்தது, நீங்கள் அவரை மணந்த நேரம் தான் என்று சொல்கிறார்களே?

(ஒரு 'பாதுகாப்பு' கருதி இக் கேள்வியை முதலில் வைத்தோம்.)

**சங்கீதா :** அப்படியா? ரொம்ப சந்தோஷம். அவர் நன்கு அடித்து, சிறப்பாக ஆட வேண்டும் என்று நான் இறைவனிடம் வேண்டாத நாளில்லை. அவர் நன்றாக ஆடினால்தானே அணியில் மற்றவர்களும் சிறப்பாக ஆடுவார்கள்? ஆனால், அவரது வெற்றிக்கு நான் உற்சாகமூட்டி, உறுதுணையாக இருப்பதுடன் சரி. சாதனைகளுக்கெல்லாம் அவரே தான் காரணம்.

**கல்கி :** உங்கள் காதல் மலர்ந்ததைச் சற்று நினைவு கூற முடியுமா?

**சங்கீதா :** நான் நடித்த விளம்பரப்படங்கள் அவரைக் கவர்ந்திருக்கிறது. பிறகு என் திரைப்படம் ஒன்றைப் பார்த்துவிட்டு, 'யார் இது?' என்று தம் நண்பர்களிடம் கேட்டாராம். மும்பையில் நடந்த ஒரு பார்ட்டியில் தற்செயலாக நாங்கள் இருவரும் கலந்து கொள்ள, ஓர் இந்திப்படத் தயாரிப்பாளர் எங்களை அறிமுகப்படுத்தி வைத்தார். இச்

தனைக்கும் அதுவரை டீவியில் கூட நான் கிரிக்கெட் பார்த்ததில்லை. அவரோ, இந்திய அணியின் கேப்டன். அந்த பார்ட்டியில் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தோம். அவர் நடந்து கொண்ட விதம் எனக்கு பிரமிப்பும் இன்ப அதிர்ச்சியும் தருவதாக இருந்தது. அத்தனை கண்ணியமாக எந்த ஓர் ஆணும் அதுவரை என்னை நடத்தியதில்லை என்பதுதான் காரணம்! ஒரு பந்தா இல்லாமல், அலட்டல் இல்லாமல் லேசான கூச்சமுடன்தான் பேசினார். இன்னும் சொல்லப் போனால், அவரிடம் லேசான பெண்மைச் சாயலை நான் கண்டேன். அது எனக்கு மிகவும் பிடித்து விட்டது.

அந்த பார்ட்டிக்குப் பிறகு அவர் என்னைத் தொடர்பு கொள்ளவேயில்லை. ஆனால் எனக்கு மறுபடி மறுபடி அவரைப் பார்க்க வேண்டும், பேச வேண்டும் அவருடனே இருக்க வேண்டும் என்று தோன்றியது. நானே அவருக்கு போன் செய்து பேச ஆரம்பித்தேன். அவருக்குத் தெரியாமலேயே, அப்போது நடந்த ஷார்ஜா கிரிக்கெட்டுக்குப் போய், திடீரென்று அவர் முன் தோன்றி வியக்கவைத்தேன். சொல்லப் போனால், எங்கள் காதல் பிறந்த இடமே ஷார்ஜாதான்!

**கல்கி** : அத்தனை தூரம் அவர் உங்களைக் கவர என்ன காரணம்?

**சங்கீதா** : முதல் விஷயம்; நான் முன்பே குறிப்பிட்டதுதான். லேசான பெண்மை கலந்த ஆண்மை அவரிடம் வெளிப்படும். இது உற்றுக் கவனித்தால்தான் தெரியும். கமலஹாசனுக்கும் இந்த இயல்பு உண்டு! அடுத்தது, கிட்டத்தட்ட பதினைந்து வருடங்களாக அவர் கிரிக்கெட் ஆடுகிறார். உலகம் முழுக்கப் பிரபலமானவர். ஆனால் துளி பந்தா கிடையாது! மிக எளிமை! யாராவது ரசிகர் வந்து "உங்கள் 'பேட்'டைக் கொடுங்கள்" என்று கேட்டால் கண்ணை மூடிக் கொண்டு கொடுப்பதற்காகவே நிறைய மட்டைகள் வாங்கி வைப்பார்! அந்த பீகார் சம்பவத்தை நினைத்துப் பார்க்கிறேன்... "உங்கள் தொப்பியைக் கொடுங்கள்" என்று கேட்டால், யோசிக்காமல் கழட்டிக் கொடுத்திருப்பார். அதை விட்டு விட்டுத் திருடியதால் தான் அவர் மிகவும் டென்ஷன் ஆகி அப்படி நடந்து கொண்டு விட்டார். அதற்குப் பின் அதைச் சொல்லிச் சொல்லி அவர் எத்தனை வருத்தப்பட்டார் தெரியுமா? ரொம்ப எமோஷனல் டைப்! அதையும் நான் ரசிக்கிறேன்.

ஆடை அணிவதிலெல்லாம் அவருக்கு ரசனையே கிடையாது. நான் சொல்லித்தான் இப்போதெல்லாம் 'நீட்'டாக உடுத்த ஆரம்பித்திருக்கிறார். சாப்பாடு கூட, படு சிம்பிள்! மேட்ச் இருந்தால் வெறும் பச்சை வாழைப்பழம்தான் உணவு. மேட்ச் முடிந்ததும் கொஞ்சம் சாதம், பருப்பு, தயிர் அவ்வளவுதான். வீட்டில் ரிலாக்ஸ்டாக இருந்தால் சிக்கன் மசாலாவும் 'பட்டர் நானு'ம் மட்டுமே அவருக்குப் போதும்!

**கல்கி** : ரொம்ப வெளிப்படையாக, அஸார் மேல் அன்புடன் பேசுகிறீர்கள். ஆனால் நீங்கள் அவரை இரண்டாவது மனைவியாக அடைந்தவர்தான். அவரது முதல் மனைவி உங்கள் திருமணத்தால் பாதிக்கப்பட்டு, கஷ்டப்பட்டது பற்றி நினைத்துப் பார்ப்பீர்களா?

**சங்கீதா** : ஸாரி. அது பற்றிப் பேச வேண்டாம். எங்களைப் போலவே இப்போது அவர்களும் (அஸாரின் முதல் மனைவி) சந்தோஷமாகத்தான் இருக்கிறார்கள். அவ்வளவுதான்.

**கல்கி** : நிர்மா விளம்பரம் மூலம் நீங்கள் ரொம்ப பாப்புலர். மறுபடி மாடலிங் செய்ய வருவீர்களா?

**சங்கீதா** : வரமாட்டேன். எனக்கு அந்த ஆர்வமெல்லாம் போய் விட்டது. ஆனால் அஸாரை முனைந்து விளம்பரங்களில் நடிக்க வைத்துக் கொண்டிருக்கிறேன். கடந்த ஒரு வருடமாகத்தான் இதுவும்.

**கல்கி** : அஸார் மேல் 'பெட்டிங்' ஊழல் குற்றச்சாட்டு உள்ளதே? அது பற்றிச் சொல்ல முடியுமா?

**சங்கீதா** : நிச்சயமாக அவருக்கும் இதற்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது. ஊழல் செய்து சம்பாதிக்க என்ன அவசியம்? அவருக்கு வசதிக்குறைச்சலா என்ன? தவிர, அவருக்குப் பணத்தாசையே கிடையாது. அவர் எத்தனை உடைந்து போய் விட்டார் தெரியுமா? 'நான் ஆடுவதையே நிறுத்தி விடட்டுமா?' என்று கூட என்னிடம் கேட்டார். நான்தான் அவரை சமாதானப்படுத்தி, உற்சாகப்படுத்தி, தொடர்ந்து ஆடச் சொன்னேன்.

**கல்கி** : சரி. கிரிக்கெட் உலகில் உங்களுக்கு நண்பர்கள் யாராவது உண்டா?

**சங்கீதா** : கங்குலியின் மனைவி டோனா எனக்கு ரொம்ப க்ளோஸ் ஃப்ரெண்ட்! எல்லா ரகசியங்களையும் நாங்கள் பரிமாறிக் கொள்வோம். என்ன கேட்டீர்கள்? கிரிக்கெட் ஆடுபவர்களிலா? அஸாரைத் தவிர வேறு யாரும் இல்லை!

பேட்டி : **சிம்மம்**



# சவால் + சுவாரஸ்யம் = சாதனை!

தோளில் ஊஞ்சலாடும் ஹேண்ட் பேக். தமது ஸ்கூட்டரின் முன்புறம் மெடிஸன் கிட். அவசரமாக ஸ்டார்ட் செய்து கிளம்பி விரையும் வைஜெயந்தி ஒரு மெடிக்கல் ரெப். பெரும்பாலும் ஆண்கள் மட்டுமே புழங்கும் இத்துறையிலும் இதோ வந்தாச்சு பெண்கள்!

யுஎஸ்வி மருந்து கம்பெனியின் தி நகர் பகுதி 'ரெப்'பாக இருக்கும் வைஜெயந்தி, "இது அலைச்சல் மிகுந்த வேலை. மேலும் ஆண்களே அதிகம் புழங்கற உலகில் நாமும் வளையவரணும். ஒரு நாளைக்கு நாலு டாக்டர்களைப் பார்த்து, நம்ம சரக்கைப் பத்தி விவரிச்சி, அவரை ப்ரிஸ்க்ரைப் பண்ண வைக்கணும். எரிஞ்சி விழுந்தாலும் சிரிச்சி மழுப்பினாலும் காரியத்துல கண்ணா இருக்கணும். சவாலான வேலையும் கூட!" என்கிறார்.

சென்னையில் மட்டும் 25 பெண்களைப் பரிசோதனை முயற்சியாக இப்படிக் களத்தில் இறக்கியிருக்கிறது யுஎஸ்வி நிறுவனம்.

"வேலை கஷ்டம்தான்னாலும் சில சலுகைகள் இருக்கு. பெண்கள் வீட்டு வேலைகளையும் கவனிச்சுக்கணும் இல்லையா? அதனால இந்த 'ரெப்' வேலையை பார்ட்- டைமாகச் செய்ய எங்க நிறுவனம் அனுமதி அளிச்சிருக்கு. தவிர, இரவு எட்டு மணிக்கு ஒரு க்ளினிக் போனா, 'ஐயோ பாவம், பொண்ணைக் காக்க வைக்கக் கூடாது'ன்னு உடனே கூப்பிட்டு, பார்த்து அனுப்பிடறாங்க. இதெல்லாம் பெரிய விஷயமில்லைதான். ஆனா அடிப்படைல நமக்குத் தன்னம்பிக்கை வளர இந்த வேலை ஒரு காரணமா இருக்கு. அது பெரிய விஷயமில்லையா?"

மெடிக்கல் ரெப்பாக உள்ள ஆண்கள், புதிதாக இத்துறைக்கு வருகிற பெண்களுக்குப் பேருதவி செய்வதாகச் சொல்கிறார் வைஜெயந்தி.

"புதுசா நாலு டாக்டர்களை அறிமுகப் படுத்தறதிலாகட்டும், துறையிலுள்ள நெளிவு சுளிவுகளை சொல்லித்தரதிலாகட்டும், ரொம்ப ஆர்வமா, அக்கறையா உதவறாங்க. ஆரம்பத்துல எனக்கே இது ஆச்சர்யமா இருந்தது. நான் பார்த்தவரைக்கும் 'பொம்பளை இப்படி பொட்டியத் தூக்கிட்டு வராளே'ன்னு யாரும் இன்டீஸன்ட்டா பிஹேவ் பண்றதே இல்லை. ரொம்ப கண்ணியமா நடத்தறாங்க."

"பணி திருப்தியாக இருக்கிறதா?"

"வாழ்க்கை, போராட்டமானதுதான். எல்லா வேலையும் கஷ்டம்தான். ஆனால் நமக்கொரு சமூக அடையாளம், வருமானம், தன்னம்பிக்கை - இதெல்லாம் முக்கியமில்லையா? சவாலான இத்தொழிலை, சுவாரஸ்யமானதா எடுத்துக்கறேன். சாதிக்கணும்னு நினைக்கறேன். அது முடியும்னு கட்டாயம் நம்பறேன்!" என்றார் வைஜெயந்தி.

— அம்மாபட்டி ஐம்பு

படம் : யோகா

# இந்தப் புன்னகையின் பின்னால் ஒரு போராட்டம்

**சுஷ்மிதா சென் மிஸ் யூனிவர்ஸ் ஆனது பழைய விஷயம்தான். அப்படி ஆவதற்கு அவர் என்னென்ன கஷ்டங்களை எல்லாம் அனுபவித்தார் என்பதை சமீபத்தில் விரிவாகக் கூறியிருக்கிறார். சுவாரஸ்யம் என்ற கோணத்தில் மட்டுமல்ல. நம்பிக்கையும் உழைப்பும் இணைந்தால் பெண்ணுக்கு வெற்றி நிச்சயம் என்பதை வலியுறுத்துவதாகவும் அமைந்திருக்கிறது இது.**

● சுஷ்மிதா சென் கீழ் மத்தியதர வகுப்பைச் சேர்ந்தவர். மாடலிங் துறையில் ஈடுபட பெரும் ஆர்வத்துடன் முயற்சித்தபோதும் போதிய வாய்ப்பு கிடைக்கவில்லை. இரண்டே விளம்பரங்களில் நடித்தார். அவற்றிற்கும் பேசிய தொகை கைக்கு வரவில்லை.

● தோழிகளோடு பேசிவிட்டு வீடு திரும்பிக் கொண்டிருந்தபோது திடீரென்று அவரது தோளைத் தட்டினார் ஒருவர். "மிஸ் இந்தியா அழகிப் போட்டியில் நீ கட்டாயம் கலந்து கொள்ள வேண்டும்" என்றார். சுஷ்மிதாவின் பெயரைக் கேட்க, அழகிப் போட்டி பற்றியெல்லாம் எண்ணிப் பார்த்திராத சுஷ்மிதா தன் பெயரை ப்ரீதி என்று பொய்யாக அறிவித்தார். தன் விசிட்டிங் கார்டை அவர் நீட்டியபோதுதான் அவர் டைம்ஸ் ஆஃப் இந்தியா இதழின் மேலதிகாரியான ரஞ்சன் பக்ஷி என்பது தெரிய வந்தது.

● மிகவும் தயக்கத்துடன் அடுத்த நாள் அவரைச் சந்தித்து போட்டியில் சேர ஒப்பந்தத்திலும் கையெழுத்திட்ட பிறகுதான் தெரிந்தது, அந்த முறை ஐஸ்வர்யா ராயும் கலந்து கொள்ளப் போகிறார் என்று. ( இது பற்றி அறிந்ததும் ஏற்கெனவே இருபத்து ஐந்து பெண்கள் அந்தப் போட்டியிலிருந்து விலகியிருந்தார்கள்) சுஷ்மிதாவும் தான் அடுத்த வருடம் போட்டியில் கலந்து கொள்வதாகக் கூற, ரஞ்சன் பக்ஷிதான் வற்புறுத்தி சம்மதிக்க வைத்தாராம்.

● போட்டிக்கான உடையைத் தைக்க சில டிசைனர்களை அணுகியபோது, ஒரு செட் உடைக்கு 25,000/- ரூபாய் கேட்டார்கள். அவ்வளவு பொருளாதார வசதியில்லை. இருநூறு ரூபாய் கொடுத்து ஒரு காக்ரா வாங்கிக் கொண்டார். சரோஜினி நகர் மார்க்கெட்டில் கொஞ்சம் நகைகள். சுஷ்மிதாவின் அம்மாதான் தைரியம் கொடுத்தார். "பிரமாதமான உடையும் நிறைய நகைகளும் இருந்தால் அதைத்தான் எல்லோரும் பார்த்துக் கொண்டிருப்பார்கள். அதெல்லாம் இல்லாததால் நீதிபதிகளின் கவனம் முழுக்க உன் மீது திரும்பும்" என்றார்.

● மிஸ் இந்தியா போட்டியில் இரண்டாவது இடம் ஐஸ்வர்யாவுக்கு என்று அறிவிக்க, இறுதிச் சுற்றுக்குத் தன்னோடு தேர்வு பெற்ற ஐஸ்மீத் அல்லது ஸ்வேதா மேனன் ஆகிய இருவரில் ஒருவர்தான் 'மிஸ் இந்தியா' என்று நினைத்தாராம் சுஷ்மிதா. ஆனால் தன்னைத் தேர்ந்தெடுத்தவுடன் ஆனந்த அதிர்ச்சி. "மிஸ் யுனிவர்ஸாக நான் தேர்ந்தெடுக்கப்பட்டது என்னைப் பொறுத்தவரை மிஸ் இந்தியாவாகத் தேர்வு பெற்றதைவிட பெரிய சாதனை இல்லை என்று நான் சொல்வேன்.

போதிய அளவு தன்னம்பிக்கை இல்லாத என்னை மாற்றியது மிஸ் இந்தியா தேர்வுதான். அதற்குப் பிறகு நம்பிக்கை வளர்ந்து விட்டது" என்கிறார் சுஷ்.

● மிஸ் யூனிவர்ஸ் போட்டிக்குக் கிளம்ப இன்னும் நாலே நாட்கள்தான் என்ற நிலையில் சுஷ்மிதாவின் பாஸ்போர்ட் தொலைந்து விட்டது. டைம்ஸ் ஆஃப் இந்தியா நிறுவனத்தை அணுகியபோது 'மீண்டும் பாஸ்போர்ட் பெற நாளாகும். இந்த முறை ஐஸ்வர்யா ராய் போகட்டும். அடுத்த முறை நீங்கள் செல்லலாம்' என்றார்கள். சுஷ்மிதா இதை பலமாக மறுக்க, ஒருவழியாக கிளம்புவதற்கு முதல்நாள் பாஸ்போர்ட் வந்து சேர்ந்தது.

● கிளம்பும்போது விமான நிலையத்தில்



பிரச்னை. போட்டிக்கு முன் ஒரு மாதம் மணிலாவில் தங்கியாக வேண்டுமென்பதால் மூன்று சூட்கேஸ் துணிகள் (பெரும்பாலானவை ஒரு டிசைனர் கடன் கொடுத்தவை) எடுத்துச் சென்றிருந்தார். ஆனால் "எகானமி க்ளாஸ் டிக்கெட் வைத்திருப்பவர் இவ்வளவு எடை எடுத்துச் செல்ல அனுமதியில்லை" என்று விமான அதிகாரிகள் கூறிவிட்டார்கள். "இந்தியாவின் பிரதிநிதியாக என் மகள் செல்கிறாள்'' என்று வாதிட்ட அவர் அப்பா ஏளனப்படுத்தப்பட்டார்.

● மிஸ் யூனிவர்ஸாகத் தேர்வு செய்யப் பட்டு 'சிம்மாசனத்தில்' உட்கார வைக்கப் பட்டவுடன், 'சுஷ்'ஷின் அம்மா மேடைக்கு வந்தார். அவர் காலைக் குனிந்து தொட்டவுடன் அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. உடல் குலுங்கியதில் கிரீடம் கீழே விழ, மிஸ் யூனிவர்ஸ் நிறுவன ஊழியர்கள் சுஷ்மிதாவைச் சுற்றி நெருக்கமாக, வட்டமாக சூழ்ந்து கொண்டார்கள். சுஷ்மிதாவின் அழுகை தொலைக் காட்சியில் தெரிந்துவிடக் கூடாதே! பிறகு ஓர் அறைக்குள் பதினைந்து நிமிடங்கள் தனியே விடப் பட்டார். தான் கடந்த பாதையை மனத்தில் ஓடவிட்டு, வெளியே வந்த போது அவர் முகத்தில் புன்னகை!

– குல்லூ



**கை**யில் பிரம்பில்லாமல், பார்வையிலேயே பையன்களைக் கட்டிப் போடும் பல 'கெத்'தான ஆசிரியர்கள் உண்டு. அதுபோலவே சில பெரிசுகள் வீட்டில் ஹாலில் உட்கார்ந்திருந்தால் அந்த வழியாக வாசல் பக்கம் போகாமல் புழக்கடை வழியாகச் செல்வார்கள் சில வாண்டுகள். பெரிசிடம் அவ்வளவு பயம் + மரியாதை. பா.ஜ.கவின் புதிய தலைவரான குஷாபாவ் தாக்கரேயும் மேலே சொல்லப்பட்ட ஆசிரியர் மற்றும் பெரிசுகளின் அலைவரிசையில் இருப்பவர்தான்.

தொண்டர்களிடம் ஒரு மிலிட்டரி கட்டுப்பாட்டை எதிர்பார்ப்பவர் தாக்கரே. ஒழுங்கீனம், ஒழுக்கக்கேடு? மூச்! கிட்டத்தட்ட ஐம்பது வருட கால கட்சியின் வரலாற்றுடன் ஒன்றிப் போனவர். எதைப் பற்றிக் கருத்துக் கேட்டாலும் 'டக்'கென்று அளந்து சொல்லும் பதில்கள். வாஜ்பேயி, அத்வானி அளவுக்கு, மக்கள் தலைவராக இல்லாவிட்டாலும் அமைப்பு ரீதியாக, ஜம்முவிலிருந்து குமரி வரை கட்சித் தொண்டர்களுக்குத் தெரிந்த முகம்தான்.

தாக்கரேயின் முன்னோர்கள் குஜராத்திலிருந்து, நாக்பூர் பக்கம் குடிபோனவர்கள். 76 வயதாகும் தாக்கரே 1950களில் மத்திய பிரதேசப் பகுதிக்குக் கட்சி வேலையாக அனுப்பப்பட்டவர். அங்கேயே செட்டில் ஆகிவிட்டார். மத்திய பிரதேசத்தில் இன்று பா.ஜ.க. பெரிய சக்தியாக இருக்கிறதென்றால் அதற்குத் தாக்கரே போன்றவர்கள் போட்ட அஸ்திவாரமும் ஒரு காரணம்.

பிரம்மச்சாரியான தாக்கரே தாம் ஆர்.எஸ்.எஸ். இயக்கத்தைச் சேர்ந்தவர் என்று சொல்வதில் பெருமைகொள்பவர்.

## குஷாபாவ் தாக்கரே :

# அத்வானியின் ரப்பர் ஸ்டாம்ப்?



• தாக்கரே தலைவரானதும் திலகமிட்டு வாழ்த்து

''ஒவ்வொரு ஆர்.எஸ்.எஸ். தொண்டனுக்கும் தேசபக்தி, தெய்வபக்தி ஆகிய இரண்டும் இரு கண்கள்'' என்று அடிக்கடி சொல்லுவாராம். தாக்கரே குடும்பத்தில் பல டாக்டர்கள். இவர் மட்டும் விதிவிலக்காக ஆர்.எஸ்.எஸ்., பி.ஜே.பி. என்று அரசியலில் குதித்து விட்டார்.

"பா.ஜ.க. ஆட்சியைப் பின் ஸீட்டிலிருந்து ஆர்.எஸ்.எஸ். இயக்கம் இயக்கும்'' என்று சிலர் சொல்லுகிறார்கள். அதுபோன்ற பின் ஸீட் இயக்கம் ஆபத்தானது என்பது எங்களுக்குத் தெரியும்! சமயத்தில் விபத்து கூட நடந்து விடும். எனவே ஒருபோதும் 'சங்கம்' இதுபோன்ற வேலைகளில் ஈடுபடாது!'' என்று அடித்துச் சொல்கிறார் தாக்கரே.

**எ**மர்ஜென்ஸியில் 19 மாதம் சிறையில் இருந்தார் தாக்கரே. ஆர்.எஸ்.எஸ். முத்திரையோடு, தாக்கரேயின் மீது 'அத்வானி' முத்திரையும் உண்டு. ராஜஸ்தான் முதல்வர் ஷெகாவத்தை தலைவராகக் கொண்டு வர வேண்டுமென்பது வாஜ்பேயின் விருப்பமாம். ஆனால் சமீபத்திய தேர்தலில் ராஜஸ்தானில் பா.ஜ.க. வாங்கிய அடியாலும், இன்னும் ஓர் ஆண்டில் ராஜஸ்தான் சட்டசபைக்குத் தேர்தல் வரவிருப்பதாலும் ஷெகாவத்துக்கு வாய்ப்பு நழுவியது.

"தாக்கரே அத்வானியின் ரப்பர் ஸ்டாம்பாக இருப்பார்'' என்று சொல்லப்பட்டாலும் தாக்கரே தமக்கென்று தனி இடத்தைப் பிடிப்பார் என்று சொல்கிறார்கள் கட்சிக்காரர்கள். ஆனால் கூடப் பாக்கம் கோவிந்தாச்சார்யாவின் செல்வாக்கு கட்சியில் கிடுகிடுவென்று வளர்ந்து வருகின்ற நிலையில் தாக்கரேக்கும் கோவிந்தாவுக்கும் சரியான 'ரேப்போ' இருக்குமோ என்று சந்தேகப்படுகிறவர்களும் உண்டு. குறிப்பாக சில ஆண்டுகளுக்கு முன், மத்திய பிரதேசக் கட்சி விவகாரங்களில் கோவிந்தாச்சார்யா தமது மூக்கைக் கொஞ்சம் நீட்டியதால் அப்போது இருவருக்கும் பனிப்போர் மூண்டது!

தில்லி அசோகா சாலையில் உள்ள பா.ஜ.க. அலுவலகத்தின் பின்புறம் பிரம்மச்சாரித் தலைவர்களுக்கென்று தனித் தனி அறைகள் உண்டு. அதில் ஒரு அறையில் சதாசர்வ காலமும் புத்தகமும், பேப்பர்களுமாகக் காட்சியளித்துக் கொண்டிருப்பார் தாக்கரே. வெற்றியானாலும் சரி, தோல்வியானாலும் சரி, தாக்கரேயின் ரியாக்ஷன் மிதமாகத்தான் இருக்கும்.

"எங்கள் அமைப்பை வலுவூட்டச் சரியான தலைவர் தாக்கரே. ஒரு சாதாரண கட்சித் தொண்டர் கூட நள்ளிரவில் அவரைத் தட்டியெழுப்ப முடியும்'' என்கிறார் துணைத் தலைவரான ஜனாஜி. ⭘

— கௌசி

படம் - நன்றி : தினமலர்

# மம்தா பானர்ஜி பேட்டி

**மே**ற்கு வங்காள அரசியலில் காலம் காலமாக ஹீரோ மட்டும்தான் இருந்து வந்திருக்கிறார் – ஜோதிபாசு. இப்போது ஆக்ஷன் ஹீரோயின் என்று சொல்லத்தக்க வகையில் ஜோதிபாசுவையே, புயல் போலப் பரவும் தன் புகழ் மூலம் சற்றுக் கலங்க வைத்திருப்பவர் மம்தா பானர்ஜி. காங்கிரஸிலிருந்து இவர் கேசரியை முறைத்துக் கொண்டு விலகியதும் கடந்த பொதுத் தேர்தலில் இவரது த்ரிணமூல் காங்கிரஸ், மேற்கு வங்கத்தில் ஒரிஜினல் காங்கிரஸை ஓரம் கட்டி விட்டதும் கம்யூனிஸ்ட் அரசுக்கே ஒரு சவாலாக எழுந்து நின்றதும் நாடே அறியும். சோனியாவின் நெருங்கிய தோழியான இவர், தற்சமயம் சோனியா தலைமையிலான காங்கிரஸில் மறுபடி இணையக்கூடும் என்கிற பலமான வதந்தி, வடக்கு முழுவதும் உலவுகிறது. அது நிஜம்தானா? கல்கத்தாவிலுள்ள மம்தாவின் வீட்டில் அவரைச் சந்தித்து பேட்டி கண்டோம்.



**கல்கி: சோனியா காந்தி, காங்கிரஸின் தலைவராகி விட்ட நிலையில் நீங்கள் மறுபடியும் காங்கிரஸில் இணைவீர்கள் என்று பரவலாகப் பேசப்படுவது பற்றி?**

மம்தா: வாய்ப்பே இல்லை. சோனியா தலைவரானால் என்ன? இப்போது அங்கிருக்கிறவர்கள் எல்லோரும் கொள்கையே இல்லாதவர்கள், பதவிக்காக அலைகிறவர்கள்தாம். நான் மறுபடி காங்கிரஸுக்குப் போனால் மதிப்பே இருக்காது.

**கல்கி: நீங்கள் காங்கிரஸிலிருந்து விலகக் காரணமாக இருந்த கேசரிதான் இப்போது போய் விட்டாரே...**

மம்தா: (இடை மறித்து) நான் என்னைப் பற்றி மட்டும் யோசிக்க முடியாது. நான் காங்கிரஸிலிருந்து விலகியபோது என்னை நம்பி லட்சக்கணக்கான தொண்டர்களும் அல்லவா விலகி என்னுடன் வந்தார்கள்? அதர்மத்தை நான் எதிர்ப்பேன் என்கிற நம்பிக்கையால்தானே என்னை ஆதரித்தார்கள்? அவர்களுக்கு துரோகம் செய்து, அவர்கள் முகத்தில் கரி பூச எனக்கு விருப்பமில்லை. மேலும் இங்கே நான் கடுமையாக எதிர்க்கிற பிரணாப் முகர்ஜி, காங்கிரஸில் இப்போது நல்ல பதவியில்தானே இருக்கிறார்? அப்படியிருக்கும்போது மறுபடி இணையும் பேச்சுக்கே வாய்ப்பில்லை.

**கல்கி: அடிப்படையில் நீங்கள் கம்யூனிஸ்டுகளின் விரோதி. ஆனால் இப்போது திடீரென்று மாநில அரசியலில் ஜோதி பாசுவை ஆதரிக்கிறீர்**



கனே?

**மம்தா:** பூட்டியிருக்கும் டன்லப் தொழிற்சாலையை அரசே ஏற்று நடத்த வேண்டும் என்று குரல் கொடுத்தது நான்தான். என் கோரிக்கையை ஜோதிபாசு ஏற்கும்போது எப்படி அவரை ஆதரிக்காமல் இருக்க முடியும்? எங்கள் கொள்கையை கம்யூனிஸ்டுகள் ஆதரிக்கிற பட்சத்தில் அவர்களை நாங்கள் ஆதரிப்பதில் என்ன தவறு?

# மறுபடியும் காங்கிரஸ்? நோ சான்ஸ்!

**கல்கி: மத்தியில் பா.ஜ.க.வை ஆதரிக்கிறீர்கள். இங்கேயோ, நேரெதிராக கம்யூனிஸ்ட் அரசை ஜிமுரென்று சப்போர்ட் பண்ணியிருக்கிறீர்கள். உண்மையில் உங்கள் நோக்கம்தான் என்ன?**

**மம்தா:** இதில் குழப்பமே இல்லை. ஜோதிபாசு அரசு எங்கள் கோரிக்கையை ஏற்றுக் கொண்டதால் அந்த விஷயத்தில் அவர்களை ஆதரிக்கிறோம். மற்றபடி, கம்யூனிஸ்டுகள்தாம் எங்கள் முதல் எதிரி என்கிற நிலையில் எந்த மாறுதலும் இல்லை. வாஜ்பேயி அரசு, நாங்கள் கேட்கும் நலத் திட்டங்களை மேற்கு வங்கத்தில் நிறைவேற்றும் பட்சத்தில் வர இருக்கிற சட்டமன்றத் தேர்தலில் த்ரிணமூல் காங்கிரஸ் இங்கே ஆட்சியையே பிடிக்கும்! கம்யூனிஸ்டுகள்தான் ஆள வேண்டும் என்று ஆட்சியைப் பட்டா போட்டா கொடுத்திருக்கிறது? அவர்களைக் கீழே இறக்கும்வரை எனக்கு உறக்கமில்லை.

**கல்கி: வாஜ்பேயி அரசுக்கு நீங்கள் உண்மையிலேயே மனப்பூர்வமான ஆதரவு தருவதென்றால் ஆட்சியில் சேரலாமே? அதன் மூலம் உங்கள் மாநிலத்துக்கு மேலும் எவ்வளவோ செய்ய முடியுமே?**

**மம்தா:** வெறும் பதவி சுகத்துக்காக நான் ஆட்சியில் சேர விரும்பவில்லை. எங்கள் மாநிலத்துக்கு என்னென்ன தேவையோ, அதை வெளியிலிருந்து ஆதரவு தருவதன் மூலமே என்னால் சாதித்துக் கொள்ள முடியும்.

**கல்கி: உண்மையில் நீங்கள் பா.ஜ.க வுக்கு ஆதரவு தருவதன் காரணம்தான் என்ன?**

**மம்தா:** இங்கே கம்யூனிஸ்டுகளை ஒழிக்க வேண்டும் என்கிற எனது குறிக்கோள்தான் வாஜ்பேயிக்கும். அது காரணமாகத்தான் நான் அவர்களுடன் இணைந்தேன். மற்றபடி பிற கூட்டணிக் கட்சிகள் தங்கள் ஆதரவை வைத்துக் கொண்டு அவரை மிரட்டுவது போலெல்லாம் நான் செய்ய மாட்டேன். வாஜ்பேயியைப் பற்றி எல்லாருக்கும் தெரியும். அவர் மட்டும் இரண்டு வருடங்கள் ஆட்சியில் நீடிக்கட்டும், இங்கே கம்யூனிஸ்டுகள் காலி!

ஆனால், அதுவரைகூட அவரை நிலைக்க விட மாட்டார்கள் போலிருக்கிறது. சில பதவி வெறியர்கள் அவரை மிரட்டுவதும் ஆட்டி வைப்பதும் சுத்தமாக எனக்குப் பிடிக்கவில்லை. அத்தகைய அரசியல் எனக்குத் தெரியவே தெரியாது! என் நோக்கம் தெளிவானது. நேர்மையான வழியிலேயே என்னால் அதை அடைய முடியும்! ●

சந்திப்பு: **நந்தினி**
படம்: **சௌந்தர்ராஜன்**

# மன்னிக்க மாட்டார் ஜோஷி!

ராணேவுக்கு முதல்வர் பதவி என்ற வதந்தி வலுத்து, ராணேவின் ஆதரவாளர்கள், ஆட்டபாட்டங்களுடன் கொண்டாடவே ஆரம்பித்து விட்ட தருவாயில், ஜோஷியே நீடிப்பார் என்ற அறிவிப்பு அபஸ்வரமாக ஒலிக்க, கொண்டாட்டம் நின்றது! ஜோஷி 'விட்டேனா பார்' த்வனியில், 'ராணே, தன் மனைவி பெயரில் மஹாபலேஷ்வரில் வாங்கிய நிலத்தில், மரங்களை எல்லாம் வெட்டிய குற்றத்துக்கு விசாரிக்கப்படுவார்' என்ற எதிர் வதந்தியைப் பரவ விட்டார். ராணே, தாக்கரேவின் காலைப் பிடிக்க, அவர் ஜோஷியை முறைக்க, 'நான் ஒன்றுமே செய்யவில்லையே' என ஜோஷி விழிக்க, 'வெட்டப்பட்டது மரமல்ல, கிளைகள் தான்' என ராணே, வாதாட... ஒன்று தெளிவாகி விட்டது. மும்பைக்கு வேட்டு வைத்தவர்களை ஜோஷி மன்னித்தாலும் மன்னிப்பார் (ஸ்ரீ கிருஷ்ணா கமிஷன் ரிப்போர்ட்டை எப்போது வெளியிடுவாரோ?), தன் பதவிக்கு வேட்டு வைப்பவர்களை ஒருநாளும் மன்னிக்க மாட்டார்!

## வேட்டு வேட்டை

புதுப்பெண் கழுத்தை நீட்டத் தயாராயிருக்க, கெட்டி மேளம் முழங்க வேண்டிய நேரத்தில், 'நிறுத்துங்கள்' என கத்திக் கொண்டு முதல் மனைவி ஓடி வந்த கதையாகி விட்டது! ஜோஷிக்கு கல்தா; வருவாய்த் துறை அமைச்சர் நாராயண

## உதவுவாரா உதவ்?

அசோகவனத்தில் அன்று சீதை பட்ட துயரைக் காட்டிலும் அதிகக் கஷ்டத்தை, போரிவிலியிலுள்ள 'அசோக வனத்து' மக்கள் இன்று



• ஜோஷி



அனுபவிக்கிறார்கள்! நாலா பக்கமும் 'குவாரி'களில், கற்களை குண்டு வைத்து தகர்ப்பதால் ஏற்படும் நடுக்கம், இங்குள்ள கட்டடங்களில் விரிசல்களையும், ஜன்னல்களில் உடைப்புகளையும், குழந்தைகள் மனத்தில் பீதியையும் தோற்றுவிக்கின்றன. கூர்முனைக் கற்களை ஓவர் லோடாக ஏற்றிக் கொண்டு 'கிர்'ரிடும் லாரிகளிலிருந்து விழும் கற்கள், சில உயிர்களையும் பல உடல்களையும் பதம் பார்த்திருக்கிறது. முன்பு, பால் தாக்கரே மேற்கொண்ட பயணத்தால் தாணாவில் 'குவாரி'த் தொல்லை குறைந்தது. இப்போது உதவ் ஒரு சுற்று வந்தால்தான் ஏதாவது நடக்கும் என்று நம்புகிறார்கள். உயிரைக் கையில் பிடித்திருக்கும் அசோகவனவாசிகளுக்கு அனுமானாக அவதாரமெடுப்பாரா உதவ்?

## நன்றி நவிலல்?

கவர்னர் பி.ஸி. அலெக்ஸாண்டரின் பதவி நீட்டிப்பு என்பது நடக்காத காரியம் என்றுதான் பலரும் நம்பினார்கள். முதலாவது, அவர் காங்கிரஸ்காரர்; இரண்டாவது, தாக்கரே கிண்டலடித்த சோனியாவின் அபிமானி; மத்தியிலோ பி.ஜே.பி.; லோக்கல் பிஜேபிக்காரர்களும் அலெக்ஸாண்டர் விசிறிகளல்லர்; இருந்தும், ரிமோட் கண்ட்ரோல்காரர் 'அலெக்ஸ்' பட்டனை அழுத்தமாக அழுத்தியதால், மற்றவர்கள் கப்சிப்பாகிவிட, கவர்னருக்கு எக்ஸ்டென்ஷன் கிடைத்து விட்டது! 1995-ல், அறுதிப் பெரும்பான்மை இல்லாதபோதும், சேனைக்காரர்களை அழைத்து, அரசு அமைக்கச் சொன்ன பெருந்தன்மைக்கு இது நன்றி நவிலல் என்றும் இனி வர இருக்கும் பிரச்னைக் காலங்களில் (ஏற்கெனவே அடுத்த மேயர் யார் என்பதில் கசமுச; உள்ளுக்குள்ளேயே ஊழல் பெருச்சாளிகள் தொல்லை!) ஆதரவைப் பெறுவதற்கான முன்னேற்பாடு எனவும் விஷயமறிந்த வட்டாரங்கள் முணுமுணுக்கின்றன.

## தூங்குமூஞ்சி நகரம்?

"டில்லியா... ஏழு மணிக்கே டல்லடிக்குமே! பெங்களூரா? எட்டு மணிக்கே தட்டிக் கேட்க ஆளிருக்காது! சென்னையா? ஒன்பது மணிக்கு ஓய்ந்து விடும். எங்கள் மும்பையைப் பாருங்கள்... இரவு 12 மணிக்கும் கலகலக்கும்..." என்று பீற்றிக் கொண்ட காலம் போய்விடும் போலிருக்கிறது! பத்து மணிக்கு மேல் இனி எந்தப் பொது நிகழ்ச்சியும் கூடாதாம்! பாவம், இது தெரியாத இலா அருண், வழக்கம் போல் இரவு பத்து மணிக்கு "வாதாபி கணபதி"யை ஆரம்பிக்க, அடுத்த பாடலை "நீனாம..." என அதிகாரிகள் வற்புறுத்தி 'மங்களம்' பாடவைத்து விட்டனர்! ஒலிபெருக்கிகளெல்லாம் மௌனிக்க, பொருமிக் குமைந்த விசிறிகளை குளிர்ச்சிப் படுத்தவென்று, அதே இடத்தில், அதே டிக்கெட்டில் மறுநாள் 7லிருந்து 10 வரை இசை மழை பொழிந்து தீர்த்தார் இலா! ஆனாலும், இரவு 10 மணிக்கு மேல்தான் மும்பை வாழ்க்கையே ஆரம்பமாகும் என நினைத்துக் கொண்டிருப்பவர்களை எப்படி சாந்தப்படுத்துவது?

## 'விஷு'வல் விருந்து

கலாசார அமைச்சர் பிரமோத் நவால்கர், ஆபாச ஒழிப்பு பிரதிக்ஞையை எடுத்துக் கொண்டு தடுமாறுகிறார். 'ராக்' பாடகர்களெல்லாம், இனி, பாடப் போகும் பாடல்களை முதலிலேயே அரசால் அமைக்கப்பட்ட ஒரு குழுவிடம் சமர்ப்பித்து, அவர்கள் 'ஓகே' செய்த பின்தான் வாயைத் திறக்க வேண்டும் என்றிருக்கிறார். இரட்டை அர்த்தம் ததும்பும் வசனங்களுள்ள நாடகங்களை எல்லாம் சென்சார் செய்தபின் தான் மேடை ஏற்ற வேண்டும் என்கிறார். இந்தி, மராத்தி, குஜராத்தி, ஆங்கிலம்... இப்படி எல்லா மொழியினரும் அமைச்சரை வாட்டி வதைக்கின்றனரே என்று நம் தமிழ்ப் பெண்டிர் அவர் மேல் இரக்கம் கொண்டனர் போலும்! விஷு, தமிழ்ப் புத்தாண்டு விழாவைக் கொண்டாடிய செம்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் மகளிர் அணி, அரங்கேற்றியது 'சிலப்பதிகார'த்தை! மாறுவேடப் போட்டியில் வந்த பாத்திரங்கள் கூட, பக்த மீரா, ஜான்ஸிராணி, சாயி பாபா, நாரதர், ஸ்ரீராமர்... நவால்கருக்கு நிச்சயம் 'விஷு'வல் விருந்தாக இருந்திருக்கும்! ○

— ஜெயஸ்ரீராஜ்

# செவ்வந்தி

## 4

**வே**ண்டாம் என்று தான் சொன்னது மனம். சக்திவேல் அதைச் சமாதானம் செய்தான். மனம் விழுந்து நொண்டியது. அதைக் கைத்தாங்கலாய் நடத்தி, பஸ்ஸில் ஏற்றி ஜன்னலோரம் அமர வைத்து விட்டான். அதற்கு அது தான் வேண்டும். சற்று ஆறுதல் படும். சிலீரென்ற காற்றும், அந்தக் காற்றுப் பட்டதும் விரியும் கனவும், அதை அனுபவிக்கின்ற இன்பத்திற்காவது இந்தப் பயணம் இருக்கட்டும் என்று பட்டது. ஆனால் இந்த முறையாவது, ஏமாற்றம் மிஞ்சாமல் இருக்க வேண்டும். எல்லாம் நழுவி நழுவி சறுக்கிக் கொண்டே போகிறது. சக்திவேல் மதுரைக்குப் பஸ் ஏறினான். இரண்டரை மணி நேரப் பயணம். கனவும் கற்பனையுமாய்க் கழிந்து போயிற்று. கலைந்த தலையும், உலர்ந்த முகமுமாய் இறங்கினான். ராக வாத்தியார் கொடுத்தனுப்பிய விலாசம் குட்ஷெட் தெருவில் இருந்தது. கண்டுபிடிக்கச் சிரமப் படவில்லை.

அது சற்றுப் பெரிய வீடு. இரும்பு கேட் போட்டிருந்தது. ஒருவர் கேட்டின் பானாக் கொக்கியைத் தூக்கிக் கொண்டு வெளியே வந்தார். "சார், கிருஷ்ண மாச்சாரி... வீடு..." என்று இழுத்தான்.

"இருக்கார்... போங்க..." என்று பதில் வந்தது. சக்திவேல் வீட்டிற்குள் நுழைந்தான்.

"சார்..."

"யெஸ்..."

"மிஸ்டர் கிருஷ்ணமாச்சாரி... சார்..."

"நான்தான் வாங்கோ..."

பளபளவென்று பரங்கிப் பழம்! ஊஞ்சலை அடைத்து உட்கார்ந்து இருந்தது. ஊஞ்சல் அசைவிற்கு ஏற்ப உடல் குலுங்கிற்று. நரைத்த தலை. நெற்றியில் வரிவரியாய் விபூதி. நடுவில் சந்தனமும் குங்குமமும். பட்டைக் கரை போட்ட பட்டு வேஷ்டி! சக்திவேல் கடிதத்தை நீட்டினான். கடிதத்தைப் பிரித்துப் படித்தார். ஒருநிமிடம்தான். எங்கோ ஒரு பார்வை. கண்ணை மூடி நெற்றிப் பொட்டில் ஆள் காட்டி விரல் வைத்தார். மீண்டும் விழிப்பு! எங்கோ ஒரு பார்வை.

"ஜானு..." என்று உரக்கக் கூவினார்.

"தோ... வர்றேன்."

"வர வேண்டாம். ஒரு காப்பி கொண்டா!"

காப்பி வந்தது. ஒரு வேலைக்காரப் பெண் எடுத்து வந்தாள். அதை அவரே வாங்கி சக்தியிடம் நீட்டினார்.

"சாப்பிடுங்க தம்பி..."

எடுத்துக் கொண்டான். தயங்கித் தயங்கி அந்தக் கசப்பை உள்ளே இறக்கிவிட்டு, டபராவை ஓசைப்படாது வைத்தான்! அவர் முகத்தைப் பார்த்தான். அவர் மீண்டும் யோசனைக்குத் தாவி விட்டார். கண்கள் மூடி இருந்தன.



ஊஞ்சல் மட்டும் மந்தமாக ஆடிக் கொண்டிருந்தது. ஐந்து நிமிடம் தாண்டியது. இமைகளை மெல்லப் பிரித்தார்.

"காப்பி சாப்பிட்டாச்சா?"

"ஆச்சு சார்..."

"களைப்பாத் தெரியுறது. டிபன் சாப்பிடலாமா?"

"தாங்க்யூ சார். சாப்பிட்டேன்."

"நல்லது. டி.வி.எஸ்லெ லேபருக்கு, டிகிரியே எடுக்க மாட்டா. நீங்க மாஸ்டர் டிகிரி, எடுத்துப்பாளா? மாட்டா. எடுக்கவே மாட்டா. ஆச்சா. வேறு அபிஷியல் போஸ்ட்க்கு

முயற்சி பண்ணலாம். அதுக் கெல்லாம் இப்ப இஞ்சினியரிங் கிராஜுவேட்டுதான் வேணுங் கறா!" என்று கூறினார். ஒரு நிமிடம் மௌனம். "நான் சொல்றது புரியுதோன்னோ..."

"புரியுது சார்..." அவன் நா தழதழத்தது.

"வருத்தம் இல்லையே..."

"இல்லை. சார்."

இருக்கும். இல்லாம எப்படி இருக்கும். எவ்வளவு தூரத்திலே இருந்து வந்திருக்கேள். வருத்தப்பட வேண்டாம். நம்பிக்கையோட போங்க. பகவான் கருணை பண்ணுவான்..."

சரசரவென்று அந்த உருவம் எழுந்து வணங்கியது. சக்திவேலுக்கு சகலமும் அடங்கிற்று. இப்படியெல் லாம்கூட மனிதர்கள் உண்டா? அவனுக்கு வியப்பாயிற்று. அறுபது வயதுப் பழம் இருபத்தெட்டுக்கு எழுந்து நிற் கிறது. இது தந்திரமாகக் கூட இருக்கலாம். வலி இல்லாது கத்தரிக்கும் வித்தையாகக் கூட இருக்கலாம். ஆனால் அவரின் வாய் வார்த்தைகள் ஒருபோது கூட வாளாய் நீளவில்லை. வருடலாகத்தான் வந்தது.

சக்திவேல் வாசலுக்கு வந்தான். வெயில் சுட்டெரித்தது. புழுக்கம் கூடிற்று. புழுங்கிப் புழுங்கி அழுந்தி விடாமல் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். நீண்ட யோச னைக்குப் பின் எங்கே போகலாம் என்று தெளிவாயிற்று. அப்போது அவன் மனத்தில் ஒரு காற்று வீசியது.

**மா**லை –

தெப்பக்குளத்திற்குச் சென்றான். மாரியம்மன் தெப்பக்குளம். எதிரே அவன் படித்த தியாகராசர் கல்லூரி. பஸ்ஸை விட்டு இறங்கியதும் ஒரு கணம் நின்று, அந்தக் கல்லூரியைப் பார்த்தான். விழிப்பு வந்து விட்டது.





பா ர தி பா ல ன்

படம்: யோகா

தூங்கி எழுந்தாற்போல் விழிப்பு. மூன்று வருடத்திற்கு முந்தைய காட்சிகள் முகத்திற்கு எதிரே நின்றன. மெல்ல அருகில் போய் அந்தச் சுவரைத் தொட வேண்டும். உள்ளே சென்று ஹாஸ்டலுக்குச் செல்லும், ஒற்றைப் பிரி பாதையைப் பார்க்க வேண்டும். அந்தப் பாதையில் சதுரம் சதுரமாய் கல் பரவியிருப்பார்கள். அந்த இடுக்குகளில் மண்டியிருக்கின்ற இளம் பச்சைப் புற்களைப் பார்க்க வேண்டும்.

சக்திவேல் குளத்துக்குள் இறங்கினான். தண்ணீர் இல்லை. புல் மண்டிக் கிடந்தது. மாடுகளுக்கு நல்ல தீனி. தூரத்தில் சிறுவர்கள் கிரிக்கெட் ஆடிக் கொண்டிருந்தனர். குளம் தாண்டி, மைய மண்டபத்திற்கு வந்தான். அலை அலையாய் மரங்கள். இலைகள் புகையாய்ப் பரவியிருந்தன. இந்தப் பச்சைக்குள்ளிருந்து ஒரு கோபுரம். அவன் மனசு அதிகம் புழங்கின இடம். பார்வை தொட்ட இடம் ஒவ்வொன்றும் விரிந்து, அவன் நினைவுகளுக்கு வலுவூட்டின.

சக்திவேல் அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டே இருந்தான். பார்க்கப் பார்க்கப் பரவசம். கண்ணெதிரே கையை அசைத்து காலை நகர்த்தி ஒவ்வொரு காட்சியாய் நகர்ந்து போனது. உடம்பு பறந்தது. ஒரு மரத்தில் சரிந்து கொண்டான். தூரத்தில் கல்லூரிக் கட்டடம்.

தெப்பக்குளத்தைப் பார்த்தாற் போல் பாட்டனி டிபார்ட்மெண்ட். இடது ஓரம் தமிழ் டிபார்ட்மெண்ட். இரண்டுக்கும் நடுவில் ஒரு பாதை. ஹாஸ்டலுக்குப் போகும் பாதை. அந்தப் பாதையில் ஒரு சரிவு. அந்த இடத்தில் காற்று அடிக்கடி வித்தை காட்டும். தடதடவென்று சிறு நடையாய்த் துவங்கி, சட்டென்று சுழன்று சுழியிட்டு இலைச் சருகுகளை அள்ளிக் கொண்டு, இடுப்பு உயரத்திற்கு உயர்ந்து ஒரு ஆட்டம் போடும் காற்று. ஒருகணம்தான் அந்த வித்தை. பக்கத்தில் வைகை ஆறு. அதுதான் அந்தக் காற்றுக்கு இத்தனை உற்சாகம்.

இந்தக் கல்லூரியில் படித்துக் கற்றதை விட பார்த்துக் கற்றதுதான் ஏராளம். கல்லூரிப் பாடப் புத்தகங்களை இப்போது நினைத்தாலும் புழுக்கம். ஆனால் இந்தக் கல்லூரியில் புழங்கின இடம் அப்படியல்ல. இன்னும் பூவாகத்தான் மலர்ந்திருக்கிறது. கத்திக் கத்தி எத்தனையோ பாடங்களைச் சொன்னார்கள். ஆனால் சப்தமில்லாது இந்தக் கட்டடம் - இந்தக் கோவில் - இந்தக் குளம், குளத்திற்கு நடுவே இருக்கின்ற மைய மண்டபம். இவை அள்ளிக் கொடுத்த பாடங்கள் இன்னும் அழியவே இல்லை. சொல்லிக் கொடுக்கும் பாடங்களைவிட அள்ளிக் கொடுக்கும் பாடங்களுக்குத்தான் வலு கூடுதல். வெகு நேரம் வரையிலும் பழைய நினைவுகள் அவனைத் துரத்தி அடித்தது. எல்லாம் ரத்த உறவாய் இருந்தது. இப்போது தூரத்து உறவாய்ப் போயிற்று.

இரவு -



செல்வந்தியும், சரஸ்வதி அத்தையும் வாசலில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர். அவர்களுக்குப் பேச என்னதான் இருக்குமோ? பேசுவதற்கு என்ன இல்லை என்பது போலப் பேசுவார்கள். காலை நேரம் எனில் உள் வாசல்படி. இரவு என்றால் வெளிவாசப்படி. எதிரும் புதிருமாய் உட்கார்ந்து விடுவார்கள். ஏதோ ஒத்த வயதுடைய சிநேகிதிகள் பேசிக் கொள்வது மாதிரித்தான் இருக்கும். வாய் வார்த்தைகளிலே ஒருவரை ஒருவர் வாரி அணைத்துக் கொள்வார்கள்.

"அத்தை மணி பார்த்துட்டு வரட்டுமா?"

"வேண்டாம். எங்க பார்ப்பே?"

"தோ முத்து செட்டியார் வீட்டுலெ. வாசல்லே இருக்கு. பெரிய கடிகாரம். அப்படியே போற மாதிரிப் போய் பாத்துட்டு வந்திடுறேன்..."

''மாப்பிள்ளை சினி ஃபீல்டுன்னு சொன்னதை நம்பி ஏமாந்துட்டோம்!''

''ஏன்?''

''தியேட்டர் வாசல்ல பிளாக் டிக்கெட் விக்கிறாராம்!''

— சக்தி சரவணன்

"வேண்டாம். ஒன்பது இருக்கும்."

"ஒன்பதுக்கெல்லாம் வந்திடும்னு சொன்னீங்க..."

"அப்படித்தேன் சொன்னான். அங்க எப்படியோ..."

"கிடைச்சிடுமா? அவருக்கு இந்த வேலை கிடைச்சிடுமா?"

"தெரியலை செவ்வந்தி. ராசு வாத்தியார் சொன்னார்னுதேன் போனான். இனி எப்படியோ! பாவம் அவனும் தெற்கே வடக்கேனு அலைஞ்சுக்கிட்டுத்தேன் இருக்கான்."

"என்ன வேலையாம்?"

"தெரியலைம்மா. ஏதோ கம்பெனின்னு சொன்னான்."



"பிரைவேட்டா, கவர்மெண்ட்டா?"

"ராசு வாத்தியாரைத்தேன் கேக்கணும்."

"பிரைவேட்டுனா வேண்டாம் அத்தை. கவர்மெண்ட்டுனாத்தேன் பார்க்கணும். நம்ம சுப்பு பிள்ளை தெரியுமா? அவர் மவன் இவரு கூடத்தேன் படிச்சதாம். எங்கயோ கோயமுத்தூர் பக்கம் வேலை கிடைச்சதாம். தனியார் கம்பெனிதேன். ஒரு வருஷம்தேன் வேலை. அதுக்குள்ளாறே வேண்டாம்னு அனுப்பிட்டாங்களாம். அதான் தனியார் கம்பெனின்னா வேண்டாம். கவர்மெண்ட்டுனாத்தேன் நிம்மதியா இருக்கலாம்."

"நான் என்னத்தைக் கண்டேன்டியம்மா! நீ சொல்லு..."

"அவருகிட்டயா?"

"சொல்வேன்."

"ஐய்யயோ..."

செவ்வந்தி உதட்டைக் கடித்து கையை உதறினாள்.

"இவனுக்கு எங்கனா ஒரு வேலை கிடைச்சிட்டாப் போதும். எங்க பாடு எப்படியோ, பிழைச்சுப்போம். அவன் ஒரு நல்ல இடத்துக்குப் போயிடணும்."

"அத்தை..."

"ம்"

"ஒண்ணு சொல்லட்டுமா?"

"இது என்ன கேள்வி?"

"எனக்கு மாப்பிள்ளைப் பார்த்து பேசி முடிச்சிட்டாங்கன்னு சொல்றேன்! பேசாமலே இருக்கீங்க?"

"மகிழ்ச்சியில குரலே எழும்பலே, மாலா!"

— தாரை அருள்ராஜ்

"அவருக்கு ஒரு நல்ல வேலை கிடைச்சுட்டா நான் மகமாயிக்கு – வீரபாண்டி மகமாயிக்குத் தீச்சட்டி எடுக்கிறதா வேண்டியிருக்கேன்."

சரஸ்வதி அத்தை சடக்கென்று திரும்பினாள். செவ்வந்தியை ஒரு கணம் பார்த்தாள். ஊடுருவும் பார்வை. இருளில் அவள் முகம் தெளிவில்லை. சரஸ்வதி அத்தைக்குப் பொறுக்க முடியவில்லை. செவ்வந்தியின் கையை வாரி எடுத்தாள். தன் நெஞ்சோடு சேர்த்துக் கொண்டாள். சரஸ்வதி அத்தையின் நெஞ்சுத் துடிப்பு, செவ்வந்தியின் கைக்குத் தாவிற்று. எதிர்வீட்டு ஜன்னல் திறந்தது. அப்போது சின்ன வெளிச்சம் சிதறியது. அந்த வெளிச்சத்தில் சரஸ்வதி அத்தை செவ்வந்தியின் முகத்தைப் பார்த்தாள். அவள் வெட்கத்தையும் வேதனையையும் ஒரு புன்சிரிப்பில் புதைத்து விட்டாள். பிற்பாடு இருவரும் ஒன்றும் பேசிக் கொள்ளவில்லை. இருவரும் சூனியத்தையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

"செவ்வந்தி..."

"ஏய்! செவ்வந்தி..."

"..............."

"இதா புள்ள, எத்தனை வாட்டி கூப்பிடுறது! காதுல ஏறலையா!" என்று ஒருத்தி தூங்கும் குழந்தையைத் தோளில் சுமந்து கொண்டே வந்தாள்.

"எதுக்கு இப்படிக் கத்துறே..."

"உங்கம்மா கூப்பிடுது..."

"வர்றேன்னு சொல்லு..."

அவள் சிறிது நேரம் காத்திருந்து விட்டு வெறுமனே திரும்பிப்



''சாமி, பொண்டாட்டி படாத பாடு படுத்தறா! எப்படி சமாளிக்கிறது? நீங்கதான் வழி சொல்லணும்!''

''அது தெரிஞ்சா நான் ஏனப்பா இங்க வந்து இப்படி உட்கார்ந்திருக்கேன்...?''

— ந. செந்தில்குமார்



**"இந்தக் கோடைக்கு ஊட்டி போகலாம்னு நான் சொல்றேன். கொடைக்கானல் போகலாம்னு என் மனைவி சொல்றா."**

**''எப்ப கொடைக்கானல் போகப் போறீங்க?''**

**— என்.வி.ரமணி**




''பால் விலை ஏறிப் போச்சு, ஆனா பால்கோவா விலையை மட்டும் ஏன் ஏத்தலை?''

''இது பால் விலை ஏறும் முன் செய்தது சார்...''

— ராதா வாசுதேவன்

போனான்.

''சாப்பிடலையா செவ்வந்தி?''

''பசி இல்லை அத்தை...''

''எங்க வீட்டுலெ சாப்பிடேன்.''

''வேண்டாம்.''

தெரு முனையில் காலடி சப்தம். செவ்வந்திக்குத் தெளிவாகிவிட்டது. சக்திவேல்தான். இருளில் முகம் தெரியவில்லை. காலடி ஓசை நெருங்கிற்று. செவ்வந்தி எழுந்து கொண்டாள். செவ்வந்தியைப் பார்த்ததும் அவன் நடை தளர்ந்தது. இது வீசிப் போட்ட நடையில்லை. செருப்பை உதரும்போது மெல்ல அவன் முகத்தைப் பார்த்தான். அவள் தலை கவிழ்ந்தது. இருப்பினும் அந்தக் குறுகுறுப்பும் ஆவலும் அவளைத் தின்றது.

''சாப்பிடுறீயாப்பா?'' - என்றாள் அம்மா.

''ம்'' என்றான்.

செவ்வந்திக்குப் பயம். எங்கே படபடவென்று மாடி ஏறி விடுவாரோ என்ற பயம். அவன் நடையில் உள்ள மரப் பெஞ்சில் உட்கார்ந்தான். செவ்வந்தி இன்னும் வாசல் இருட்டில்தான் நின்று கொண்டிருந்தாள். அவன் ரகசியமாகத் தலையை உயர்த்தி இருளில் அவள் முகத்தைத் தேடினான். அதற்குள் அடுக்களையில் இருந்து அம்மா வந்து விட்டாள்.

''வா. செவ்வந்தி...''

''காலையிலே வர்றேன்.''

''சும்மா வா. வந்ததும் போகலாம்.''

செவ்வந்தி அவனைப் பார்க்காமலே நடைக்கு வந்து விட்டாள். சரஸ்வதி அத்தை நடை வாசலில் நின்றிருந்தாள். செவ்வந்தியும்கூடப் போய் நின்று கொண்டாள். "போன காரியம் என்னவாயிற்று?" என்று கேட்க வேண்டும்போல் பரபரப்பாயிற்று. கேட்க முடியவில்லை. மனத்தில் தைரியத்தைத் திரட்டினாள். அந்தக் கேள்வியைப் பார்வையிலே பதித்து துணிந்து அவனைப் பார்த்தாள்.

அதற்குள் வாசலில் ஒரு குரல். "செவ்வந்தி... செவ்வந்தி..." என்று விடாமல் கூவிற்று. அவள் முகத்தில் பதற்றம் தொற்றிக் கொண்டது. அந்தக் குரல் பிடிவாதமாய் இருந்தது. போக மனமில்லாது, படியிறங்கினாள். சக்திவேல் அவள் போன திசையையே பார்த்துக் கொண்டிருந்தான்.

(தொடரும்)







1998 மே 3
வெகுதான்ய சித்திரை 20
மலர் : 56
இதழ் : 40


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## அதிரடி அறிக்கைகள்; அடாவடிக் கடிதங்கள்!

'பூட்டா சிங், ஜெத்மலானி, ஹெக்டே முதலான 'கறை படிந்த' அமைச்சர்களை உடனடியாக நீக்குங்கள்; இல்லாவிட்டால் சேடப்பட்டி முத்தையாவை மீண்டும் அமைச்சரவையில் சேர்த்துக் கொள்ளுங்கள்...' என்று பிரதமருக்குக் கடிதம் எழுதுகிறார் ஜெயலலிதா! அபத்தத்தின் உச்சம் என்பது இதுதான்!

அரசாங்கத்திலோ அமைச்சரவையிலோ, கறைபடிந்தவர்களுக்கு இடம் தரப்படக் கூடாது என்பதை நாமும் ஒப்புக் கொள்கிறோம். ஆனால், சேடப்பட்டியை மீண்டும் சேர்த்துக் கொள்வதன் மூலம் அமைச்சரவை புனிதமாகிவிடப் போகிறதா!

அரசியல் தூய்மை, பொது வாழ்வில் தூய்மை என்கிற கொள்கை அடிப்படையில் சேடப்பட்டியின் ராஜினாமா கோரப்படவில்லை என்பது தெளிவாகவே தெரிகிறது. பிரதமரை மிரட்டிப் பணிய வைப்பதற்காக ஜெ அண்ட் கோ திட்டமிட்டு நடத்திய சதிதான் இந்த ராஜினாமா!

கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் பரதன் சொல்வது போல், அ.தி.மு.கவுடன் சந்தர்ப்பவாதக் கூட்டணி அமைத்துக் கொண்டதற்காக பி.ஜே.பி. தண்டனையை அனுபவித்துக் கொண்டிருக்கிறது!

ஆட்சியில் நீடிக்க வேண்டும் என்ற கட்டாயத்தில், ஜெயலலிதா இழுத்த இழுப்புக்கெல்லாம் பி.ஜே.பி தலைவர்கள் ஓடி ஆடிக்கொண்டிருக்கிறார்கள்.




தமிழக அரசை டிஸ்மிஸ் செய்ய வேண்டும் என்கிறார் ஜெ. உடனே மாநில சட்ட ஒழுங்கு நிலைமையை ஆராய ஒரு குழுவை அனுப்புகிறது உள்துறை அமைச்சகம். அக்குழுத் தலைவர் தமிழகத்துக்கு நற்சான்றிதழ் கொடுத்துவிட்டாரே என மீண்டும் ஜெயலலிதா 'லபோதிபோ' என்று அடித்துக்கொள்ள, குழுவுக்குத் தலைமை வகித்த அதிகாரி அசோக்குமாருக்குப் பணிமாற்றம்!

மற்றொரு குழு மீண்டும் அனுப்பப்படும் என்கிறார் அத்வானி. எப்படியாவது, 'தமிழ்நாட்டில் சட்டம் ஒழுங்கு மோசம்' என்று சான்றிதழ் தயாரித்துக் கொடுத்துவிட வேண்டும் என ஜெயலலிதா வெளிப்படையாகக் கேட்காத குறைதான்!'' அதை 'தங்கள் சித்தம் என் பாக்கியம்' என்று அத்வானி சிரமேற்கொள்ளாத குறைதான்!

இத்தனைக்கும் மௌன சாட்சியாகவே இருக்கிறார் பிரதமர். ஜெயலலிதாவின் ரசனைக் குறைவான நடவடிக்கைகளுக்கு அவரால் அணைபோட முடியவில்லை. தமது அமைச்சரவையினரைக்கூட அவரால் அடக்க முடியவில்லை!

ஜெயலலிதா தமது 'சுத்திகரிப்பு' நடவடிக்கைகளில் தீவிரம் காட்டி, ஹெக்டே, ஜெத்மலானி, அத்வானி, முரளி மனோகர் ஜோஷி என ஒவ்வொருவராய் வீட்டுக்கு அனுப்பிவிடலாம், தமது விருப்பப்படியும் தம்மைத் திரை மறைவிலிருந்து இயக்கி வரும் சூரர் சாமி விருப்பப்படியும் மத்திய அமைச்சரவையை மாற்றி அமைத்துக் கொள்ளலாம், அதன் மூலம் தம் பேரில் மத்திய அரசு பதிவு செய்துள்ள வழக்குகளுக்கு எள்ளும் தண்ணீரும் தெளித்துவிடலாம்...! ஏற்கெனவே, அ.தி.மு.க சார்புடையவர்களை அரசு வழக்கறிஞர்களாக நியமிப்பது, நீதிபதி மாற்றம் என்று காரியம் கனஜோராக நடக்கிறது.

பிரதமரை மேலும் மிரட்டி தமிழகத்தில் தி.மு.க. ஆட்சியை டிஸ்மிஸ் செய்யாமல், ஜனாதிபதி ஆட்சியைக் கொண்டு வர வற்புறுத்தலாம். அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு மாநில அளவில் தம் பேரில் பதிவாகியுள்ள வழக்குகளையும் பரணில் தூக்கிப் போட்டுவிடச் செய்யலாம்.

அ.தி.மு.க ஆதரவை நம்பி பி.ஜே.பி ஆட்சி இருக்கும்வரை இத்தனை காரியங்களும் நடக்கக்கூடியவையே! ஆனால், இவ்வளவும் நடந்து முடிந்த பிறகு தேர்தல் என்பதாக மீண்டும்




ஒன்றை ஜெயலலிதா சந்தித்தாக வேண்டும்.

அந்த பலப்பரீட்சை நடைபெறும்போது அ.தி.மு.கவின் ஆதரவு என்றாலே பிற கட்சியினர் அலறிக் கொண்டு ஓடப் போகிறார்கள்! தனித்துப் போட்டியிட்டு ஜெயிக்கும் நம்பிக்கையுடன் ஜெயலலிதா இருக்கலாம். ஆனால் வாக்காளர்களை அவ்வளவு சுலபத்தில் ஏமாற்ற முடியாது. நாளொரு அதிரடி அறிக்கை, பொழுதொரு அடாவடிக் கடிதம் என்று வெளியிட்டு வரும் ஜெயலலிதாவின் இரட்டை வேடத்தை அவர்கள் எளிதில் புரிந்து கொண்டு நிராகரித்து விடுவார்கள். அப்போது, சுப்ரமண்யம் சுவாமி உட்பட, ஒருவரது அனுதாபத்தையும் ஜெ பெற முடியாது!

இது ஒருபுறமிருக்க, தமிழகத்திலும் சரி, மத்தியிலும் சரி, இன்னொரு தேர்தலை மீண்டும் நடத்துவது பொருளாதார ரீதியில் நாட்டுக்குப் பெரிய சுமை. மக்களுக்கும் நம்பிக்கை இழப்பு உண்டாகும். உலக நாடுகளிடையிலேயோ, நமக்குப் பெரிய தலைகுனிவு!

இதையெல்லாம் உத்தேசித்து, ஜெயலலிதா அளிக்கும் இருபத்தேழு உறுப்பினர் ஆதரவை, வாஜ்பேயிக்கு வேறு கட்சியினர் அளிக்க முன் வர வேண்டும். உதாரணத்துக்கு த.மா.காவும் தி.மு.கவும் மத்திய அரசுக்கு தேசிய செயல் திட்டத்தின் அடிப்படையில் மட்டுமே ஆதரவு தர முன்வருமேயானால், ஐ.மு.வைச் சேர்ந்த வேறு சில கட்சிகளும் அதே பாதையில் தொடரக் கூடும். பி.ஜே.பியின் தேசிய செயல்திட்டத்தினுள் தீவிரவாத அம்சங்கள் நுழையாமல் பாதுகாப்பு அரண் அமைக்கவும் இக்கட்சிகளால் இயலும்.

ஆனால், இந்தப் பாதையில் இந்திய அரசியல் திசை திரும்ப வேண்டுமானால், அதற்கான முதல் முயற்சி பிரதமரிடமிருந்துதான் வரவேண்டும். ஜெயலலிதாவையும் அவரது அடாவடி ஆதரவையும் துணிந்து உதறித் தள்ள அவர் தயாராக வேண்டும். அப்படி அவர் செய்தாரானால் இதர கட்சிகளின் நன்மதிப்போடு கூடிய ஆதரவைப் பெறலாம்.

மாறாக, இப்போது இருப்பது போல் மௌன சாமியாக, எடுப்பார் கைப்பிள்ளையாக வாஜ்பேயி தொடர்ந்தால், மத்தியில் ஆட்சியே நடைபெறாது; அரசிடம் அதிகாரிகளின் நம்பிக்கை உருக்குலைந்து போகும்; பி.ஜே.பி கட்சியின் கட்டுக்கோப்பும் ஆட்டம் கண்டு விடும்; ஜெயலலிதாவின் அழிச்சாட்டியங்கள் சகிக்க முடியாத எல்லைகளைத் தொடும்!

ஹோம் அலோன் – 3 படம் சென்னையைக் கலக்கிக் கொண்டிருக்கிறது. வீட்டில் தனியாக விடப்பட்ட சிறுவன் அலெக்ஸ் திரையில் செய்த சாகசங்களை எல்லா சிறுவர்களாலும் நிஜ வாழ்க்கையில் செய்ய முடியுமா?! சில வீடுகளில் வேலைக்குப் போகும் பெற்றோர் கோடை விடுமுறையில் தங்கள் மகனை வீட்டில் தனியே விட்டு விட்டு வெளியே செல்ல வேண்டிய கட்டாயம் ஏற்படக்கூடும். அந்த நிலையில் பெற்றோர் கவனத்தில் கொள்ளவேண்டிய சில விஷயங்கள் :



# இது

- ஓரளவாவது விவரம் தெரிந்த குழந்தையாக – அதாவது பன்னிரண்டு வயதாவது நிரம்பியவனாக இருந்தால் மட்டுமே தனியாக விட்டு விட்டுப் போகலாம்.
- வெளியே கிளம்பும்போது, "வீட்டைத் திறந்து வச்சிட்டு எங்கேயாவது போயிடாதே ஆனந்த்" என்றோ, "வீட்டில் தனியா இருக்கோம்கிற பொறுப்பு இருக்கட்டும் ரம்யா" என்றோ ஊரே கிடுகிடுக்கும்படி கத்தித் தொலைக்க வேண்டாம்.
- சிறுவன் தனியாக இருப்பது தெருவுக்கே தெரியக்கூடாது என்பது எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவசியம், நமக்குத் தெரிந்த, அக்கம் பக்கத்திலுள்ள ஒரு குடும்பத்திற்காவது

# ஹோம் அலோன்-4

இந்த விஷயம் தெரிந்திருக்க வேண்டுமென்பது. முடிந்தபோது அவர்கள் வந்து கண்காணிக்க வாய்ப்பு உண்டு.

● உங்கள் தொலைபேசி எண்களை, பளிச்சென்று ஓரிடத்தில் எழுதி வைக்க மறக்க வேண்டாம். சிறுவனுக்கு இந்தத் தொலைபேசி எண்கள் ஏற்கெனவே தெரிந்திருந்தால் கூட, ஓர் அவசரம் எனும்போது அது மறந்து விட வாய்ப்பு உண்டு.



● தேவைப்படும் தின்பண்டங்களை அவன் கைக்கெட்டும் தூரத்தில் வைத்துவிட்டுச் செல்லுங்கள். "கடையிலே ஏதாவது வாங்கிச் சாப்பிடு" என்ற கரிசனத்தோடு காசைக் கொடுக்கவும் வேண்டாம். கடைக்குப் போகும்போது கதவை அவன் சரியாகப் பூட்டாமல் போய் விபரீதம் நடக்கவும் வேண்டாம்.

● போரடிக்காமல் பொழுது போக்க சிறந்த வழி அவனுக்குப் பிடித்த புத்தகங்களை வாங்கியோ, இரவல் வாங்கியோ கொடுத்து விடுவது. இல்லாவிட்டால் இருக்கவே இருக்கிறது டி.வி.

● வாசலில் க்ரில் கேட் இருந்தால் அதை உள்தாழ்ப்பாள் போட்டுக் கொள்வதோடு நிற்காமல் உள்புறமாக அந்தக் கதவைப் பூட்டிக் கொள்ளவும் சொல்லுங்கள். அதே சமயம் அப்படிப் பூட்டியபிறகு உள்ளே எந்த அறைக்குள்ளும் சென்று (பாத்ரூம், டாய்லெட் உட்பட) தாளிட்டுக் கொள்ள வேண்டாம் என்பதையும் வலியுறுத்துங்கள். திறக்க முடியவில்லையென்றால் திண்டாட்டம்.

● வீட்டில் தொலைபேசி இருந்தால் ஒரு மணி நேரத்துக்கு ஒருமுறை தொடர்பு கொண்டு பேசுங்கள். யாராவது புதியவர்கள் ஏதோ உள்நோக்கத்துடன் வீட்டைச் சுற்றி நடமாடுவது போல் தோன்றுவதாக சிறுவன் கூறினால், உங்கள் வீட்டுப் பகுதியில் உள்ள உங்களுக்குத் தெரிந்த யாருக்காவது போன் செய்து என்னவென்று கவனிக்கச் சொல்லுங்கள்.

● சில முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளையும் எடுத்துச் சொல்ல வேண்டியது அவசியம். உதாரணம் : காஸ் லீக்காகிக் கொண்டிருப்பது போல் தோன்றினால் என்ன செய்வது (ஜன்னல் திறப்பு, அந்தப் பகுதியிலுள்ள எந்த ஸ்விட்சையும் போடவோ அணைக்காமலோ இருப்பது – இந்த மாதிரி). அபாயமுள்ள எந்தச் செயலையும் செய்யாமல் இருப்பது. (பந்தைப் பரணில் போட்டு விட்டால் அதை எடுக்க முயற்சி, லேசாக மக்கர் செய்யும் எலெக்ட்ரானிக் கருவிகளை மைனர் ரிப்பேர் செய்ய முயற்சி போன்றவை)

● சக சிறுவர்களோடு வீட்டுக்குள்ளே ஏதாவது விளையாட்டில் ஈடுபடலாம். ஆனால் தனியாக இருக்கும்போது முன்பின் தெரியாத சிறுவர்களைக் கூட வீட்டுக்குள் அனுமதிக்கக் கூடாது என்பதையும், தெரிந்த சிறுவர்களோடு ஆடும்போது கூட வீட்டுக்குள் மறக்காமல் தாள்போட்டுக் கொள்ள வேண்டும் என்பதையும் வற்புறுத்துங்கள்.

— குல்லூ

# பொது நூலகத்துறை: ஊழியரா! ஊழலரா?!

நூலகங்களை அறிவின் ஜன்னல், கதவு, கூரை, மொட்டை மாடி என எப்படியெல்லாமோ கவித்துவமாக வர்ணிக்கிறார்கள். ஆனால் இன்றைக்குப் பொது நூலகத்துறை இயங்கும் விதத்தை நேரில் வந்து பாருங்கள். ரத்தக்கண்ணீர் வரும் என்று நம்மிடம் சொன்னார்கள் சில நூலகத்துறை ஊழியர்கள். விசாரிக்கப் புறப்பட்டோம்.

தமிழ்நாட்டில் மொத்தம் ஆயிரத்தி ஐந்நூறு அரசுப் பொது நூலகங்கள் உள்ளன. கிட்டத்தட்ட இரண்டாயிரம் ஊழியர்கள். கடல் போலக் குவிந்திருக்கும் பல்வேறு துறைகள் சம்பந்தப்பட்ட இலட்சக்கணக்கான நூல்கள். பல்லாயிரக்கணக்கான வாசகர்கள். ஆனால் நிர்வாகம்?

"மக்களோடு நேரடியாகச் சம்பந்தப்பட்ட இத்துறையில் பணியாற்றுபவர்களுக்குப் பொது மக்களிடமும் சரி; மேலிடத்திலும் சரி- கெட்ட பெயர்தான் எப்போதும் நிரந்தரம். காரணம், ஆர்வமாக நூல்களைத் தேடி வருகிறவர்களுக்கு முழுமையாக உதவ இயலாத நிலையில் எங்கள் கரங்கள் கட்டப்பட்டுள்ளன. புனிதமான இத்தொழிலில் ஆர்வமாக ஈடுபட இயலாத வகையில் ஆயிரக்கணக்கான நூலகர்கள் மனச் சோர்வு கொண்டுள்ளனர். எங்களுக்குச் செய்யப்பட வேண்டிய நியாயமான உதவிகள் எதுவுமே அரசால் செய்யப்படவில்லை. நிர்வாகம் எங்களை மிகவும் பழிவாங்குகிறது" என்று எடுத்த எடுப்பில் குமுறிக் கொட்டினார் திருவான்மியூர் அரசுப் பொது நூலகத்தில் நூலகராக உள்ள சேவியர். இவர், பொது நூலகத்துறை அலுவலர்கள் ஒன்றியத்தின் தலைவரும் கூட.



சேவியர்

விஷயம் இதுதான். அரசுத் துறையில், பத்து வருடங்கள் தொடர்ந்து பணியாற்றினால் ப்ரமோஷன் தரப்பட வேண்டும் என்று அரசு ஆணையே உண்டு. அநேகமாக எல்லா அரசுத் துறை நிறுவனங்களும் இந்த ஆணையைப் பின்பற்றி, தமது ஊழியர்களுக்கு அவரவர் பணிக்கால சேவை அடிப்படையில் பதவி உயர்வும் சம்பள உயர்வும் அளித்து வருகிற போது, பொது நூலகத் துறை மட்டும் இந்த விதியை விடாப்பிடியாகப் பின்பற்ற மறுத்து வருவதாகச் சொன்னார்கள். நாம்

●●

**முதலமைச்சரின் வீட்டுக்கே நேரில் சென்று அவரது உதவியாளரிடம் மனு கொடுத்துவிட்டு வந்தோம். அதற்கும் பதில் இல்லை.**

●●





சந்தித்த பல நூலகர்கள். (பாதுகாப்பு கருதிப் பலரும் தம் பெயர் இடம்பெற வேண்டாம் என்று கேட்டுக் கொண்டார்கள்.)

கடந்த முப்பது வருடங்களாக, மூன்றாம் நிலை நூலகர்களாக இருப்பவர்கள் (Grade - 111) மூன்றாம் நிலையிலேயும் இரண்டாம் நிலையில் உள்ளவர்கள் அதே நிலையிலேயும் இருக்கிறார்கள்.

சுமார் 500 க்ரேடு-3 நூலகர்கள், தமக்கான பணி மற்றும் சம்பள உயர்வு கோரி ஆண்டுக் கணக்காகப் போராடி வருகிறார்கள்; பயனில்லை!

"போராட்டமென்றால் சாதாரணமாக இல்லை. எங்களது நியாயமான கோரிக்கைகளை வலியுறுத்திப் பலமுறை மனுக் கொடுத்தோம். எங்கள் சங்கம் மூலம் தீர்மானம் போட்டு, உண்ணா விரதம் இருந்து பார்த்தோம். பலனில்லை. 26.3.98 அன்று செங்கல்பட்டில் மாநில செயற்குழுவைக் கூட்டி முதல்வருக்கும் கல்வித் துறைச் செயலாளருக்கும் ஒரே சமயத்தில் ஆயிரக் கணக்கான தந்தி அனுப்புவது என்று தீர்மானித்து, அப்படியே அனுப்பினோம். அதற்கும் பலனில்லை. முதலமைச்சரின் நேரடி கவனத்துக்கு இப்பிரச்சனையைக் கொண்டு போகும் விதமாக அவர் வீட்டுக்கே நேரில் சென்று அவரது உதவியாளரிடம் நானே மனு கொடுத்துவிட்டு வந்தேன். அதற்கும் பதில் இல்லை. கல்வித் துறையின் கீழ்தான் நூலகத் துறை இயங்குகிறது என்பதால் கல்வி அமைச்சர் அன்பழகனையும் அணுகினோம். 'எல்லாம் சட்டப்படி நடக்கும்' என்று சொல்லி அனுப்பி விட்டார். சட்டத்தை மீறி எதுவும் செய்ய வேண்டாம். சட்ட விதிகளுக்கு உட்பட்டு எங்களுக்குத் தரவேண்டிய நியாயமான பணி உயர்வைத் தந்தாலே போதும். அதை ஏன் தர மறுக்க வேண்டும்?" என்று கேட்டார் சேவியர்.



●●

**கல்வி அமைச்சர் அன்பழகனை அணுகினோம். 'எல்லாம் சட்டப்படி நடக்கும்' என்று சொல்லி அனுப்பிவிட்டார்.**

●●

இப்பிரச்னையை, கோர்ட்டுக்கும் எடுத்துப் போயிருக்கிறது இவர்களது ஒன்றியக் குழு. இரு தரப்பும் விசாரிக்கப்பட்டு, 'நூலகர்களுக்குப் பணி உயர்வு தராதது தவறு; எட்டு வார காலத்துக்குள் அவர்களுக்கு உரிய நியாயம் வழங்கப் பட வேண்டும்' என்று தீர்ப்பு வெளியாகி இருக்கிறது, சமீபத்தில்.

"ஆனால், தீர்ப்பில் கூறப்பட்ட எட்டு வார கால அவகாசமும் முடிந்துவிட்டது. இன்னும் இந்தக் கோரிக்கையை அலட்சியப் படுத்தித் தான் வருகிறார்கள். எனவே கோர்ட் தீர்ப்பை மதித்து ஏற்காததை சுட்டிக் காட்டி மறு வழக்கும் போடப் போகிறோம்" என்றார்கள் சில நூலக யூனியன் உறுப்பினர்கள்.

இந்தப் பிரச்னை ஒருபுறம் இருக்க, பல நூலகங்கள், நூலகர் இல்லாததால் பெரும்பாலும் மூடியே கிடக்கின்றன- இது சென்னையைக் காட்டிலும் வெளி மாவட்டங்களில் மிக அதிகமாகக் காணக்கிடைக்கிறது என்றொரு அதிர்ச்சித் தகவலும் கிடைத்தது.

"நூலக ஊழியர்களின் பணிக்காலம் முடிவடைந்தால் அவ்விடத்துக்குப் புதிய ஆட்களைத் தேர்ந்தெடுத்து நிரப்ப நூலக இயக்ககம் மறுத்து வருகிறது. அரசுத் துறையில் பல இடங்களில் ஆட்குறைப்பு நடந்து வருவதற்கு நிர்வாக ரீதியில் பல காரணங்கள் இருக்கலாம். ஆனால் இது, நூலகத் துறைக்கு ஒத்து வராது. பெரும்பாலான நூலகங்கள், ஒரே ஒரு ஊழியரை மட்டுமே கொண்டு இயங்குகிற நிலையில், அந்த இடமும் காலியானால், உடனே வேறு நபரை நியமிப்பதுதானே நியாயம்? ஆனால் அப்படிச் செய்வதில்லை. இதனால் ஒரே நூலகர், இரண்டு மூன்று நூலகங்களுக்குப் பொறுப்பாளராகக் கூடுதல் பணிச் சுமை பெற வேண்டியதாகிறது. இந்த அவலமும் காலம் காலமாக நடந்து வருகிற ஒன்றுதான்" என்றார் நாம் சந்தித்த செங்கை மாவட்ட நூலகர் ஒருவர்.

ஆனால், நாம் விசாரித்த வரையில், சமீபத்தில் தமிழ் நாட்டில் 140 கிரேட் - 3 நூலகர்களுக்கான தேர்வு நடந்து, ஆட்கள் நியமிக்கப் பட்டிருக்கிறார்கள். சென்னைக்கு மட்டும் பதின்மூன்று பேர். இதனை நூலக ஒன்றியத் தலைவரிடம் சுட்டிக் காட்டியபோது, "இல்லை, மாவட்டத்துக்கு நாலு பேர் என்கிற அளவில் தான் தேர்வு வைத்து, ஆளெடுத்திருக்கிறார்கள். மொத்த காலியிடங்களைப் பார்த்தால் இது வெறும் கண் துடைப்புத்தான் என்பது புரியும்" என்றார்.

ஒரே நூலகர், ஒன்றுக்கு மேற்பட்ட நூலகங்களை கவனித்துக் கொள்வதால் ஏற்படும் ஒரு நூதனமான பிரச்னை பற்றிப் பலர் குறிப்பிட்டார்கள்.

"இதனால் குறிப்பிட்ட எந்த ஒரு நூலகத்தையும் கவனமாகப் பராமரிக்க முடியவில்லை. விளைவு? பல நூல்கள் திருடு போகின்றன. திருடு போகிற நூல்களின் விலையை நூலகரின் சம்பளத்தில்தான் பிடித்துக் கொள்கிறார்கள். ஒரு நூலகர் ட்ரான்ஸ்பர் ஆகும்போதோ, ரிடையர் ஆகும் போதோ அவரது சம்பளத்தில் இந்தத் தொகை பிடிக்கப்படுகிறது. இது என்ன நியாயம்?" என்று கேட்கிறார்கள்.

அசோக்நகர் அரசுப் பொது நூலகர் ஆர். சரோஜா பாயின் கதை, மிக சோகமானது. இவர் ரிடையராகும்போது வைப்புத் தொகைப்

## நூலகத்துறை இயக்குநர் கண்ணன் பேட்டி:

"நூல்களைத் தேர்ந்தெடுக்கும் தேர்வுக் குழுவை எந்த அடிப்படையில் நியமிக்கிறார்கள்? நூல்கள் எந்த அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படுகின்றன?"

"பல துறையைச் சேர்ந்த பேராசிரியர்களைக் கொண்டு ஒரு கமிட்டியை அரசுதான் நியமிக்கிறது. மக்களின் விருப்பம், தேவையைக் கருத்தில் கொண்டு நூல்கள் தேர்வு செய்யப்படுகின்றன. ஒவ்வொரு நூலும் பயனுள்ளதாக இருக்க வேண்டும் என்கிற அடிப்படையில்தான் தேர்வு செய்யப்பட்டு, அறுநூறு பிரதிகள் வாங்கப்படுகின்றன. இதையே கூட இந்த ஆண்டு முதல் 750 பிரதிகளாக உயர்த்த யோசித்து வருகிறோம்."

"மக்களுக்கு எந்தெந்த நூல்கள் பயன்படுகின்றன என்பதை, அவர்களின் விருப்பத்தை நேரில் பார்க்கிற நூலகர்கள்தான் அறிவார்கள். தேர்வுக் கமிட்டியில் நூலகர்களை ஏன் சேர்ப்பதில்லை?"

"மறுபடி சொல்கிறேன். கமிட்டியை நியமிப்பது அரசுதான். நானல்ல! ஆனால் நூலகர்களின் கருத்தையும் கேட்டுத்தான் நூல்கள் வாங்கப்படுகின்றன."

"ஒரே பதிப்பகத்தின் நூல்கள் திரும்பத் திரும்ப வாங்கப்படுவதாகக் கமிட்டிமேல் புகார் சொல்கிறார்களே?"

"இது அபாண்டமான குற்றச்சாட்டு. நாங்கள் ஒரே பதிப்பகத்தின் வெளியீடுகளைத்தான் வாங்குகிறோம் என்றால், நூலகங்களில் மற்ற பதிப்பக நூல்களே இல்லையா? எல்லா பதிப்பகங்களுக்கும் சம உரிமை வழங்கப்படுகின்றன. இப்படியொரு குற்றச்சாட்டை யாரேனும் பதிப்பகத்தாரைச் சொல்லச் சொல்லுங்கள், பார்க்கலாம்!



# 'பணி விதிகள் இல்லாததுதான் குறை!''

சொல்ல மாட்டார்கள். காரணம், பதிப்புத் துறையிலிருந்து அவர்களின் பிரதிநிதியாக ஒருவரையும் நூல் தேர்வு கமிட்டியில் அரசு நியமிக்கிறது.''

''பல நூலகங்கள் ஆளில்லாத காரணத்தால் மூடப்பட்டு இருப்பது பற்றியும் பணி நியமனங்கள் செய்யப்படாதது பற்றிய குற்றச்சாட்டுக்கும் என்ன பதில் சொல்கிறீர்கள்?''

''அப்பாயின்ட்மென்ட் ஆவதில் சற்று முன் பின்னாகச் சில இடங்களில் இருக்கலாமே தவிர, ஆளில்லை என்கிற குற்றச்சாட்டை ஏற்பதற்கில்லை. மாநிலம் முழுவதுமாக 1500 நூலகங்கள் உள்ளன. எது ஒன்றும் ஆளில்லாத காரணத்தால் மூடப்படாத அளவுக்கு கவனமாகவே பார்த்துக் கொள்கிறோம். விடுப்பில் செல்கிற நூலகர்களால் நூலகம் ஒருசில தினங்கள் மூடப்பட்டிருக்குமோ என்னவோ? ஒரு நாள் முன்னதாக அதிகாரிகளுக்குத் தகவல் சொன்னால், அப்படி மூடப்படாமல் மாற்று ஏற்பாடு செய்ய முடியும். இதற்கு நூலகர்கள்தான் ஒத்துழைக்க வேண்டும்.''

''நூல்கள் தொலைந்தால், இழப்பீட்டுத் தொகையை நூலகரின் சம்பளத்தில் பிடிப்பது எப்படி நியாயமாகும்?''

''அதற்கு வேறு வழியில்லை. ஒரு நூலகத்துக்கு நூலகர்தான் பொறுப்பு என்றால், இழப்புகளுக்கும் அவரேதான் பொறுப்பாவார். ஆனாலும் சம்பளப் பிடித்தச் சுமையைக் குறைக்க வேண்டி அரசுக்கு எழுதியிருக்கிறேன்.''

''முப்பது வருடங்களாக இந்தத் துறையில் பணி உயர்வே வழங்கப்படவில்லை; நீங்கள் அதற்கான எந்த முயற்சியும் எடுக்கவில்லை என்று நூலகர்கள் சொல்கிறார்களே?''

''மாநிலம் முழுவதுமாக உள்ள க்ரேட்–1 போஸ்டுகளின் மொத்த எண்ணிக்கை 49. 208 க்ரேடு–2 பதவிகள் தான் உள்ளன. இந்த நிலையில் வருஷம் ஆகிறது என்று இல்லாத இடத்திற்கு யாருக்கு ப்ரமோஷன் தர முடியும்? 500 பேர் கிரேடு – 2 பணி உயர்வுக்குக் காத்திருக்கிறார்கள் என்றால் இருப்பதோ 208 இடங்கள்தாம்! அங்கே தற்சமயம் உள்ளவர்களை என்ன செய்வது? அதனால்தான் அவரவர் பணிக் கால சேவை அடிப்படையில் செலக்ஷன் கிரேடு, ஸ்பெஷல் கிரேடு தந்துவிடுகிறோமே? இருபது வருஷ சர்வீஸ் என்றால்

→

---

பணம் கணிசமாக வரும் என்று நம்பியிருந்தார். ஆனால், அசோக் நகர் நூலகத்தில் அதுவரை காணாமல் போன நூல்களைக் கணக்கிட்டு, நஷ்டத் தொகையாக ரூ. 36,476 ஐ சரோஜா பாயின் சம்பளத்தில் பிடித்து விட்டார்கள்!

சிந்தாதிரிப்பேட்டை நூலகர் சீனிவாசன் ரிடையராகும்போது பிடிக்கப்பட்ட தொகை ரூ. 19,000!

"நூல்களை பத்திரமாகப் பராமரிக்கத் தான் எல்லா நூலகர்களும் விரும்புவார்கள். ஆனால் திருட்டுப் போவதைத் தடுக்கக் கூடுதலாக ஒரு நூலக உதவியாளர் கூட இல்லாத நிலையில் ஒரே ஆள் செக் போஸ்டாக நிற்க முடியுமா? பிற வேலைகளை எப்படிப் பார்ப்பது? ஆனால் காலியாக உள்ள நூலகர் பதவிகளையே நிரப்பாதவர்களிடம் நூலக உதவியாளர்கள் என்று புதிதாக ஒரு அப்பாயின்மெண்ட் கேட்பதால் என்ன பிரயோஜனம்?" என்று பெருமூச்சு விடுகிறார்கள்.

அண்ணா சாலையில் உள்ள மத்திய நூலகத்தில் மட்டும் இப்படி அநியாய சம்பளப் பிடித்தம் நடவடிக்கை இல்லை என்று அங்குள்ள சில ஊழியர்கள் சொன்னார்கள். காரணம், மலை போலக் குவிந்துள்ள நூல்களை 'ஸ்டாக் லிஸ்ட்' எடுக்கவே அங்கே ஆட்களும் நேரமும் இல்லாததால், யாரேனும் ரிடையரானால் குத்து மதிப்பாக ரூ. 2000 பிடித்துக் கொண்டு விடுகிறார்களாம்!

"இதுவெல்லாம் நிர்வாக ரீதியிலான

(முன் பக்கத் தொடர்ச்சி)

ஸ்பெஷல் கிரேடு தருவது உறுதி. இதையே கூட இன்னும் சற்று 'develop' செய்து, நூலகர்களுக்கு மேலும் வசதி கூட்ட அரசிடம் பேசி வருகிறேன்.''

''பணி உயர்வு கட்டாயம் தந்தாக வேண்டும்– அதுவும் எட்டு வாரத்துக்குள் என்று கோர்ட் உத்தரவே வந்துள்ள நிலையில் அதை இன்னும் நீங்கள் செயல்படுத்தவில்லை என்று கூறுகிறார்களே?''

''இதைச் சற்று விளக்கமாகக் கூற விரும்புகிறேன். க்ரேட்–1 நூலகர் பதவி என்பது, பட்டப் படிப்பு முடித்தவர்களுக்கு மட்டும் என்று இருந்து வந்தது. ஆனால் அரசு, ஒரு பட்டதாரிக்கு க்ரேடு–1 பதவி தந்தால், கூடவே ஒரு பட்டதாரி அல்லாதவருக்கும் அப்பதவி அளிக்கப்பட வேண்டும்– அதாவது 1:1 என்ற விகிதத்தில்– என்று ஒரு அரசாணை வெளியிட்டது. இதை எதிர்த்து, பட்டதாரிகளான நூலகர்கள் வழக்குத் தொடுத்தனர். 'இதுவரை பட்டதாரிகள் மட்டுமே க்ரேடு–1 என இருந்து வருவதால், திடீரென்று அதனை மாற்றக் கூடாது' என்பது அவர்களின் வாதம்.

''இந்தத் துறைக்கான– பதவிகளுக்கான பணி விதிகள் இதுவரை கிடையாது. பணி விதிகள் ஏற்படுத்தப்பட்டதும் இந்த அரசாணையைப் பின்பற்றலாம் என்று நீதிமன்றம் சொல்லி விட்டது.

''நாங்கள், பணிவிதிகள் வகுக்கச் சற்று காலம் பிடிக்கும்' என்று பரிசீலனை மனு சமர்ப்பித்திருக்கிறோம். அந்த மனு, கோர்ட்டாரின் பரிசீலனையில் இன்னும் இருக்கிறது. ஒரு முடிவு வராத நிலையிலேயே, வேறொரு சாரார், மறுபடி அந்த 1:1 அரசாணையை அமுல் படுத்தக் கோரி புது வழக்குப் போட்டு, தீர்ப்பு வாங்கினால் நாங்கள் என்ன செய்ய முடியும்? பழைய, நிலுவையில் உள்ள எங்கள் மறுபரிசீலனை மனுவைச் சுட்டிக்காட்டி விளக்கி இருக்கிறோம். முறைப்படி தீர்ப்பு வந்ததும் கட்டாயம் செயல்படுத்தத்தானே போகிறோம்?''

''இத்தனை வருஷங்களாகப் பணி விதிகள் இல்லாமலா ஒரு துறை இயங்கும்?''

''நூலகத்துறையில் அது ஒரு குறையாகத்தான் இருந்து வந்துள்ளது. இத்துறையில் சில நிலைகளுக்கு மட்டும்தான் பணிவிதிகள் உண்டு. அதை மாற்றி, எல்லா நிலை ஊழியர்களுக்குமான பணிவிதிகள் தயாரிக்கப்பட்டு இப்போது அரசுக்கு அனுப்பப்பட்டு விட்டது. விரைவில் இக்குறை தீர்ந்து விடும்!''

''மத்திய நூலகத்தில் மலைமலையாகப் புத்தகங்கள் அடுக்கப்படாமல் குவித்து வைக்கப்பட்டுள்ளதே? ரெகுலராக இங்கே நூல்கள் கணக்கெடுக்கப்பட்டு, வரிசையில் அடுக்கப்படுவதில்லையா?''

''ஒரு வாரம் முன்னதாக வந்திருந்தீர்களென்றால் லட்சக்கணக்கில் புதிய நூல்கள் குவிந்திருந்ததைக் கண்டிருப்பீர்கள். இப்போது வெறும் முப்பதாயிரம் நூல்கள்தான் பாக்கி. வேகமாகச் செயல்பட்டு வருகிறார்கள். விரைவில் இப்பணி முடிந்து விடும்.''

''நாங்கள் பார்த்த வரையில் சிறுவர்கள் நூலகப்பகுதி எங்குமே இயங்காமல் அந்த அறைகள் பூட்டியே வைக்கப்பட்டுள்ளன. இது ஏன்?''

''சில பிரச்னைகள் இருந்தன. அவை இப்போது சீர்செய்யப்பட்டு விட்டன. இங்கே மத்திய நூலகம் உட்பட மாநிலத்தில் அனைத்து சிறுவர் நூலகப் பிரிவும் விரைவில் சிறப்பாக இயங்கும்.'' ●

*பிரச்னைகள். மனம் வைத்தால், பிரச்னைகளைத் தீர்த்து விடலாம். ஆனால், என்ன செய்தால் இந்தத் துறையில், நூல்கள் வாங்குவதில் நடக்கிற ஊழல்கள் தீரும்?" என்று வருத்தம் தொனிக்கக் கேட்டார் சேவியர்.*

*பொது நூலகத் துறையின் சார்பில், ஆண்டுக்குச் சுமார் 2500 நூல்கள் (ஒவ்வொன்றும் 600 பிரதிகள்) வாங்கப்படுகின்றன. இந்த நூல்கள் வாங்குவதில் பயங்கரமாக ஊழல் நடக்கிறது என்று குற்றம் சாட்டுகிறார்கள் பல நூலகர்கள்.*

*பணம் வாங்கிக் கொண்டு, ஒரே பதிப்பகத்தின் நூல்களைத் திரும்பத்திரும்ப வாங்குவது மட்டுமல்ல; ஒரே நூலின் அடுத்தடுத்த பதிப்புகளின் போதும் அவை கேள்வி முறையே இன்றி வாங்கப்படுகின்றன என்கிறார்கள்.*

*அரசு விதிப்படி, ஒரு நூல் வாங்கப் பட்டால், அடுத்த ஐந்தாண்டுகளுக்கு அந் நூல் மறுபடி வாங்கப்படக் கூடாது. ஐந்தாண்டுகள் கழித்து, அந்நூலின் தேவை இன்றியமையாததென்றால் மட்டுமே, மறுபதிப்பு வெளியாகி இருந்தால் மட்டுமே மறுபடி வாங்க இயலும்.*

*இதைச் சுட்டிக்காட்டி சேவியர் பேசவும், நாம் அண்ணாசாலை தேவநேயப் பாவாணர் நூலகத்திலுள்ள நூல்களின் ஸ்டாக் அறைக்குச் சென்று ஆராய்ந்தோம்.*

*எல்லா நூல்களும் அப்படி இல்லை என்றாலும் சில நூல்கள் அடுத்தடுத்த பதிப்புகளின் போதும் வாங்கப்பட்டிருப்பதைக் காண முடிந்தது. (உதா: கழகத்தமிழ் அகராதி, அறிஞர்கள்*

வாழ்வில் சுவையான சம்பவங்கள், தமிழர் நாகரிகமும் பண்பாட்டு முறைகளும் இன்ன பிற)

நூலகத் துறைக்கென்று நூல்கள் வாங்க, அரசு நியமித்துள்ள கமிட்டி ஒன்று உள்ளது. இந்த கமிட்டியில் அங்கத்தினராக உள்ளவர்கள், தமக்கு வேண்டியவர்களின் நூல்களையும் 'அட்ஜஸ்ட்' செய்து கொள்ளும் பதிப்பகங்களின் நூல்களையுமே திரும்பத் திரும்ப வாங்குவதாகப் புகார் சொல்கிறார்கள், நூலகத் துறையைச் சேர்ந்த சிலர்.

"ஒரு நூலகத்தில் எந்தெந்த நூல்கள் அதிகம் படிக்கப்படுகின்றன, எந்த விதமான நூல்கள் யாருக்கும் பிடிப்பதில்லை என்பதெல்லாம், அந்நூலகத்தில் தினம்தோறும் மக்களைச் சந்திக்கிற நூலகர்களுக்குத்தான் தெரியும். ஆனால் இவர்கள் நூல்களைத் தேர்ந்தெடுக்க அமைக்கும் கமிட்டியில் மருந்துக்கும் ஒரு நூலகர் கிடையாது! அப்புறம் நூல் தேர்வு எப்படி உருப்படும்? யாருக்கும் பயனில்லாத குப்பைகள் தான் நிறைய சேருகின்றன" என்றார் தென் சென்னைப் பகுதி நூலகம் ஒன்றின் பொறுப்பாளர்.

இத்தனை பிரச்னைகளைச் சொல்கிறீர்கள். உங்கள் துறை இயக்குநர் ஒன்றுக்குக் கூடவா தீர்வு காணவில்லை? என்று கேட்டோம்.

"எங்கள் இயக்குநருக்கு ஒரே நோக்கம்தான். அது, அமைச்சரிடமும் தலைமைச் செயலக அதிகாரிகளிடமும் நல்ல பெயர் வாங்குவது! பணி உயர்வுக்கான நடவடிக்கையை அவர் எடுக்காததற்கும் ஆளில்லா நூலகங்களுக்கு ஆட்களை நியமிக்காததற்கும் கூட இதே காரணம்தான்! அரசுக்கு இதன் மூலம் ஏற்படக் கூடிய கூடுதல் செலவினங்களை அவர் முனைந்து தடுப்பதாகவும் இருப்பதைக் கொண்டே தன்னால் சிறப்பாகச் செயல்பட முடியும் என்று காட்டுவதற்காகவும்தான் இப்படியெல்லாம் செய்கிறார். எத்தனையோ முறை, அப்பாவி ஊழியர்களுக்காக மனமிரங்கி நடவடிக்கை எடுங்கள் என்று கேட்டுவிட்டோம். ஒரு பதில் இல்லை. வெறுத்துப் போய் விட்டோம். எங்களுக்கு இனி விமோசனமே இல்லை!" என்று அழாத குறையாகப் பேசிய சேவியர், நூலகத்துறைக்கு ஒரு IAS ஆபீசரை இயக்குநராக நியமிப்பதன் மூலம் அனைத்துப் பிரச்னைகளுக்கும் தீர்வு காண முடியும் என்று நூலகர் ஒன்றியம் நம்புவதாகக் குறிப்பிட்டார்.

எப்படி?

இப்போதைய இயக்குநர் மட்டுமல்ல. நூலகத் துறைக்கு மட்டும் காலம் காலமாக ப்ரமோஷன் மூலம் வருகிற அரசு ஊழியர்தான் இயக்குநராக இருந்து வருகிறார். (ஒரே ஒரு முறை– சரியாக ஒரு மாத காலம் வை. பழனிச்சாமி என்கிற ஐ.ஏ.எஸ். ஆபீசர், கூடுதல் பொறுப்பாக இத்துறையின் இயக்குநர் பதவியில் இருந்திருக்கிறார்) அவர்கள் ஒவ்வொரு விஷயத்துக்கும் செகரடேரியட்டில் கைகட்டி நிற்கிறார்கள். சுயமாக முடிவெடுத்துச் செயல்பட அஞ்சுகிறார்கள். 'ஆனால் ஒரு ஐ.ஏ.எஸ். ஆபீசர் அப்படி அல்ல! சுயமாக முடிவெடுத்துச் செயல்படுவார்களே!' என்கிறார்கள்.

தலை சுற்றுகிற அளவுக்குக் குற்றச்சாட்டுகளின் பட்டியல் நீளமாகவே, பொது நூலகத்துறை இயக்குநர் கண்ணனைச் சந்திக்க முடிவு செய்து, அண்ணா சாலையிலுள்ள அவரது அலுவலகத்துக்குச் சென்றோம். நம் காதில் விழுந்த, கண்ணில் பட்ட குறைகளை ஒவ்வொன்றாக முன் வைத்தோம்.

பணி விதிகள் தயாரிக்கப்பட்டதையும் ராஜாராம்மோகன்ராய் நூலக அறக்கட்டளை மூலம் உதவி பெற்று ரூ. ஒரு கோடிக்கு இவ்வாண்டு புதிய நூல்கள் வாங்கியிருப்பதையும் 17 கோடி ரூபாய் நூலக வரியாக வசூலிக்கப்பட்டிருப்பதையும் 148 லட்ச ரூபாய் செலவில் கன்னிமரா நூலகத்துக்குப் புதிய கட்டடம் கட்டி வருவதையும் தமது துறையின் சாதனைகளாகக் கண்ணன் குறிப்பிட்டாலும் முன் சொன்ன எந்த ஒரு பிரச்னைக்கும் தீர்வு சொல்லும் நிலையில் அவர் இல்லை. (காண்க: பெட்டிச் செய்தி)

முதல்வர் தீவிரமாக, உடனடியாக கவனம் செலுத்தாத பட்சத்தில் நூலகத் துறை, நிர்வாக ரீதியில் பாதாளத்துக்குச் சென்றுவிடும் என்பது உறுதி.

கவனிப்பாரா கலைஞர்?

**— ஔரங்கசீப்**

படங்கள்: **ஸ்ரீஹரி**

---

**போட்டி முடிவு — 1**

'செல்வந்தி' மொத்தம் இடம் பெறும் இடங்கள்: 12

சரியான விடை எழுதியவர்களுள் குலுக்கலில் தேர்வாகி பட்டுப்புடைவை பரிசு பெறும் அதிர்ஷ்டசாலி:

**எம். முனுசாமி,**
**43, டி.டி. கார்டன், 3-வது தெரு.**
**செம்பியம் சென்னை — 11.**

---

# சுமி சூப்பர் மார்க்கெட்

பாடறதுக்குன்னே சில பேர் பிறந்திருக்காங்கப்பா. அதுல ஒருத்தர் டி.எம். கிருஷ்ணா! போன புதன்கிழமை அவர் கச்சேரிக்குப் போயிருந்தேன். கும்முனு ஒரு வெண்கலக் குரல். புதுசு புதுசா கற்பனை... நல்ல க்ரிப் இருக்கு.. பார்க்கவும் நல்ல ஜோரா இருக்கார். (பிரசாந்த் கால்ஷீட் கிடைக்காம போயிருந்தா ஷங்கர் ஜீன்ஸ்ல யூஸ் பண்ணியிருக்கலாம்!) இருபத்திரண்டு வயசுதானாம். இன்னும் பத்து வருஷம் கழிச்சு 'டி.எம். கிருஷ்ணா பாணி'ன்னு ஒண்ணு உருவானா ஆச்சர்யமேயில்லே. ஆனா அதுக்கு கிருஷ்ணா இன்னும் திட்டம் போட்டு உழைக்கணும். 'கச்சேரின்றது அங்க ஒரு ராகம் இங்க நிரவல், நாலு கீர்த்தனைன்னு சேர்த்து ஒட்டுப் போடற சமாசாரமில்லே... 'Every concert is a work of art'ன்னு எங்க பாட்டி சொல்லுவாங்க. (பாட்டிங்க இருக்கறது எவ்வளவு சௌகரியம் பாருங்க!) All the best Krishna!

ஒரு ஷார்ட் ஸ்டோரி கலெக்ஷன் படிச்சேன் சமீபத்துல. 'பட்டொளி வீசி'ன்னு தினமணி சப் எடிட்டர் திருப்பூர் கிருஷ்ணனோடது. (கங்கை புத்தக நிலையம், சென்னை - 17.)

படிச்சதும் உடனே தோணினது இதுதான்: 'இவர் ஏன் நிறைய எழுதலை?' ஆழமான உணர்ச்சிகளுக்கு முக்கியத்துவம் குடுத்து, ரொம்ப ஸ்ட்ராங்கான சொற்களைத் தேர்ந்தெடுத்து, வரிவரியா இழைச்ச கதைகள்! ஆர்ப்பாட்டமில்லாத ஸ்டைல், நேச்சுரலா வசனங்கள், அளவோட வர்ணனைகள்... நிறைய சொல்லலாம். ரீஸன்டா வந்திருக்கக் கூடிய நல்ல புஸ்தகங்கள்ல இது முக்கியமான ஒண்ணா இருக்கும்!

நல்ல ஜர்னலிஸம் பத்தி உங்க ஒப்பீனியன் கேட்டிருந்தேன் இல்லை? (முதல்ல கையைக் குடுங்க மாம்பாக்கம் வரதராஜன்! சுமி, நீ எழுதறா மாதிரி சுவாரஸ்யமா இருக்கணும். அதான் நல்ல எழுத்துன்னு எழுதி புல்லரிக்க வெச்சிட்டீங்க! ரெண்டு நாளா பயங்கர ஜலதோஷம்.)

'நல்ல ஜர்னலிஸம்'னா அது கெட்ட ஜர்னலிஸத்துக்கு ஆப்போஸிட். ஹி... ஹி...'ன்னு கடிச்ச கப்பாராயர்புரம் ஜெயத்திருமகனாரே... நறநற!

'பொய் கலக்காத விறுவிறுப்பு. ஆபாசமற்ற நகைச்சுவை. அரசுக்கு ஜால்ரா போடாத பாராட்டு – இதுதான் நல்ல ஜர்னலிஸம்'னு எழுதியிருக்கார் எழுத்தாளர் சுப்ரமணியன் ரவிச்சந்திரன். (ரைட்டர்ஸெல்லாம் என் 'கால'த்தைப் படிக்கறாங்கப்பா!)

'நடக்க முடியாததை நடக்காததாக எழுதுவதும் நடக்கக் கூடியதை நடந்ததாக எழுதுவதும் நடந்தவற்றை நடக்காததாக எழுதாமலிருப்பதும் நடக்காததை நடந்தா



• திருப்பூர் கிருஷ்ணா





# டி.எம். கிருஷ்ணா! திருப்பூர் கிருஷ்ணா!



"தலைவரே... உங்க செல்வாக்கு ரொம்ப மோசமாப் போச்சு!"

"என்னய்யா சொல்ற?"

"நீங்க வெளியிடுற அறிக்கைகள ஜோக்கா கூடப் போட முடியாது; வேணும்னா பணம் தந்தா விளம்பரமா போடறதா சொல்றாங்க!"

— அம்பை தேவா



"என் மனைவியின் ஆவியோட பேசுறேன்னு சொல்லிட்டு, "ஒரு நாள்" முழுசும் அமைதியா இருக்கீங்க?"

"என்னை அவ பேச விட்டாதானே! நாள் முழுசும் அவளே பேசிகிட்டு இருக்காளே!"

— தே. கண்ணன்



"பையன்கிட்ட சீக்கிரம் ஏதேனும் ஒரு வழியில சம்பாதிக்கக் கத்துக்கடான்னு சொன்னது தப்பா போச்சு!"

"ஏன் என்னாச்சு?"

"நான் குளிச்சுட்டு வரதுக்குள்ள என் சட்டைப் பையிலேருந்து பத்து ரூவா சுட்டுட்டான்!"

— எஸ். மகேந்திரன்

எழுதாமலிருப்பதும் நல்ல ஜர்னலிஸம்னு' விகத்தனமா கடிச்சிக் குதறியிருந்தாரு. ஸ்ரீரங்கம் அ. சம்பத். (உங்க ஊர்ல வெயில் ஜாஸ்தியா சார்?)

என்னைக் கேட்டா, பொய் இல்லாம, ஆபாசமா டபுள் பேஜ் படம் போடாம, ஏதாவது ஒரு வகைல படிக்கிறவங்களுக்கு உபயோகமாவோ, உற்சாகமூட்டும்படியாவோ இருக்கணும். தட்ஸ் இனஃப்! ஸாடிலைட் டீவிக்கள் சாப்ட்டுட்டுப் போற காலத்துல பத்திரிகைகள் படிக்கறதுங்கற பழக்கமே குறைஞ்சு போயிட்டு வருது! டீவிக்களால தரமுடியாத சுவாரஸ்யத்தைப் பத்திரிகைகள் தரணும்னு நினைக்கறேன். வாட் டு யூ ஃபீல்?

ஓகே. லெட் மி ஃபினிஷ் வித் எ ஜோக்.

ஜெயில் சிங், ஜனாதிபதியா ஆன சமயம். அவர் பேசின இங்கிலீஷைக் கேட்டு பயந்து போன செகரட்டரிங்க, "ஸார் நீங்க ஒழுங்கா இங்கிலீஷ் பேச முதல்ல கத்துக்கணும்"னு ரிக்வெஸ்ட் பண்ணிக்கிட்டாங்களாம்.

"சரி, என்ன பண்ணணும் சொல்லு."

நம்ம விவேகானந்தா மாதிரி ஒரு கோச்சிங் சென்டர் வாத்தியாரை ஏற்பாடு பண்ணிப் பார்த்தாங்க. ம்ஹூம்!

இதெல்லாம் சரிப்படாதுன்னு ஒரு பெரிய இங்கிலீஷ் ப்ரொபசரை ஏற்பாடு பண்ணாங்க.

மூணு மாசம் ஆச்சு. இம்ப்ரூவ்மெண்டே இல்லை.

ஒரு ஜனாதிபதி பாடம் கத்துக்கற விஷயத்தை சீக்ரெட்டா வெச்சிக்க முடியுமா? விஷயம் அமெரிக்கா வரைக்கும் போயிடுச்சி.

அப்ப அங்க ப்ரஸிடெண்டா இருந்த ஜார்ஜ் புஷ், 'அடடா, எல்லா நாட்டு விவகாரத்துலயும் மூக்கை நுழைக்கறோம். இதுல நுழையாம இருக்கறதா'ன்னு "நான் ஜெயில் சிங்குக்கு இங்கிலீஷ் கத்துத்தரேன்னு" சொல்லிட்டு, அவரை வரவழைச்சு க்ளாஸ் ஆரம்பிச்சாரு.

ஜெயில் சிங்கோட செகரட்டரிகளுக்கு ரொம்ப நிம்மதி. 'கண்டிப்பா நம்மாளு தேறிடுவாரு'ன்னு நம்பினாங்க.

மூணு மாசம் கழிச்சி வாஷிங்டனுக்கு போன் பண்ணி, புஷ் கிட்ட 'என்னாச்சு?'ன்னு கேட்டாங்க.

"மாஃப் கீஜியே. மே குச்நை கர் ஸக்தா"ன்னு பதில் வந்தது! ❍

(தேங்ஸ் டு குஷ்வந்த் சிங்!)

— சுபி

# ஆபத்தில் முடியுமா அம்மாவின் தாக்குதல்!

● அ.இ.அ.தி.மு.க. வட்டாரத்தில் கொஞ்சம் படபடப்பு கூடியிருக்கிறது. "ஒரே சமயத்தில் அம்மா பல முனைகளில் போராடிக் கொண்டிருக்கிறார். போகிற வேகத்தைப் பார்த்தால் நந்தவனத்து ஆண்டியின் கதையாக முதலுக்கே மோசம் வந்து விடுமோ என்று கூட கவலையாக இருக்கிறது!" என்கிறார் ஸீனியர் பிரமுகர் ஒருவர். "வழக்குகளைக் கிடப்பில் போட வேண்டும்; தி.மு.க. ஆட்சியைக் கலைக்க வேண்டும் என்ற எங்களின் இந்த இரு லட்சியங்களை நோக்கி நடை போடுவதற்குப் பதிலாக, திசைமாறி ஊழல் குற்றச்சாட்டுக்கள் விவகாரத்தில் இறங்கி கூட்டணிக் கட்சித் தலைவர்களின் அதிருப்தியைச் சம்பாதித்துக் கொண்டு விட்டோம். ஏற்கெனவே அமைச்சரவையில் பர்னாலா, ஜார்ஜ் பெர்னான்டஸ் ஆகியோர் கலைஞர் மேல் பற்று மிக்கவர்கள். இப்போது ஹெக்டே, ஜெத்மலானி மற்றும் சில பி.ஜே.பி அமைச்சர்களும் எங்கள் மேல் எரிச்சலாக இருக்கிறார்கள். இந்த நிலையில் ஆட்சிக் கவிழ்ப்புக் கோரிக்கை எந்த அளவுக்கு வெற்றி பெறும் என்று தெரியவில்லை" என்கிறார் அவர். கூட்டணிக் கட்சிகளின் ஒருங்கிணைப்புக் குழுவுக்கு அ.தி.மு.க. ஏன் எதிர்ப்புத் தெரிவிக்கிறது' என்ற போது, அவர் அர்த்தமுள்ள புன்னகையை வீசி விட்டுச் சொன்னார்: "எங்கள் தலைவியைப் பொறுத்தமட்டில் அவர் சொல்வதுதான் கட்சியின் வேத(ா) வாக்கு. இப்படியிருக்க 'கூடிப் பேச கருத்தொற்றுமை' என்ற புதிய கலாசாரத்துக்கு அவர் எப்படி ஒப்புக் கொள்வார்?" என்றார் அவர். அப்படியே கமிட்டி போடப்பட்டாலும் கூட்டங்களில் அம்மாவுக்குப் பதில் செடப்பட்டிதான் கலந்து கொள்வாராம். போகிற போக்கைப் பார்த்தால் அம்மாவின் அதிரடிகள் தொடரும் என்கிறது அ.தி.மு.க. வட்டாரம். ஒன்று, தமது அமைச்சர்களை வாபஸ் வாங்குவார் அல்லது பா.ஜ.க. அமைச்சரவையில் புதிதாக அ.தி.மு.க. அமைச்சர்கள் சேர மாட்டார்கள் என்று அறிக்கை விடுவார் என்கிறார்கள்.



● "கலைப்பு ஜுரம்" இன்னமும் தி.மு.க வினரை விட்ட பாடில்லை. "27க்கு மாற்று கண்டு பிடிக்காத வரையில் பயப்படுவதைத் தவிர வேறு வழியில்லை" என்கிறார்கள் அவர்கள். பத்திரிகையாளர்களைப் பார்த்தால், "என்ன சார். கலைச்சிடுவாங்களா?" என்று கவலையுடன் கேட்கிறார்கள். "எங்கள் தலைவரைப் பாருங்கள். அவரே, இந்த விவகாரத்தைக் கொஞ்சம் அடக்கி, சென்டிமென்டாகத்தான் டீல் பண்ணுறார். அவருடைய அரசியல் அநுபவத்தின் காரணமாக, விசித்திரமாகவோ அல்லது அதிரடியாகவோ திடீரென்று நடந்து கொள்ள முடியாது. 'சி.பி.ஐ. வானத்திலிருந்து குதித்தவர்களா' என்று கேட்டார் ஜெ; இது மட்டுமா அவருடைய ஆட்சியில்? எல்.டி.டி.ஈ. கைதிகள் தப்பித்த போதும், புறநகர்களில் தொடர்ந்து கொள்ளைகள் நடந்த போதும் 'மத்திய அரசின் உளவுத் துறைதான் அந்த சம்பங்களுக்குக் காரணம்' என்று சூசகமாய் பழி போட்டார் ஜெ.





• குமார், சின்ஹா

எங்கள் தலைவரால் அப்படியெல்லாம் சொல்லி அரசியல் நடத்த முடிகிறதா? கடமை, கண்ணியம், கட்டுப்பாடு கூட எங்கள் தலைவரின் அரசியலுக்கு இடைஞ்சலாக இருக்கிறது பாருங்கள்!'' என்று நம்மிடம் நொந்து கொண்டார், தென் மாவட்ட எம்.எல்.ஏ. ஒருவர்.

● 'பயங்கரவாதத்தின் காரணமாக ஆட்சிக் கவிழ்ப்பு' என்ற பேச்சுக்களுக்கிடையில் சட்டமன்றத்தில் கோவை விவகாரத்தில் வெள்ளை அறிக்கை தாக்கல் செய்தது மிக்க விவேகமான செயல் என்று பாராட்டுகிறார்கள் கோட்டை அதிகாரிகள். குறிப்பாக 1993லிருந்தே குண்டு வெடிப்புக்கள் துவங்கியதைக் குறிப்பிட்டும் பாகிஸ்தான் உளவாளிகள் நடமாட்டத்தைப் பற்றி மத்திய அரசு குறிப்பாக எந்தத் தகவலும் தரவில்லை என்பதையும், சொல்லியிருப்பது பற்றிச் சிலாகிக்கிறார்கள். பாகிஸ்தானின் ஐ.எஸ்.ஐ. நடமாட்டத்தை ஊன்றிக் கவனித்து வரும் பணியைச் செய்து வரும் பொறுப்பு இந்திய அரசின் 'ரா' (RAW) மற்றும் உளவுத்துறை (I.B.) ஆகியவைகளுக்கு உரியது. ஆட்சிக் கவிழ்ப்பு விவகாரம் கோர்ட்டுக்குச் செல்லும் நிலையில், மத்திய அரசு ஐ.எஸ்.ஐ. நடமாட்டத்தைப் பற்றி அங்கு எதேனும் சொன்னால் அதைச் சந்திக்கவே வெள்ளை அறிக்கையில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளதாம். சட்டம் ஒழுங்கைக் கண்டறிய வந்த அசோக்குமார் கமிட்டி பேச்சுவாக்கில், 'ஒரு ஒயிட் பேப்பர் போட்டு விட்டால் பின்னால் பிரச்னைகளை சுலபமாக சமாளிக்கலாம்' என்று தமிழக அதிகாரிகளிடம் சொன்னதாம். அதன்பின்தான் தமிழக அரசு இந்த விஷயத்தில் சுறுசுறுப்பாக இயங்கியதாகச் சொல்கிறார்கள்.

● நிதித்துறை இணை அமைச்சர் குமாருக்கும், சீனியர் அமைச்சர் சின்ஹாவுக்கும் பனிப்போர் துவங்கி விட்டது. 'மத்திய நேரடி வரி விதிப்பு வாரியத்தின் தலைவராக நான் சொல்லும் நபரைத்தான் போட வேண்டும் என்றார் குமார். ஆனால் பிரதமர் வரை விஷயத்தைக் கொண்டு சென்று தம்முடைய விருப்பத்துக்கு ஏற்றவாறு ஆளைப் போட்டார் - சின்ஹா. அதே போல் ஆறேழு தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகளுக்குத் தலைவர்கள் மற்றும் நிர்வாக இயக்குனர்களை நியமிக்கும் விஷயத்திலும் முட்டி மோதிக் கொண்டிருக்கிறார்களாம். இதற்கிடையில் அ.தி.மு.க. அமைச்சர்களை ஒருங்கிணைத்து, தங்களுக்கு அதிகபட்ச "நன்மைகளைப்" பெற்றுக் கொள்ள சேடப்பட்டியார் ஒருங்கிணைப்பாளர் போல் செயல்பட்டுக் கொண்டிருக்கிறாராம். டெல்லிப் பத்திரிகை ஒன்றில் அ.தி.மு.க. அமைச்ரசர்களின் வில்லங்கமான வேலைகளை அம்பலப்படுத்துவது பி.ஜே.பி.தான் என்று அ.தி.மு.க. வட்டாரம் சொல்கிறது! ○

— திலப்பா

## காதில் விழுந்தவை:

# கல்கி விடுமுறை மலர் '98



கேரளா



கர்நாடகா

4 இன் ஒன்!



ஆந்திரா



தமிழ்நாடு

— நான்கு மாநிலங்களில்,
நாற்பதுக்கும் மேற்பட்ட இடங்களை
முப்பதே ரூபாய் செலவில்
கண் முன் நிறுத்தும் கட்டுரைகள்;
வண்ணப்படங்கள்!

• சிரிக்கச் சிரிக்க ஒரு நெடுங்கதை;
அமரர் கல்கி எழுதிய கணையாழியின் கனவு

• திகைக்கத் திகைக்க ஒரு குறுநாவல் :
பா. ராகவன் எழுதிய ஒளிப்பாம்புகள்

அருமையான சிறுகதைகள் :
• தமயந்தி • பாரதிபாலன் • அனுராதா ரமணன் • கே. எம். ஜோஷி (மலையாளம்) தமிழாக்கம் : வையவன் • சிரஞ்சீவி (கன்னடம்) தமிழில் : அமுதவன், • சீதா ரவி, • கிருஷ்ணா

கவிதைகள் :
• வாஜ்பேயி • மனுஷ்யபுத்ரன் • வைதீஸ்வரன் • மதிவண்ணன்.

---

*வண்ணம், வனப்பு, விளையாட்டு, விஷயகனம்!*

தனிப் பிரதி ரூ. 30/- மட்டுமே! பதிவுத் தபாலில் பெற விரும்புவோர் (தபால் செலவு ரூபாய் 13 சேர்த்து) ரூபாய் 43ஐ கல்கி அலுவலகத்துக்கு அனுப்ப வேண்டும்.



# ஒரு சூப்பர்மேனின் சோகம்!

சூப்பர் மேன் படங்கள் பார்த்திருக்கிறீர்களா? எனில் க்ரிஸ்டோபர் ரீவ்ஸைத் தெரிந்திருக்கும்! கோடிக்கணக்கான குழந்தைகளின் சூப்பர் ஹீரோ! செதுக்கிவிட்ட கிரேக்கச் சிலை போன்ற முகம். ஆரோக்கியத்தை அற்புதமாக வெளிப்படுத்தும் உடற்கட்டு. இந்த சூப்பர் மேன் குதிரை ஒன்றில் ஏறி, வேகமாகப் பயணம் செய்து கொண்டிருந்தார்- படப்பிடிப்பிற்காக அல்ல! நிஜத்தில். வழியில் குறுக்கிட்ட முயல் காரணமா? அல்லது திசையை மாற்றிக் கொண்டபோது மாறிய நிழலைப் பார்த்து குதிரை பயந்து கொண்டதா?

காரணம் சரியாகத் தெரியவில்லை.

என்றாலும் குதிரை அங்கிருந்த வேலி ஒன்றின் பக்கமாகச் சரியத் தொடங்கியது. குதிரையின் இரு காதுகளுக்கு நடுவே சேணத்தோடு வேகமாக கிறிஸ்டோபர் முன் பக்கமாக எகிறி விழ, குதிரை திடீரென்று ரிவர்ஸில் சென்றது.

நேரடியாகத் தலை தரையில் மோத கிறிஸ்டோபர் கீழே விழுந்தார்! இரண்டு கைகளும் சேணத்தில் தாறுமாறாகச் சுற்றிக் கொண்டிருக்காமல் இருந்திருந்தால் கொஞ்சமாவது கைகளை, விழும் சமயத்தில் அவர் ஊன்றியிருக்கக் கூடும். துரதிஷ்டம்!



அருகிலிருந்த ஒருவர் இதை கவனித்து வாயோடு வாய் வைத்து இதயத்தை (மீண்டும்?) இயங்க வைத்திருக்காவிட்டால் அவர், 'அது'வாகவே ஆகியிருக்கக் கூடும்.

பிறகு வெகு ஜாக்கிரதையாக அவரை ஸ்டெச்சரில் வைத்து அருகில் உள்ள



# மறந்திருக்க மாட்டீர்கள்!

**அமரர் கல்கி நூற்றாண்டு விழா சிறப்புச் சிறுகதைப் போட்டிக்குக் கதைகள் அனுப்பக் கடைசித் தேதி ஜூன் 15.**

**முழுவிவரம் மறுபடி அடுத்த வாரம்!**

மருத்துவமனைக்கு அழைத்துச் சென்ற போதும் கூட டாக்டர் "50–50" என்றார்கள். பிஸ்கெட்டை அல்ல! அவர் உயிர் பிழைக்கும் வாய்ப்பை! அவரது மனைவி டானா வரவழைக்கப்பட்டார். பாடகி, நடிகை ஆகிய பிரமுகங்களும் கொண்டிருந்த அவரிடம், கிறிஸ்டோபரின் உடல் நிலையை டாக்டர்கள் விவரித்தபோது அவர் உறைந்து நின்றார்!

கிறிஸ்டோபரின் முதுகெலும்பு மிக மோசமாக பாதிக்கப்பட்டிருந்தது. அதுவும் கழுத்துப் பகுதியில் உள்ள முதுகெலும்பின் முதல் இரண்டு எலும்பு இணைப்புகளில் பெருத்த சேதம் (பொதுவாகவே முதுகெலும்பின் கீழ்ப்பகுதிகளைவிட, மேற்பகுதிகளில் பாதிப்பு ஏற்பட்டால் ஆபத்து அதிகம்.) கிறிஸ்டோபரின் முதுகெலும்புப் பகுதியில் நரம்பு இழைகளில் கணிசமானவை துண்டிக்கப்பட, கழுத்துக்குக் கீழே உணர்வில்லாத நிலை ஏற்பட்டது அவருக்கு. இரண்டு நுரையீரல்களின் அடிபாகத்திலும் அசுத்த திரவங்கள் (பாதிக்கப்பட்ட பகுதியில் ஏற்பட்ட ரசாயன மாற்றங்களால்) தேங்கத் தொடங்க, அதை மருத்துவர்கள் அவ்வப்போது உறிஞ்சி எடுக்க வேண்டியதாயிருந்தது.

தீவிர சிகிச்சையில் ஒரு மாதம் இருந்த போது நியுஜெர்ஸியில் உள்ள சிறப்பு மருத்துவமனைக்கு அனுப்பப்பட்டார். ஒரே மாதத்தில் எடை பன்னிரண்டு கிலோ குறைந்துவிட்டது! ரத்தத்தில் ஹீமோக்ளோபின் அளவு மிகக் குறைந்துவிட, தொட்டாலே உதிர்ந்து விடுவாரோ எனும் அளவுக்கு சோகையாகக் காட்சி தந்தார்.

சக்கர நாற்காலியில் அவரை உட்கார வைத்து சிகிச்சை அளித்தபோது மிகவும் அதிர்ச்சி அடைந்தார் அவர். காரணம் அந்த நாற்காலியில் இணைக்கப்பட்டிருந்த பல்வேறு உபகரணங்கள்!

ஆயிரக்கணக்கான ரசிகர்களிடமிருந்து "சீக்கிரம் உடல் நலம் அடைய வேண்டி" வாழ்த்துத் தந்திகள் குவிந்தன. மனைவி டானாவும் மகன் வில்லும் தொடர்ந்து அருகிலேயே இருக்க, கிறிஸ்டோபரோடு இங்கிலாந்தில் சில காலம் வாழ்க்கை நடத்திய கே எஸ்டன் என்ற பெண்மணியும் கிறிஸ்டோபர் மூலமாக தனக்கு பிறந்திருந்த மகன் மற்றும் மகளுடன் வந்து சேர்ந்தார்.

கடந்த இரண்டரை வருடங்களாக கிறிஸ்டோபர் பட்ட அவஸ்தைகள் கொஞ்ச நஞ்சமில்லை! முகம் வியர்த்தால் துடைப்பதற்கும், சளியை நீக்குவதற்கும் கூட அவருக்கு மற்றவரின் உதவி தேவைப்பட்டது. நுரையீரலில் சளி சேர்ந்துவிடக் கூடாது என்பதற்காக (வேக்குவம் க்ளீனர் போல) ஒரு கருவியைக் கொண்டு அவ்வப்போது அதை வெளியேற்றினார்கள். தசைப் பயிற்சி நேரத்தின்போது உயிரே போவது போல் இருக்கும். டாக்டர்களே வியக்கும் வகையில் நெஞ்சுரம் காட்டி சிறிது சிறிதாக முன்னேறி வருகிறார் அவர். அவரை சந்திப்பவர்கள் எல்லாம் சொல்வது இதைத்தான்:

"சூப்பர் மேனாகத் திரையில் தோன்றினீர்கள். இப்போது நிஜமாகவே நீங்கள் ஒரு சூப்பர் மேன்தான் என்பதை நிரூபித்து விட்டீர்கள்."

கற்பனையில் சாகஸங்கள் செய்வதைவிட, கனவுத் தொழிற் சாலையில் அவற்றைக் காட்டி ·பிரமிக்க வைப்பதைவிட, இந்த உண்மை 'சாகஸங்கள்' மிகக் கடுமையானவை; கொடுமையானவை. தனக்கிருக்கும் செல்வாக்கைப் பயன்படுத்தி, இப்போது இரு முக்கிய முதுகெலும்பு ஆராய்ச்சி மையங்களுக்குப் பெருமளவில் நன்கொடை திரட்டும் வேலையில் முழு மூச்சோடு ஈடுபட்டிருக்கிறார் கிறிஸ்டோபர். ●

– அருண் சரண்யா




✉ '356 லாவணி' தலையங்கம், இன்றைய பா.ஜ.கவின் நிலையைத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டியது. கூட்டணிக் கட்சிகளின் பிடியில் சிக்கித் தவிக்கும் அதன் பரிதாப நிலையை விளக்கியிருந்த விதம் மிகவும் அபாரம்.

தலைஞாயிறு, எஸ். ராஜகணேஷ்.

✉ பிரதமர் நாற்காலியின் 'அப்பர் பர்த்' பிரமாதம். அதில் அம்மா அமர்ந்து அமர்க்களப்படுத்துவது அம்மம்மா அபாரம்! சும்மா சொல்லக் கூடாது; 'சூப்பர் கார்ட்டூன்' போடுவது என்பது கல்கிக்கே கைவந்த கலை!

பொறையாறு, கங்கா கணேசன்.

✉ துளியும் பந்தா இல்லாது நாட்டிலுள்ள "கோடிக்கணக்கான தாழ்த்தப்பட்ட இன மக்களில் நானும் ஒருவன்! அவ்வளவுதான்..." என்ற அமைச்சர் எழில் மலையின் வார்த்தைகள் என்னை நெகிழ்த்தின.

பெண்ணாடம், குறிஞ்சிச் செல்வன்.

✉ இவ்வார காதில் விழுந்தவை பகுதியில் வெளியாகியிருந்த அனைத்துச் செய்திகளும் கொய்ட் இன்ட்ரஸ்டிங்!

தோட்டக்குறிச்சி, வளையாபதி.

✉ ஆஸ்திரேலிய வீரர் ரிக்கி பாண்டிங் நமது பாரத பூமிக்குத் தந்த சர்டிஃபிகேட் சந்தோஷத்தைத் தருகிறது. அதே நேரத்தில் அவரை சலனப்படுத்த முயன்ற 'தொலைபேசி'ப் பெண்ணின் குறும்பையும் கண்டிக்க வேண்டியுள்ளது!

மதுரை – 9, இரா. கல்யாணசுந்தரம்.

✉ முரளி அட்டைப்படம் பளிச்சென, பாராட்டும்படி வெகு அழகு. பேட்டியோ பல கோணங்களில் 'ஷாட்' செய்யப்பட்டிருந்தது அபாரம்!

கோவை – 14, ஏ. எஸ். இராமசாமி.

✉ இடது காதில் கடுக்கன் போட்டால் அதற்கு வெளிநாடுகளில் என்ன அர்த்தம் என்பதை முரளிக்கு மட்டும் காதோடு காதாக குசுகுசு என்று சொல்லி விட்டீர்களே? இன்னும் கொஞ்சம் சத்தமாக சொல்லியிருந்தால் நாங்களும் கேட்டிருப்போமே! என்னே உமது ஓரவஞ்சனை!

தர்மபுரி, பி. இளஞ்செழியன்.

✉ 'சமையலறையில் ஒரு கனவு', 'அக்கரையில் வாழ்கிறவர்கள்', 'விசாலம்' மூன்று சிறுகதைகளுமே நல்ல செலக்ஷன்.

தக்கோலம், அ. முஸ்தபா.

✉ கும்ளேவின் பேட்டியில் கிரிக்கெட் அணியின் மற்ற வீரர்கள் மீது அவர் வைத்துள்ள மரியாதை நன்றாகப் புரிந்தது.

செந்தாரப்பட்டி, 'செந்தாழை' நாதன்.

✉ தோழர் சோம்நாத் சட்டர்ஜியின் பேச்சை தொலைக்காட்சியில் பார்த்துக் கொண்டிருந்தவர்கள் அனைவருமே சட்டர்ஜியின் எகத்தாளத்தையும், பிறரைப் புண்படுத்தும் அவரது வாய் ஜாலத்தையும் புரிந்து கொண்டிருப்பார்கள். தராசு பத்திரிகைகளைப் படித்திருப்பார். டீவியில் பார்க்கவில்லை போலும்!

புதுதில்லி, வி. கோபாலன்.

✉ கடந்த 22.3.98 இதழில் குளோரியா என்னும் சிறுமி பற்றி எழுதியிருந்தீர்கள். என் முதல் பெண் ஹரிணிக்கும் அதே நோய்தான். பிறகு பிறந்த என் மகனுக்கும் அதேதான். என்றாலும், விடா முயற்சியுடன் என் மகளைப் படிக்க வைத்து 'கம்ப்யூட்டர் கன்சல்டன்சி' வைத்து நடத்துமளவுக்குச் செய்திருக்கிறோம். மகனையும் படிக்க வைத்துக் கொண்டிருக்கிறோம்.

ஹோசூர், பானுமதி.

# வட்டமேஜை

# 17

**காதல் டைரிக் குறிப்பு:**

**இந்த உலகத்தில் உள்ள எந்தப் பூவின் எழிலும் உன் புன்னகையின் அழகுக்கு ஈடில்லை.**

அரவிந்திற்கு தன்னையே நம்ப முடிய வில்லை.

நான்தான் சொன்னேனா?

'எனக்கு உங்களைப் பிடிச்சிருக்கு' – மூன்றே வார்த்தைகள்தான். ஆனால் பிருந் தாவின் மேல் என் மனத்தில் அழுத்தமான காதல் உணர்வுகளை ஏந்திய முக்கியமான வார்த்தைகள்.

பல தினங்களாகச் சொல்லிவிடத் தவித்தத் தகவல்! சரியான சந்தர்ப்பத்திற் காகக் காத்திருந்த செய்தி! கிடைத்த சில சந்தர்ப்பங்களிலும் தைரியம் வராமல் தள்ளிப் போட்ட அறிவிப்பு!

'நான் உன்னை நேசிக்கிறேன்' என்கிற நேரடியான வெளிப்பாட்டிற்கு இப்போதும் முழுமையான தைரியமில்லாமல், அதே அர்த்தத்தை உள்ளடக்கி இயல்பாக சொல் லப்பட்டுவிட்ட இனிய வாக்கியம்!

ஆனால் பிருந்தாவின் முகத்தில் இந்த மூன்று வார்த்தைகளும் பெரிதாக எந்தச் சலனத்தையும் ஏற்படுத்தாதது சற்று ஏமாற் றத்தை அளித்தது.

அவன் சொன்னதற்குப் பதிலாக அவள் இதழ்கள் சற்றே விரிந்து ஒரு சிறிய புன்ன கையை வெளிப் படுத்தி பழைய நிலையை அடைந்தன.

அந்தப் புன்னகையின் பொருள் அவனுக்குப் புரிய வில்லை.

என்ன அர்த்தம் இந்த ரியாக் ஷனுக்கு?

நான் சொன்னதை இவள் எப்படி எடுத் துக் கொண்டிருக்கிறாள்? என்னைப் போலவே இவள் மனத்திலும் என்னைப் பற்றி காதலான உணர்வுகள் இருந்திருந்தால், நான் சொன்னது மகிழ்ச்சியை ஏற்படுத்தி விளைவாக தலையைக் குனிந்து வெட்கப்பட் டிருக்க வேண்டும்.

அல்லது நான் சொன்னதை இவள் சற்றும் எதிர்பார்க்காமல் இருந்திருந்தால், இது அவளுக்கு மிகப் பெரிய அதிர்ச்சியைக் கொடுத்து விளைவாக கோபம் வந்திருக்க வேண்டும்.

'இப்படி நீங்க பேசுவீங்கன்னு நான் கொஞ்சம்கூட எதிர்பார்க்கலை அரவிந்த்' என்று கடுமையாகச் சொல்லியிருக்க வேண் டும்.

இரண்டுமில்லாமல் ஒரு குட்டிப் புன்னகை புரிந்து என்னை ஏன் இப்படிக் குழப்புகிறாள்? புன்னகைத் தானா இல்லை அதுகூட என் பிர மையா?

புன்னகையைத் தொடர்ந்து பிருந்தா ஏதாவது பேசுவாள் என்கிற எதிர்பார்ப்பில் அரவிந்த் அமைதி யாக இருந்தான்.

ஆனால் அவளோ பேச எது வுமே இல்லாததுபோல தன் முழங் கால்களைக் கட்டிக் கொண்டு அருகிலிருந்த மரத்தின் கிளையில் ஒன்றை ஒன்று துரத்திய அணில் களைப் பார்த்தாள். பிறகு அவர்கள் அமர்ந்திருந்த மரத்திலிருந்து தரை யெங்கும் உதிர்ந்து கிடந்த மஞ்சள் நிற மலர்களில் ஒன்றை எடுத்து வாசனை வருகிறதா என்றுப் பார்த் தாள். பிறகு அவன் கொடுத்த பிரிண்ட்டிங் பிரஸ் துவக்க விழா அழைப்பிதழை மறுபடி படித்துப் பார்த்துவிட்டு நிமிர்ந்தாள்.

"குத்து விளக்கு ஏற்றுவார்ன்னு லால்சந்த்னு போட்டிருக்கீங்களே இது யாருங்க அரவிந்த்?" என்றாள்.

"இந்த ப்ராஜெக்ட்டுக்கு

பட்டுக்கோட்டை பிரபாகர்

ஃபைனான்ஸ் பண்ணியிருக்கிறவர்."

"நீங்க பேங்க் லோன் போடலையா?"

பொறுமை இழந்தான் அரவிந்த்.

"பிருந்தா, இதுக்கு நான் பதில் சொல்றது இருக்கட்டும். இப்ப கொஞ்சம் முன்னாடி நான் உங்களைப் பத்திச் சொன்னதை நீங்க கவனிச்சிங்களா, இல்லை கவனிக்கலையா, இல்லை கவனிக்காத மாதிரி நடிக்க விரும்பறீங்களா?" என்றான் படபடப்பாக.

"எதைச் சொல்றீங்க அரவிந்த்?"

"எனக்கு உங்களைப் பிடிச்சிருக்குன்னு சொன்னேன்."

"ஆமாம், சொன்னீங்க."

"நீங்க பதில் எதுவும் சொல்லலையே."

"நீங்க சொன்னது ஒரு ஸ்டேட்மெண்ட். பதில் சொல்ல வேண்டிய கேள்வியா அது?"

"ஓ, நான் கேள்வியாக் கேட்டிருக்கணுமா? சரி. இப்ப கேக்கறேன். பிருந்தா, உங்களுக்கு என்னைப் பிடிச்சிருக்கா?"

"நமக்குப் பிடிக்காத மனிதர்களோட நம்மால பழக முடியுமா அரவிந்த்? உங்க பேச்சு, பண்பாடு இதெல்லாம் உங்களை ஒரு கண்ணியமான இளைஞனா நினைக்க வெச்சது. ஒரு மதிப்பையும், மரியாதையையும் ஏற்படுத்தினது. அதனாலதான் உங்களை சந்திக்கிறேன். பேசறேன். நீங்க கூப்பிட்டதும் உங்களோட தைரியமா வெளில வர்றேன்."

அவள் சொல்லச் சொல்ல பிரகாசமடைந்த அரவிந்த், "பிருந்தா, ஆனாலும் நீங்க அநியாயம் பண்றீங்க. எவ்வளவு இனிமையான விஷயத்தை எக்ஸ்பிரஷனே இல்லாம எப்படி உங்களால சொல்ல முடியுது? என்னை உங்களுக்குப் பிடிச்சிருக்குன்னு நீங்க சொன்னீங்களே, நிஜமா இப்போ இந்த நிமிஷம் 'ஹாய்யா!'ன்னு கத்திக்கிட்டு குதிக்கணும் மாதிரி இருக்கு எனக்கு" என்றான்.

"இதில இவ்வளவு சந்தோஷப்பட என்ன இருக்கு அரவிந்த்?"

"உங்க மனசில என்ன இருக்குன்னு எப்படிப் புரிஞ்சுக்கிறதுன்னு தெரியாம நான் தவிச்ச தவிப்பு எனக்குத்தான் தெரியும். ஐ லவ் யூ! மூணே வார்த்தைதான். இதை தினம் முன்னூறு தடவை மனசுக்குள்ளே சொல்ல முடிஞ்சாலும் உங்க எதிர்ல சொல்ல தைரியம் வரலை. கடைசில எப்படியோ தெரியப்படுத்திட்டேன். பிருந்தா, நீங்க என்ன பதில் சொல்லப் போறீங்களோன்னு படபடன்னு இருந்திச்சி தெரியுமா?"

"ஒரு நிமிஷம் அரவிந்த். நான் வெளிப்படையா பேச விரும்பறேன். எனக்கு உங்களோட பேசறதும், பழகறதும் பிடிச்சிருக்கு. ஆனா இதை காதல்ன்னு வகைப்படுத்த நான் தயாரா இல்லை."

சட்டென்று அவனுடைய உற்சாகமான முகம் சுருங்கிப் போனது.

"என்ன சொல்றீங்க பிருந்தா?" என்றான் சிதைந்த குரலில்.



"என்னோட உண்மையான மன உணர்வுகளைத்தான் நான் சொல்றேன். இத்தனை நாள்ல சதா உங்களையே நான் நினைச்சிட்டு இல்லை. நகம் கடிச்சித் துப்பி வெட்கப்பட்டதில்லை. உங்களோட சேர்ந்து ஆடறதா, பாடறதா கனவும் காணலை. கற்பனையும் செய்யலை. அறிமுகம் உள்ள டீசண்ட்டான ஒரு நல்ல மனிதனா, நண்பனா நினைச்சி பழகிட்டு இருக்கேன்."

"இல்லை. நீங்க பொய் சொல்றீங்க?"

**"உங்க கடையில வாங்கிப் போன பூரிக் கட்டை சீக்கிரம் உடைஞ்சிடுச்சே?"**

**"அடேயப்பா! உங்க கணவர் தலை அவ்வளவு ஸ்ட்ராங்கா!"**

**— தாரை அருண்ராஜ்**

"நோ அரவிந்த்!"

"அப்படின்னா 'உங்களை எனக்குப் பிடிச்சிருக்கு'ன்னு நான் சொன்னப்போ உங்களுக்குள் கோபம் வந்திருக்கணும் பிருந்தா."

"கோபம் வரவழைக்கக் கூடிய வார்த்தைகளா அதை நான் நினைக்கலை. எனக்கும் நான் உங்களைப் பிடிச்சிருக்குன்னு சொல்றேனே. நேரடியா நீங்க என்கிட்ட 'நான் உங்களை நேசிக்கிறேன்'னு சொல்லியிருந்தாலும் நான் கோபப்பட்டிருக்க மாட்டேன். உங்க எண்ணத்தை நீங்க சொல்றீங்க. நான் என்ன செய்யணும்? யோசிக்கணும். அதே மாதிரி எனக்கும் அபிப்பிராயம் இருந்தா சொல்லணும். இல்லைன்னு உணர்ந்தா இல்லைன்னு சொல்லணும். இதில ஆத்திரப்பட எதுவும் இல்லை."

"அப்போ நான் உங்க நண்பன். அவ்வளவுதானா?"

"இப்போதைக்கு என் மனசில உங்களுக்கு நான் கொடுத்திருக்கிற ஸ்தானம் அது தான்."



"ஆனா நான் உங்களை தோழியா நினைக்கலை பிருந்தா. நானும் வெளிப்படையாப் பேசறேன். அன்னைக்கு மழை பெய்துகிட்டிருந்த ஒரு நாள்ல ஷாப்பிங் சென்டர்ல உங்களை முதன் முதலா நான் சந்திச்சப்போ நீங்க என்னை ஈர்த்துட்டீங்க. எப்படி என் மனசுல காதல் வந்திச்சின்னு என்னால காரணம் சொல்ல முடியாது. இட் ஹேப்பண்ட்! உங்களைப் பார்த்ததே ஒரு இனிய அனுபவமா, சுகமா இருந்திச்சி. உங்களோட முகம் என் மனசில காலேஜ் போட்டில பாடினப்பவே பதிவாகிடுச்சி. ஆனா அப்போ எனக்கு எந்த பர்சனல் ஃபீலிங்கும் இல்லை. உங்க முகத்தை மறந்தே போய்ட்ட நிலைமையில ஷாப்பிங் சென்டர்ல சந்திச்சேன். அப்பதான் டிஸ்டர்ப் ஆனேன். உங்களோட பேசணும்னு தவிப்பா இருந்திச்சி. ஐநூறு ரூபாய்க்கு பொருள் வாங்கினா ஒரு ஓவியம் இலவசம்னு கடையில சொன்னப்போ உங்க பில்லுல தொகை குறைவா இருந்திச்சி, ஞாபகமிருக்கா? ஓவியத்தை மட்டும் வெச்சிட்டு நீங்க போயிட்டீங்க. நீங்க ரசிச்சதை உங்ககிட்ட சேர்க்கணும்னு எனக்கு துடிப்பு ஏற்பட்டு என்னோட பில்லை உங்க பில்லோட சேர்த்துப் போடச் சொல்லிக் கேட்டேன். கடையில கொடுத்த ஓவியத்தை உங்ககிட்ட கொடுக்க வெளில வந்தப்போ நீங்க சட்டுன்னு ஒரு ஆட்டோல போயிட்டீங்க. இனி எப்போ, எப்படி உங்களை சந்திப்பேன்னு புரியாம வேதனைப்பட்டேன். ஆனா என் அக்கா ஆபிஸ்ல மறுபடி உங்களை சந்திப்பேன்னு நான் நினைக்கவே இல்லை. உங்க பிரச்னையில உதவி செய்யறதாச் சொல்லி நானே உங்ககிட்ட முன் வந்து பேசினதும் மனிதாபிமானமும் இருந்திச்சி. என் சுயநலமும் இருந்திச்சி. உங்களோட நெருங்கிப் பேசிப் பழகி சந்தோஷப்பட்டதுதான் அந்த சுயநலம். என் குடும்பப் பிரச்னையால மனசு நொந்து போயிருக்கிற இந்தச் சூழ்நிலையில ஆறுதலா இருக்கறது உங்களை நினைச்சாலே மனசுல படர்ற ஒரு இனிமைதான். ஐ லவ் யூ பிருந்தா. சின்சியரா லவ் பண்றேன். உங்களை கல்யாணம் பண்ணிக்கணும்னு ஆசைப்படறேன். என் காதலை ஏத்துக்கங்கன்னு சொல்றது கெஞ்சறது மாதிரி இருக்கும். இரக்கத்தில காதல் வராது. ஆனா காதலைப் புரிஞ்சுக்கறப்போ கண்டிப்பா காதல் வரும். என்னோட ஆழமான காதலை தயவுசெஞ்சி புரிஞ்சுக்கங்க பிருந்தா" என்று படபடவென்று ஒரே மூச்சில் பேசிவிட்டு லேசாக மூச்சிரைத்த அரவிந்த், "எக்ஸ்க்யூஸ் மீ. ரெண்டு நிமிஷம் ப்ளீஸ்..." என்று பத்தடி விலகிச் சென்று நின்று சிகரெட்

**"பெண்ணுக்கு என்னென்ன போடுவீங்கன்னு கேட்டது தப்பா போச்சா? ஏன்?"**

**"காலையில ஆறு இட்லி, மதியம் குழம்பு, ரசம், தயிரோட நானூறு கிராம் சாப்பாடு, சாயங்காலம் மூனு பூரி, ராத்திரிக்கு மறுபடியும் ஃபுல் மீல்ஸ்னு சொல்லி வெறுப்பேத்திட்டாங்க!"**

**— அருண்ராஜ்**



''மாமனார் வாங்கிக் குடுத்த ஸ்கூட்டரை சுரண்டிப் பார்க்கிறாயே... ஏன்?''

''சுரண்ட சுரண்ட உள்ளே இரண்டு மூணு கலர் தெரியுது!''

— அம்பை தேவா

பற்ற வைத்து அவசரமாகப் புகைத்தான்.

மூன்று பஃப் இழுத்துவிட்டு முக்கால்வாசி சிகரெட்டைக் கீழே வீசி நசுக்கிவிட்டு மீண்டும் அவள் எதிரில் வந்து அமர்ந்தான் அரவிந்த்.

''நான் பேசினதில ஏதாவது தப்பா இருந்தா, ஐ'ம் ஸாரி. ஆனா நான் சொன்னதெல்லாம் என் உண்மையான உணர்வுகள் பிருந்தா.''

''எதுக்காக ஸாரி சொல்றீங்க? உண்மைங்கிறது ரொம்ப அழகான விஷயம். இது என் உணர்வுன்னு தைரியமா வெளிப்படுத்திட்டு உடனே ஏன் குற்ற உணர்ச்சியோட ஸாரி சொல்றீங்க? அதே மாதிரி நான் சொன்னதும் என் உண்மையான மன உணர்வுதான். ரெண்டு பேர் நட்பா பழகறதுக்கு ஒருத்தரைப் பத்தி ஒருத்தர் ரொம்ப ஆழமா தெரிஞ்சிருக்க வேண்டிய அவசியமில்லை அரவிந்த். ஆனா வாழ்க்கை பூரா இணைஞ்சி குடித்தனம் நடத்தறதுக்கு ரொம்ப ரொம்ப தெரிஞ்சிக்கிட்டாகணும். என்னைப்பத்தி ஓரளவுதான் உங்களுக்கு தெரியும். உங்களைப்பத்தி எனக்கும் முழுமையாகத் தெரியாது. எப்படி உங்களால இவ்வளவு குறைச்சலான அறிமுகத்தில் என்னைக் கல்யாணம் பண்ணிக்கிற அளவுக்கு சிந்திக்க முடிஞ்சதுன்னு எனக்கு ரொம்ப ஆச்சரியமா இருக்கு அரவிந்த்.''

''கொஞ்சம் கூட அறிமுகமே இல்லாம ஜாதகப் பொருத்தம் மட்டும் பார்த்து வாழ்க்கையில இணைக்கப்படறவங்க எத்தனை லட்சம் தம்பதிகள்! இதில ஆச்சரியப்பட என்ன இருக்கு?''

''நீங்களே என்ன சொல்றீங்க... வாழ்க்கையில இணைக்கப்படறவங்கன்னு சொல்றீங்க. வாழ்க்கையில இணைஞ்சவங்கன்னு உங்களால சொல்ல முடியலை பார்த்தீங்களா? இந்த அரேன்ஜ்ட் மேரேஜ்ன்ற சிஸ்டத்தில் பலவீனமே - ஒரு ஆணும், பெண்ணும் ஒருத்தரை ஒருத்தர் புரிஞ்சுக்காம காலம் பூரா சேர்ந்து வாழ சம்மதிக்கிறதுதான். அதனாலேயே எத்தனைக் குடும்பங்கள்ல பிரச்னைகள் வருது தெரியுமா?''

''அப்போ பெரியவங்க பார்த்து பண்ணி வைக்கிற கல்யாணத்தில உங்களுக்கு நம்பிக்கை இல்லைதானே?''

''அதில ரிஸ்க் இருக்குன்றது என் பயம். ஆனா அதைவிட்டா வேற வழி இல்லையே...''

''அந்த வேற வழிதான் காதல் கல்யாணம்.''

''காதல் இயற்கையா அமையற விஷயமில்லையா அரவிந்த்? ஷாப்பிங் சென்டர்ல என்னை சந்திச்சப்போ காரணமே இல்லாம உங்க மனசில காதல் ஏற்பட்டுச்சின்னு சொன்னீங்க. அப்படி இயற்கையா நிகழ்ற விஷயம் இல்லையா அது? ஒரு ஆணோ, பெண்ணோ மெனக்கெட்டு இத்தனாம் தேதிக்குள்ளே காதலிச்சிக் காட்டறேன்னு சவால்விட்டு காதலிக்கிறதெல்லாம் சினிமால மட்டுமே வர்ற அசட்டுத்தனம் அரவிந்த்.''

''ஸோ?''

''நீங்க என்னை சின்சியரா காதலிக்கிறதாச் சொன்னீங்க. நீங்க நேர்மையா உங்க மனசை வெளிப்படுத்தின விதம்கூட எனக்குப் பிடிச்சிருக்கு. இதுவும் உங்கமேல என் மனசில மதிப்பை உயர்த்துது. ஃப்ராங்க்கா சொல்லணும்னா காதலிக்கிறது ஒரு ரெஸ்பெக்ட். உங்களால நான் காதலிக்கப் படறேன்ற விஷயம் எனக்குள்ளே ஒரு குறுகுறுப்பை ஏற்படுத்துது. இதை நான் மறைச்சா வேஷக்காரியாய்டுவேன். அதே சமயம் உங்களோட என்னை வாழ்க்கை பூரா கல்யாண பந்தம் மூலமா இணைச்சுக்கற தீர்மானத்துக்கெல்லாம் உடனே நான் வரணும்னு தயவு செஞ்சி எதிர்பார்க்காதீங்க. அரவிந்த், அந்தத் தீர்மானத்துக்கு நான் வரணும்னா உங்களை நான் இன்னும் நிறைய புரிஞ்சுக்கணும். நாம் தொடர்ந்து பேசலாம், பழகலாம், உங்களைப் பரிபூரணமா புரிஞ்சுக்கணும். அதுக்கப்புறம் ஒரு தீர்மானத்துக்கு வர்றேன். உங்களை நல்லாப் புரிஞ்சுக்கிட்டதுக்குப் பிறகு நான் அந்தத் தீர்மானத்துக்கு வராமக்கூடப் போகலாம். கேன் யூ அண்டர்ஸ்டாண்ட் மி அரவிந்த்?'' என்றாள் பிருந்தா.

மௌனமாகத் தலையசைத்தான் அரவிந்த்.

(தொடரும்)



# பொன்னியின் செல்வன்

கல்கி கலெக்ஷன்

முப்பத்தாறாம் அத்தியாயம்

## "ஞாபகம் இருக்கிறதா?"

லதா மண்டபத்தின் தோட்ட வாசலண்டை வந்து நின்று நந்தினி மூன்று தடவை கையைத் தட்டினாள்.

அப்போது அவள் முகத்தில் படிந்திருந்தது பயத்தின் ரேகையா அல்லது மரங்களின் இருண்ட நிழலா என்று சொல்ல முடியாது.

தோட்டத்தில் சிறிது தூரம் வரையில் பெரிய பெரிய அடி மரங்களும் அவற்றைச் சுற்றிக் கொண்டிருந்த கொடிகளும் தெரிந்தன. அப்பால் ஒரே இருட் பிழம்பாயிருந்தது.

அமரர் கல்கி

இருளைக் கிழிக் கொண்டு, கொடிகளை விலக்கிக் கொண்டு, மரம் ஒன்றின் பின்னாலிருந்து மந்திரவாதி வெளியே வந்தான்.

நந்தினி தன்னுடைய புஷ்ப மஞ்சத்தில் போய் உட்கார்ந்து கொண்டாள். அவள் அழகிய முகத்தில் இப்போது அமைதி குடிகொண்டிருந்தது.

மந்திரவாதி லதா மண்டபத்துக்குள் நுழைந்தான். தங்க விளக்கின் சுடர் ஒளி அவன் முகத்தின் மீது விழுந்தது.

"ஏற்கெனவே பார்த்த முகமாயிருக்கிறதே! யார் இவன்? ஆம்! திருப்புறம்பியம் பள்ளிப் படை

யினருகில் நள்ளிரவில் கூடியிருந்த மனிதர்களில் ஒருவன் இவன். பையிலிருந்து பொன் நாணயங்களைக் கலகலவென்று கொட்டியவன். "ஆழ்வார்க்கடியானைக் கண்ட இடத்தில் உடனே கொன்று விடுங்கள்!" என்று மற்றவர்களுக்குக் கூறிய ரவிதாஸன்தான் இவன்.

வரும்போதே அவன் முகத்தில் கோபம் கொதித்தது. மலர்ப் படுக்கையில் சாந்த வடிவமாய் அமர்ந்திருந்த நந்தினியைக் கண்டதும் அவனுடைய பூனைக் கண்கள் வெறிக் கனல் வீசின.

மஞ்சத்தின் எதிரில் கிடந்த பலகையில் உட்கார்ந்து கொண்டு நந்தினியை உற்றுப் பார்த்துக் கொண்டு "ஹூம் ஹ்ரீம் ஹ்ராம், பகவதி! சக்தி! சண்டிகேசுவரி!..." என்று சில மந்திரங்களைச் சொன்னான்.

"போதும்! நிறுத்து! தாதிப் பெண் வாசற்படியில் உட்கார்ந்தபடி தூங்கித் தொலைத்து விட்டாள் போலிருக்கிறது! சொல்ல வேண்டியதைச் சீக்கிரம் சொல்! அவர் கோட்டைக்குள் வந்து விட்டார்!" என்றாள் நந்தினி.

"அடி பாதகி!" என்று ரவிதாஸன் கூறியது, நாகப்பாம்பு சீறுவது போலத் தொனித்தது.

"யாரைச் சொன்னாய்?" என்று நந்தினி சாந்தமாகவே கேட்டாள்.

"நன்றி கெட்ட நந்தினியைத்தான்! பழுவூர் இளையராணியைத்தான்! உன்னைத்தான்!" என்று ரவிதாஸன் தன் ஒரு கை விரலால் அவளைச் சுட்டிக்காட்டினான்.

நந்தினி மௌனமாயிருந்தாள்.

"பெண்ணே! நினைவில் வைத்திருக்க வேண்டிய சில சம்பவங்களை நீ மறந்து விட்டாய் போலிருக்கிறது. அவற்றை உனக்கு ஞாபகப்படுத்துகிறேன்" என்றான் ரவிதாஸன்.

"பழைய கதை இப்போது எதற்கு?" என்றாள் நந்தினி.

"இப்போது எதற்கு என்றா கேட்கிறாய்? சொல்கிறேன்; முதலில் ஞாபகப் படுத்தி விட்டுப் பிற்பாடு சொல்கிறேன்" என்றான் ரவிதாஸன்.

அவனைத் தடுப்பதில் பயனில்லையென்று கருதியவளைப் போல் நந்தினி ஒரு பெருமூச்சு விட்டு விட்டு, வேறு பக்கம் திரும்பிக் கொண்டாள்.

"ராணி! கேள்! மூன்று வருஷத்துக்கு முன்னால் ஒருநாள் நடுநிசியில் வைகை நதிக் கரையில் உள்ள மயானத்தில் ஒரு சிதை எரிந்து கொண்டிருந்தது. சாஸ்திரப் படி புரோகிதர்களைக் கொண்டு அந்திமக் கிரியை ஒன்றும் அங்கு நடக்கவில்லை. காட்டில் காய்ந்து கிடந்த கட்டைகளையும் குச்சிகளையும் இலைச் சருகுகளையும் கொண்டு வந்து அச்சிதையை அடுக்கினார்கள். மரத்துக்குப் பின்னால் மறைத்து வைத்திருந்த ஓர் உடலைக் கொண்டு வந்து அந்தச் சிறையில் இட்டார்கள். பிறகு தீ மூட்டினார்கள். காட்டுக் கட்டைகளில் தீ நன்றாய்ப் பிடித்துக் கொழுந்து விட்டு எரிந்தது. அப்போது காட்டு நிழலிலிருந்து உன்னைச் சிலர் பிடித்து இழுத்துக் கொண்டு வந்தார்கள். உன் காலையும் கையையும் கட்டிப் போட்டிருந்தது. உன் வாயில் துணி அடைத்திருந்தது. இன்று அழகாகப் பூ வைத்துக் கொண்டை போட்டுக் கொண்டிருக்கிறாயே, அந்தக் கூந்தல் விரிந்து தரையில் புரண்டு கொண்டிருந்தது. உன்னை அம் மனிதர்கள் ஜ்வாலை விட்டு எரிந்து கொண்டிருந்த சிதையில் உயிரோடு போட்டுக் கொளுத்தி விட எண்ணியிருந்தார்கள். 'இன்னும் கொஞ்சம் தீ நன்றாக எரியட்டும்!' என்று அவர்களில் ஒருவன் சொன்னான். உன்னை அங்கேயே போட்டு விட்டு அந்த மனிதர்கள் தனித்தனியே ஒரு பயங்கரமான சபதம் எடுத்துக் கொண்டார்கள். அதை நீ கேட்டுக் கொண்டிருந்தாய். உன் வாயை அடைத்திருந்தார்களே தவிர, கண்ணை

யும் கட்டவில்லை; காதையும் அடைக்க வில்லை. ஆகையால், பார்த்துக் கொண் டும் கேட்டுக் கொண்டுமிருந்தாய். அவர் கள் அனைவரும் சபதம் கூறி முடிந்த பிறகு உன்னை நெருங்கினார்கள். அது வரை சும்மா இருந்தவள், கட்டுண்டிருந்த உன் கைகளால் ஏதோ சமிக்ஞை செய்ய முயன்றாய். உன் கண்களை உருட்டி விழித்துப் புருவத்தை நெரித்துக் கஷ்டப் பட்டாய். அவர்களில் ஒருவன் 'இவள் ஏதோ சொல்ல விரும்புகிறாளடா!'



என்றான். 'பழைய கதையாகத்தான் இருக் கும். தூக்கிச் சிதையில் போடு!' என்றான் இன்னொருவன். 'இல்லையடா! தீயில் போடுவதற்கு முன்னால் என்னதான் சொல்கிறாள், கேட்டு விடலாம்! வாயி லிருந்து துணியை எடு!' என்றான் மற் றொருவன். அவனே அவர்களுக்குத் தலைவன் ஆனபடியால் உன் வாயி லிருந்து துணியை எடுத்தார்கள். நீ அப் போது என்ன சொன்னாய் என்பது நினைவிருக்கிறதா, பெண்ணே!" என்று ரவிதாஸன் கேட்டுவிட்டு நிறுத்தி னான்.

நந்தினி மறுமொழி சொல்லவும் இல்லை; அவனைத் திரும்பிப் பார்க்கவும் இல்லை. நெஞ்சில் குடிகொண்டிருந்த அருவருப்பையும் பீதி யையும் அதே சமயத்தில் பயங்கர சங் கல்பத்தின் உறுதியையும் அவள் முக மண்டலம் காட்டியது. அவளுடைய கரிய கண்களிலிருந்து இரு கண்ணீர்த் துளி களும் ததும்பி நின்றன.

"பெண்ணே! பேச மாட்டேன் என்கிறாய்! வேண்டாம். அதையும் நானே சொல்லி விடுகிறேன். அந்த மனிதர் களைப் போலவே நீயும் பழி வாங்கும் விரதம் பூணப் போவதாகச் சொன்னாய். பழி வாங்குவதற்கு அவர்களைக் காட்டி லும் உனக்கே அதிகக் காரணம் உண்டு என்று சத்தியம் செய்தாய். உன்னுடைய அழகையும் மதியையும் அதற்கே பயன் படுத்துவதாகக் கூறினாய். அவர்களுக்கு உன்னால் முடிந்த அளவு உதவி புரிவ தாகவும் சொன்னாய். சபதத்தை நிறை வேற்றியதும் நீயே உன் உயிரை விட்டு விடத் தீர்மானித்திருப்பதாகவும் ஆணை யிட்டுச் சொன்னாய். உன்னை மற்றவர் கள் நம்பவில்லை. ஆனால் நான் நம்பி னேன். நம்பி, உன்னைத் தீயில் போட்டு விடாமல் தடுத்தேன். உன் உயிரைத் தப்பு வித்தேன். இதெல்லாம் உனக்கு ஞாபகம் இருக்கிறதா?" என்று ரவிதாஸன் கூறி நிறுத்தினான்.

நந்தினி சற்றுத் திரும்பி அவனைப் பார்த்து, "ஞாபகம் இருக்கிறதா என்று கேட்கிறாயே? என் நெஞ் சில் அவ்வளவும் தீயினால் எழுதியது போல் எழுதி வைத்திருக்கிறதே?" என் றாள்.

"பின்னர் ஒருநாள் நாம் எல்லோரும் அகண்ட காவேரிக் கரையோரமாகக் காட்டு வழியில் போய்க் கொண்டிருந் தோம். திடீரென்று பின்னால் குதிரை வீரர்கள் வரும் சப்தம் கேட்டது. அவர் கள் போகும் வரையில் நாம் ஒவ்வொரு வரும் தனித்தனியாகக் காட்டில் ஒளிந்து

கொள்ளத் தீர்மானித்தோம். ஆனால் நீ மட்டும் அத் தீர்மானத்தை மீறி வழியிலேயே நின்றாய். அந்த வீரர்கள் உன்னைப் பிடித்துக் கொண்டார்கள். அவர்களுடைய தலைவனாகிய பழுவேட்டரையன் உன்னைக் கண்டு மயங்கி உன் மோக வலையில் விழுந்தான். அவனை நீ மணந்தாய். என்னைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் நான் ஏமாந்து விட்டதாக என்னை இடித்துக் கூறினார்கள். நான் உன்னை விடவில்லை. எப்படியோ ஒருநாள் உன்னைத் தனியே பிடித்துக் கொண்டேன். துரோகியாகிய உன்னைக் கத்தியால் குத்திக் கொன்று விட எண்ணினேன். மறுபடியும் நீ உயிர்ப் பிச்சை கேட்டாய். நம்முடைய சபதத்தை நிறைவேற்றுவதற்காகவே இங்கு வந்திருப்பதாகக் கூறினாய். இந்த அரண்மனையில் இருந்தபடியே எங்களுக்கு வேண்டிய உதவியெல்லாம் செய்வதாகச் சத்தியம் செய்தாய். இதெல்லாம் உண்மையா இல்லையா?'' என்று கேட்டு விட்டு நிறுத்தினான் ரவிதாஸன்.

''இதெல்லாம் உண்மைதான்; யார் இல்லை என்றார்கள்? எதற்காகத் திருப்பித் திருப்பிச் சொல்லுகிறாய்? இப்போது நீ வந்த காரியத்தைச் சொல்லு!'' என்றாள் நந்தினி.

''இல்லை, பெண்ணே! உனக்கு ஞாபகம் இல்லை. எல்லாவற்றையும் நீ மறந்து விட்டாய்! பழுவூர் அரண்மனையின் சுகபோகத்தில் அழுந்தி உன் சபதத்தை மறந்து விட்டாய்! அறுசுவை உண்டி அருந்தி, ஆடை ஆபரணங்கள் புனைந்து, சப்ரகூட மஞ்சத்தில் பட்டு மெத்தையில் உறங்கி; தந்தப் பல்லக்கில் பிரயாணம் செய்யும் ராணி நீ! உனக்குப் பழைய ஞாபகங்கள் எப்படி இருக்கும்?''

''சிச்சி! இந்த மஞ்சமும் மெத்தையும் ஆடை ஆபரணமும் யாருக்கு வேண்டும்? இந்த அற்ப போகங்களுக்காகவா நான் உயிர் வாழ்கிறேன்? இல்லவே இல்லை!''

''அல்லது வழியில் போகிற வாலிபனுடைய சௌந்தரிய வதனத்தைக் கண்டு மயங்கி விட்டாய் போலும்! புதிதாகக் கொண்ட மையலில் பழைய பழிவாங்கும் எண்ணத்தை மறந்திருக்கலாம் அல்லவா!''

நந்தினி சிறிது துணுக்கம் அடைந்தாள். அதை உடனே சமாளித்துக் கொண்டு, ''பொய்! முழுப் பொய்!'' என்றாள்.

''அது பொய்யானால், நான் இன்று வரப் போவதாக முன்னதாகச் சொல்லி அனுப்பியிருந்தும் வழக்கமான இடத்துக்கு உன் தாதிப் பெண்ணை ஏன் அனுப்பி வைக்கவில்லை?''



''அனுப்பி வைத்துத்தான் இருந்தேன். உனக்கு வைத்திருந்த ஏணியில் இன்னொருவன் ஏறி வந்து விட்டான். அந்த மூடப்பெண் அவனை நீதான் என்று எண்ணி அழைத்துக் கொண்டு வந்து விட்டாள். அது என்னுடைய குற்றமா?''

''யாருடைய குற்றமாயிருந்தால் என்ன? இன்னும் ஒருகணத்தில் என் உயிருக்கு ஆபத்து வருவதாயிருந்தது. அந்த வாலிபனைத் தேடி வந்த கோட்டைக் காவலாளர் என்னைப் பிடித்துக் கொள்ள இருந்தார்கள். இந்த அரண்மனைக்குப் பக்கத்துக் காட்டிலுள்ள குளத்தில் மூச்சுத் திணறும் வரையில் முழுகியிருந்து, அவர்கள் போன பிறகு தப்பித்து வந்தேன். சொட்டச் சொட்ட நனைந்து வந்தேன்...''

''உனக்கு அது வேண்டியதுதான். என்னைச் சந்தேகித்த பாவத்தை அந்த முழுக்கினால் கழுவிக் கொண்டாய்!''

''பெண்ணே! சத்தியமாகச் சொல்! அந்த வாலிபனுடைய அழகில் நீ மதி மயங்கி விடவில்லையா?''

''சிச்சி! இது என்ன வார்த்தை! ஆண் பிள்ளைகளின் அழகைப் பற்றி யாராவது பேசுவார்களா? இந்த வெட்கங் கெட்ட சோழ நாட்டிலேதான் 'அரசன் அழகன்' என்று கொண்டாடுவார்கள். ஆண் பிள்ளைகளுக்கு அழகு உடம்பிலுள்ள போர்த் தழும்புகள் அல்லவா?''

''நன்றாகச் சொன்னாய். இதை நீ உண்மையாகச் சொல்லும் பட்சத்தில், அந்த வாலிப வழிப்போக்கன் இங்கு எதற்காக வந்தான்?''

''முன்னமே சொன்னேனே, நீதான் என்று எண்ணி வாஸுகி அவனை அழைத்துக் கொண்டு வந்தாள் என்று.''

''என்னிடம் கூட நீ கொடுக்காத உன் முத்திரை மோதிரத்தை அவனிடம் ஏன் கொடுத்தாய்?''

''அவனை இவ்விடம் தருவித்துப் பேசுவதற்காகவே கொடுத்தேன். இப்போது அம் மோதிரத்தை அவனிடமிருந்து வாங்கிக் கொண்டு விடப் போகிறேன்...''

''எதற்காக அவனைத் தருவித்தாய்? அவனிடம் இவ்வளவு நேரம் என்ன சல்லாபம் செய்து கொண்டிருந்தாய்?''

''ஒரு முக்கியமான லாபத்தைக் கருதியே அவனுடன் சல்லாபம் செய்து கொண்டிருந்தேன். நம்முடைய நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள அவனால் பெரிய அநுகூலம் ஏற்படும்.''

''அடி பாதகி! கடைசியில் உன் பெண் புத்தியைக் காட்டி விட்டாயா? யாரோ முன்பின் தெரியாத வாலிபனிடம் நமது இரகசியத்தை....''

''வீணில் ஏன் பதறுகிறாய்? நான் ஒன்றும் அவனிடம் சொல்லி விடவில்லை. அவனிடமிருந்துதான் இரகசியத்தைக் கிரஹித்துக் கொண்டேன்.''

''என்ன கிரஹித்துக் கொண்டாய்?''

''இவன் காஞ்சியிலிருந்து பழையாறைக்கு ஓலை கொண்டு போகிறான். பழையாறையிலுள்ள பெண் புலிக்குக் கொண்டு போகிறான். அதை என்னிடம் காட்டினான். அவள் கொடுக்கும் மறு ஓலையை என்னிடம் கொண்டு வர வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தேன். அதற்குள் நீ வந்து விட்டாய்.''

''ஓலையுமாயிற்று; எழுத்தாணியும் ஆயிற்று. இதனாலெல்லாம் நமக்கு என்ன உபயோகம்?''

''உன்னுடைய அறிவின் ஓட்டம் அவ்வளவுதான்! புலிக் குலத்தை அடியோடு அழிப்பது என்று நாம் விரதம் கொண்டிருக்கிறோம். ஆனால் நீங்கள் ஆண் புலிகளை மட்டுமே எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள். பெண் புலியினாலும் குலம் வளரும் என்பதை மறந்து விட்டீர்கள். அது மட்டுமல்ல. தற்போது இந்தச் சோழ ராஜ்யத்தை ஆளுவது யார் என்று எண்ணியிருக்கிறாய்? பலமிழந்து செயலிழந்து நோய்ப் படுக்கையில் படுத்திருக்கும் கிழவனா? காஞ்சியிலும் இலங்கையிலும் உள்ள இளவரசர்களா?....''

''இல்லை! உன்னை ராணியாகப் பெறும் பாக்கியம் பெற்ற தனாதிகாரி பழுவேட்டரையர்தான். இது உலகம் அறிந்ததாயிற்றே!''

''அதுவும் தவறு! உலகம் அப்படி எண்ணுகிறது; இந்தக் கிழவரும் அப்படி எண்ணியே ஏமாந்து போகிறார். நீயும் அந்த ஏமாற்றத்துக்கு உள்ளாகியிருக்கிறாய். உண்மையில் பழையாறையில் உள்ள பெண் புலிக்குட்டிதான் இந்த ராஜ்யத்தை ஆளுகிறது. அரண்மனைக்குள் இருந்தபடி அந்தக் கர்வக்காரி சூத்திரக் கயிற்றை இழுத்து எல்லாரையும் ஆட்டி வைக்கப் பார்க்கிறாள்! அவ

ளுடைய கொட்டத்தை நான் அடக்கு வேன். அதற்காகவே இந்த வாலிபனை உபயோகப்படுத்திக் கொள்ளப் போகிறேன்."

ரவிதாஸனுடைய முகத்தில் வியப்புக்கும் மரியாதைக்கும் உரிய அறிகுறிகள் தென்பட்டன.

"நீ பெரிய கைகாரிதான்; சந்தேகம் இல்லை! ஆனால் இதெல்லாம் உண்மை என்பது என்ன நிச்சயம்? உன்னை எப்படி நம்புவது?" என்றான்.

''அந்த வாலிபனை உன்னிடமே ஒப்புவிக்கிறேன். நீயே அவனைச் சுரங்க வழியில் கோட்டைக்கு வெளியே அழைத்துக் கொண்டு போ! கண்ணைக் கட்டி அழைத்துக் கொண்டு போ! பழையாறைக்கு அருகில் சென்று காத்திரு! குந்தவை கொடுக்கும் மறு ஓலையுடன் இங்கே அவனை மீண்டும் அழைத்துக் கொண்டு வா! அவன் தப்பித்துக் கொள்ளப் பார்த்தாலும் உன்னை ஏமாற்றப் பார்த்தாலும் உடனே கொன்று விடு'' என்றான் நந்தினி.

''வேண்டாம்! வேண்டாம்! நீயும் அவனும் எப்படியாவது போங்கள்! அவனைச் சின்னப் பழுவேட்டரையரின் ஆட்கள் கோட்டைக்குள் இப்போது தேடுகிறார்கள்; வெளியிலும் சீக்கிரத்தில் தேடப் போகிறார்கள். அவனோடு சேர்ந்து போனால் எனக்கும் ஆபத்து வரும். நான் வந்த காரியத்தைப் பற்றிச் சொல்லு!''

''வந்த காரியம் என்னவென்று நீ இன்னமும் தெரிவிக்கவில்லையே....''

"காஞ்சிக்கும் இலங்கைக்கும் ஆட்கள் போக ஏற்பாடாகி விட்டது. இலங்கைக்கு போகிறவர்கள் பாடு ரொம்பவும் கஷ்டம். அங்கே வெகு சாமர்த்தியமாக நடந்து கொள்ள வேண்டும்...."

''அதற்கு என்னை என்ன செய்யச் சொல்கிறாய்? இன்னும் பொன் வேண்டுமா? உங்களுடைய பொன்னாசைக்கு எல்லையே கிடையாதா?"

"பொன் எங்களுடைய சொந்த உபயோகத்துக்கு அல்ல; எடுத்த காரியத்தை முடிப்பதற்காகத்தான். பின் எதற்காக உன்னை இங்கு விட்டு வைத்திருக்கிறோம்? இலங்கைக்குப் போகிறவர்களுக்குச் சோழ நாட்டுப் பொன் நாணயத்தினால் பயன் இல்லை. இலங்கைப் பொன் இருந்தால் நல்லது...."

"இதைச் சொல்வதற்கு ஏன் இத்தனை நேரம்? நீ கேட்பதற்கு முன்பே நான் எடுத்து வைத்திருக்கிறேன்" என்று நந்தினி கூறி, தான் இருந்த மஞ்சத்தின் அடியில் குனிந்தாள். ஒரு பையை எடுத்து ரவிதாஸன் கையில் தந்தாள். "இது நிறைய இலங்கைப் பொற்காசு இருக்கிறது. எடுத்துக் கொண்டு போ! அவர் வரும் நேரமாகி விட்டது!" என்றாள்.

ரவிதாஸன் பையை வாங்கிக் கொண்டு புறப்பட்டபோது, "கொஞ்சம் பொறு! அந்த வாலிபனைக் கோட்டைக்கு வெளியிலாவது கொண்டு போய் விட்டு விடு! அப்புறம் அவன் வேறு பாதையில் போகட்டும்! சுரங்க வழியை அவனுக்குக் காட்டிக் கொடுக்க எனக்கு விருப்பமில்லை!" என்று சொல்லிவிட்டு எழுந்து நின்று, இருண்ட மாளிகைப் பக்கம் பார்த்தாள்.

அங்கே ஒன்றும் தெரியவில்லை. விரல்களினால் சமிக்ஞை செய்தாள்; இலேசாகக் கையைத் தட்டினாள்; ஒன்றிலும் பலன் இல்லை.

அவளும் ரவிதாஸனும் லதா மண்டபப் பாதை வழியாகச் சிறிது தூரம் சென்றார்கள். அந்தப் பிரம்மாண்டமான இருள் மாளிகையில் அங்கிருந்து பிரவேசிக்கும் வாசலை நெருங்கினார்கள்.

ஆனால் வந்தியத்தேவனைக் காணவில்லை! சுற்றும் முற்றும் நாலாபுறத்திலும் அவனைக் காணவில்லை.



## முப்பத்தேழாம் அத்தியாயம்

# சிம்மங்கள் மோதின!

பழுவூர்ச் சகோதரர்கள் மீது தஞ்சைபுரிவாசிகள் தனிப்பட்ட அபிமானம் வைத்திருந்தார்கள். அந்தப் பழைய நகருக்குப் புதிய பெருமையும் செல்வாக்கும் அளித்தவர்கள் பழுவேட்டரையர்கள் அல்லவா?

யானை, குதிரை, ஒட்டகைகளுடன் பவனி என்றால், எந்த நாளிலும் ஜனங்களுக்கு வேடிக்கை பார்ப்பதில் குதூகலந்தான். அதிலும் தனாதிகாரி பெரிய பழுவேட்டரையர் தஞ்சையை விட்டு வெளியே போனாலும் சரி, வெளியே போயிருந்து கோட்டைக்குள் பிரவேசித்தாலும் சரி, வீதியின் இருபுறங்களிலும் ஜனங்கள் திரண்டு நின்று வேடிக்கை பார்ப்பார்கள்; ஜயகோஷம் செய்வார்கள்; வாழ்த்துக் கூறுவார்கள்; பூமாரியும், பொறி மழையும் பொழிவார்கள்.

சாதாரணமாகப் பெரிய சகோதரர் வெளியில் போய்விட்டு வந்தால் இளையவர் கோட்டை வாசலில் வந்து நின்று வரவேற்று அழைத்துச் செல்வார்.

அண்ணனும் தம்பியும் ஒருவரையொருவர் கண்டதும் தழுவிக் கொள்ளும் காட்சி நீலகிரியும் பொதிகை மலையும் ஆலிங்கனம் செய்து கொள்வது போலிருக்கும்.

இருவரும் இரண்டு யானைகள் மீதோ அல்லது குதிரைகளின் மீதோ ஏறிக்கொண்டு அருகருகே சென்றார்களானால், அந்தக் காட்சியைப் பார்க்கப் பதினாயிரம் கண்கள் வேண்டும்.

பழுவூர்ச் சகோதரர்களைச் சிலர் இரணியனுக்கும் இரண்யாட்சனுக்கும் ஒப்பிட்டுப் பேசுவார்கள். இன்னும் சிலர் 'சுந்தோப சுந்தர்கள்' என்பார்கள். இராமரையும் பரதரையும் ஒத்த அருமைச்



சகோதரர்கள் என்றும், வீமனையும் அருச்சுனனையும் ஒத்த வீரச் சகோதரர்கள் என்றும் கூறுவோரும் உண்டு.

ஆனால் இன்றைக்குப் பெரிய பழுவேட்டரையர் தஞ்சைக் கோட்டைக்குள் பிரவேசித்தபோது அவருடன் வந்த பரிவாரங்கள் வழக்கமான முழக்கங்களைச் செய்தபோதிலும் வீதிகளில் குதூகல ஆரவாரம் இல்லை. ஜனக் கூட்டமும் அதிகமில்லை. சின்னப் பழுவேட்டரையர் கோட்டை வாசலுக்கு அண்ணனை வரவேற்பதற்காக வந்து காத்திருக்கவும் இல்லை.

ஆனால் தனாதிகாரி இதைப் பொருட்படுத்தா



மல் நேரே தம்பியின் மாளிகையை நோக்கிச் சென்றார். ஏதோ ஒரு முக்கிய மான காரியத்தில் இளையவன் ஈடுபட்டிருக்க வேண்டும் என்று அவர் எண்ணினார். ஒருவேளை சக்கரவர்த்தியின் உடல்நிலை ரொம்பக் கேவலமாகி விட்டதோ, அல்லது... அல்லது, 'பெரிய காரியம்'தான் நடந்து விட்டதோ என்ற ஐயம் உண்டாயிற்று. ஆகையால், வழக்கத்தை விடத் துரிதமாகவே அவருடைய பரிவார ஊர்வலம் சென்று கோட்டைத் தளபதி சின்னப் பழுவேட்டரையரின் மாளிகையை அடைந்தது.

மாளிகை வாசலுக்குத் தமையனை வரவேற்க வந்த தளபதியின் முகத்தில் பரபரப்பும் கவலையும் காணப்பட்டன. தமையனுக்கு வணக்கம் செலுத்திப் பிறகு மார்புறத் தழுவிக் கொண்டார். இருவரும் மாளிகைக்குள் சென்றார்கள். நேரே அந்தரங்க மந்திராலோசனை மண்டபத்துக்குள் பிரவேசித்தார்கள்.

இருவரும் தனிப்பட்டதும், "தம்பி! காலாந்தகா! என்ன ஒரு மாதிரி இருக்கிறாய்? ஏதாவது விசேஷம் உண்டா? சக்கரவர்த்தி சுகமா?" என்று தமையனார் கேட்டார்.

சின்னப் பழுவேட்டரையராகிய காலாந்தக கண்டர், "சக்கரவர்த்தி எப்போதும் போல் இருக்கிறார். அவரது சுகத்தில் அபிவிருத்தியும் இல்லை; சீர்கேடும் இல்லை!" என்றார்.

"பின் ஏன் வாட்டம் அடைந்திருக்கிறது உன் முகம்? ஏன் கோட்டை வாசலுக்கு வரவில்லை? ஊரும் ஒரு மாதிரி சலசலப்புக் குறைந்திருக்கிறதே!" என்று பெரியவர் கேட்டார்.

"அண்ணா! ஒரு சிறு சம்பவம் நடந்திருக்கிறது. பிரமாதம் ஒன்றும் இல்லை. அதைப் பற்றிப் பிற்பாடு சொல்கிறேன். தாங்கள் போன காரியங்களெல்லாம்

எப்படி?" என்று காலாந்தக கண்டர் கேட்டார்.

"நான் சென்றிருந்த காரியம் பூரண வெற்றிதான். அழைத்திருந்தவர்கள் அவ்வளவு பேரும் கடம்பூருக்கு வந்திருந்தார்கள். எல்லோரும் ஒருமுகமாக உன் மருமகன் மதுராந்தகனே அடுத்த பட்டத்துக்கு உரியவன் என்று ஒப்புக் கொண்டார்கள். ஜயகோஷத்துடன் ஆமோதித்தார்கள். நியாயத்துக்குக் கட்டுப்படவில்லையென்றால் கத்தி எடுத்துப் போர் செய்து உரிமையை நிலைநாட்டவும் அவ்வளவு பேரும் சித்தமாயிருக்கிறார்கள். கொல்லி மழவனும், வணங்காமுடி முனையரையனும் கூட ஒப்புக் கொண்டார்கள் என்றால், நம்முடைய நோக்கம் நிறைவேறுவதற்குத் தடை என்ன? சம்புவரையர் தம் கோட்டை, கொத்தளம், படை, செல்வம் எல்லாவற்றையும் ஈடுபடுத்தச் சித்தமாயிருக்கிறார். அவருடைய மகன் கந்தன்மாறன் மிகத் தீவிரமாயிருக்கிறான். நடுநாட்டையும் திருமுனைப்பாடி நாட்டையும் பற்றிக் கவலையேயில்லை. சோழ தேசந்தான் எப்போதும் நம் கையில் இருக்கிறது. வேறு என்ன யோசனை? திருக்கோவலூர் மலையமான், பல்லவன் பார்த்திபேந்திரன், கொடும்பாளூர் வேளான் இந்த மூன்று பேருந்தான் ஒருவேளை எதிர்க்கக்கூடும். அவர்களில் கொடும்பாளூரான் இங்கில்லை; இலங்கையில் இருக்கிறான். மற்ற இருவராலும் என்ன புரட்டிவிட முடியும்? கூடிய சீக்கிரத்தில் சக்கரவர்த்தியிடம் சொல்லி உடனே முடிவு செய்துவிட வேண்டியதுதான்!" என்றார் பெரிய பழுவேட்டரையர்.

"தலைவர்களைப் பற்றித் தாங்கள் சொல்வதெல்லாம் சரி; ஜனங்கள்? ஜனங்கள் ஆட்சேபித்தால்?" என்று கேட்டார் காலாந்தக கண்டர்.

"ஆகா! ஜனங்களை யார் கேட்கப் போகிறார்கள்? ஜனங்களைக் கேட்டுக் கொண்டா இராஜ்ய காரியங்கள் நடக்



கின்றன? ஜனங்கள் ஆட்சேபிக்கத் துணிந்தால், மறுபடியும் அவர்கள் இம்மாதிரி காரியங்களில் பிரவேசிக்காதபடி செய்துவிட வேண்டும். அப்படி ஒன்று நேரும் என நான் நினைக்கவில்லை. சக்கரவர்த்தியின் விருப்பம் என்றால் பேசாமல் அடங்கி விடுவார்கள். மேலும், அருள்மொழிவர்மன் நல்லவேளையாக இலங்கையில் இருக்கிறான். அவன் இருந்தாலும் ஒருவேளை ஜனங்கள் தங்கள் குருட்டு அபிமானத்தைக் காட்ட முயல்வார்கள். ஆதித்த கரிகாலன் மீது ஜனங்கள் அவ்வளவு பிரேமை கொண்டிருக்கவில்லை. மதுராந்தகன் மீது அவர்களுடைய அபிமானத்தைத் திருப்புவது சுலபம். 'சிவபக்தன்', 'உத்தம குணம் படைத்தவன்' என்று ஏற்கெனவே பெயர் வாங்கியிருக்கிறான். சுந்தர சோழரின் புதல்வர்கள் இருவரைக் காட்டிலும் உன் மருமகனுடைய முகத்தில் களை அதிகம் என்பதுதான் உனக்குத் தெரியுமே? 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்று கருதும் முட்டாள் ஜனங்கள் 'மதுராந்தக சக்கரவர்த்தி வாழ்க' என்று கோஷிக்காவிட்டால்தான் ஆச்சரியமாயிருக்கும். எப்படியிருந்தாலும் நான் ஒருவன் இருக்கும்போது உனக்கு என்ன கவலை....?''



''ஆனால் வேளக்காரப் படை இருக்கிறதே! அவர்களை எப்படிச் சமாளிப்பது?''

''வேளக்காரப் படையார் சுந்தர சோழருக்குத்தான் உயிர்ப் பலி விரதம் எடுத்தவர்களே தவிர, அவருடைய பிள்ளைகளுக்கு அல்லவே? அப்படி அவர்கள் குறுக்கிட்டாலும் உன்னுடைய கோட்டைக் காவல் படை எங்கே போயிற்று? ஒரு நாழிகைப் போதில் அவ்வளவு பேரையும் பிடித்துப் பாதாளச் சிறையில் தள்ள வேண்டியதுதானே?''

''அண்ணா! முக்கியமான எதிர்ப்பு பழையாறையிலிருந்துதான் வரும். அந்தக் கிழவியும் குமரியும் சேர்ந்து என்ன சூழ்ச்சி செய்வார்களோ, தெரியாது. அதைத்தான் முக்கியமாகக் கவனிக்க வேண்டும்....''

''தம்பி! காலாந்தகா! போயும் போயும் இரண்டு பெண் பிள்ளைகளுக்கா என்னைப் பயப்படச் சொல்கிறாய்? அவர்களுடைய தந்திர மந்திரங்களுக்கெல்லாம் மாற்று என்னிடம் இருக்கிறது. கவலைப் படாதே!''

''இரண்டு பிள்ளைகளையும் தஞ்சைக்கு வரும்படி அழைப்பு அனுப்ப வேண்டும் என்று சக்கரவர்த்தி கட்டளையிட்டிருக்கிறார்...''

"ஆதித்த கரிகாலன் வரமாட்டான். ஒரு வேளை அருள்மொழி தந்தை கட்டளைப்படி புறப்பட்டு வருவான். வந்தால், அவனைத் தடுக்க வேண்டியதுதான்! மதுராந்தகனுக்கு இளவரசுப் பட்டம் கட்டிச் சிம்மாசனத்தில் சகல அதிகாரங்களுடன் ஏற்றிய பிறகுதான் அவர்கள் இருவரும் வந்தால் வரலாம். அதற்கு முன் வரக் கூடாது. இதை என்னிடம் விட்டு விடு! மற்றபடி நீ என்னவோ சிறிய விசேஷம் இங்கே நடந்ததாகச் சொன்னாயே, அது என்ன?"



"காஞ்சியிலிருந்து வாலிபன் ஒருவன் வந்தான். சக்கரவர்த்திக்கு ஒரு ஓலையும் குந்தவைக்கு ஒரு ஓலையும் கொண்டு வந்தான்...."

"அவனை என்ன செய்தாய்? ஓலைகளைப் பிடுங்கிக் கொண்டு அவனைச் சிறைப்படுத்தியிருக்கிறாய் அல்லவா?"

"இல்லை, அண்ணா! கடம்பூரில் தங்களைப் பார்த்ததாகவும், சக்கரவர்த்தியிடம் நேரில் கொடுக்கச் சொன்னதாகவும் கூறினான். அது உண்மையா?"

"ஆகா! வெறும் பொய்! கடம்பூரில் அழையாத வாலிபன் ஒருவன் - கந்தன் மாறனின் சிநேகிதன் என்று சொல்லிக் கொண்டு வந்திருந்தான். ஆனால் ஓலை கொண்டு வந்திருப்பதாக என்னிடம் சொல்லவே இல்லையே! அவன் முகத்தைப் பார்த்ததுமே சந்தேகித்தேன். அவனிடம் நீ ஏமாந்து போய் விட்டாயா, என்ன?"

"ஆம், அண்ணா! ஏமாந்துதான் போய் விட்டேன். தங்கள் பெயரைச் சொன்னதால் ஏமாந்தேன்!"

"அட மூடா! ஏமாந்து என்ன செய்தாய்? ஓலையைச் சக்கரவர்த்தியிடம் கொடுத்து விட்டாயா? அதைப் பார்க்கக் கூட இல்லையா?"

"பார்த்தேன். அதில் ஒன்றுமில்லை. காஞ்சி பொன் மாளிகைக்கு வரும்படிதான் எழுதியிருந்தது. ஓலையைக் கொடுத்து விட்டு அந்த வாலிபன் ஏதோ 'அபாயம்' என்று சொல்லிக் கொண்டிருந்தான்...."

"பிறகாவது, சந்தேகித்துச் சிறைப் படுத்தவில்லையா?"

"சந்தேகித்தேன்; ஆனால் சிறைப் படுத்தவில்லை!"

"பின்னே, என்ன செய்தாய்?"

"ஊர் பார்க்க வேண்டும் என்றான். பார்த்துவிட்டு வரட்டும் என்று இரண்டு ஆளையும் பின்னோடு அனுப்பினேன். அவர்களை ஏமாற்றி விட்டு மறைந்து விட்டான். அவனைத் தேடுவதற்குத்தான் ஏற்பாடு செய்து கொண்டிருந்தேன். அதனால்தான் கோட்டை வாசலுக்குக் கூட வரவில்லை; நகர மக்களுக்கு எச்சரிக்கை செய்திருக்கிறேன்..."

"அட சீ! நீயும் ஒரு மனிதனா? மீசை முளைக்காத ஒரு சிறு பிள்ளையிடமா ஏமாந்து போனாய்? உனக்குக் காலாந்தக கண்டன் என்று பெயர் வைத்தேனே, என் முட்டாள்தனத்தை நொந்து கொள்ள வேண்டும். உன்னைக் கோட்டைத் தளபதியாக்கினேனே? எனக்கு இது வேண்டியதுதான்! என் பெயரைச் சொல்லி ஒரு தறுதலைப் பயல் உன்னை ஏமாற்றி விட்டான் என்று சொல்லிக் கொள்ள வெட்கமாயில்லையா?"

"வெறுமனே உங்கள் பெயரைச் சொன்னதோடு இல்லை. உங்கள் முத்திரை மோதிரத்தையும் காட்டினான். அதை அவனுக்கு நீங்கள் கொடுத்தீர்களா?"

"இல்லவே இல்லை! அப்படியெல்லாம் ஏமாந்து விட நான் உன்னைப் போல் ஏமாளியா?"

"அவனிடம் முத்திரை மோதிரம் இருந்தது உண்மை. என்னிடமும் காட்டினான். கோட்டை வாசல் காவலர்களிடமும் காட்டி விட்டுத்தான் உள்ளே புகுந்தான். நீங்கள் கொடுத்திராவிட்டால், இன்னும் ஒரே ஒரு இடத்திலிருந்துதான் அதை அவன் பெற்றிருக்க முடியும்."

"யாரைச் சொல்கிறாய்?"

"தங்களால் ஊகிக்க முடியவில்லையா? இளையராணியைத்தான் சொல்கிறேன்..."

"சீச்சீ! ஜாக்கிரதை! நாக்கை அறுத்து விடுவேன்!"

"நாக்கை அறுத்தாலும் அறுங்கள்; தலையைக் கொய்தாலும் கொய்யுங்கள். வெகு நாளாய்ச் சொல்ல விரும்பியதை இப்போது சொல்லி விடுகிறேன். விஷ நாகத்தை அழகாயிருக்கிறது என்று எண்ணி வீட்டில் வைத்து வளர்க்கிறீர்கள். அது ஒருநாள் கடிக்கத்தான் போகிறது. நம் எல்லாரையும் நாசம் செய்யப் போகிறது! வேண்டாம்! அவளைத் துரத்தி விட்டு மறு காரியம் பாருங்கள்!"

"காலாந்தகா கண்டா! வெகு நாளாக உனக்குச் சொல்ல எண்ணியிருந்த ஒரு விஷயத்தை நானும் உனக்கு இன்று சொல்லுகிறேன். வேறு எந்தக் காரியத்தைப் பற்றி வேண்டுமானால் உன் அபிப்ராயத்தை நீ தாராளமாய்ச் சொல்லலாம். என் காரியம் பிடிக்காவிட்டால் தைரியமாகக் கண்டித்துப் பேசலாம். ஆனால் நான் கைப்பிடித்து மணந்து கொண்டவளைப் பற்றிக் குறைவாக இனி எப்போதேனும் ஒரு வார்த்தை சொன்னாலும் சரி; உன்னை வளர்த்த இதே கையினால் உன்னைக் கொன்று விடுவேன். உனக்குக் கத்தி பிடிக்கச் சொல்லிக் கொடுத்த நான், உன் கத்தியைப் பிடுங்கியே உன்னை வெட்டிக் கொல்லுவேன்! ஜாக்கிரதை!"

அந்த இரு சகோதரர்களும் அப்போது போட்டுக் கொண்ட ஆத்திரச் சொற்போர் சிங்கமும் சிங்கமும் மோதிப் பயங்கரமான சண்டை பிடிப்பது போலவே இருந்தது. அவர்களுடைய குரலும் சிம்ம கர்ஜனையைப் போலவே முழங்கிற்று. அவர்கள் பேசியது அந்தரங்க மந்திராலோசனை மண்டபத்தில்தான் என்றாலும், வெளியில் காத்திருந்தவர்களுக்கெல்லாம் அவர்களுடைய குரல், விவரம் இன்னதென்று தெரியாமல் இடிமுழக்கம் போல் கேட்டது. அனைவரும் 'என்ன விபரீதமோ' என்று நடுங்கிக் கொண்டிருந்தார்கள்.

(தொடரும்)

**செப்டம்பர் 9, 1951 தேதியிட்ட கல்கி இதழில் இடம்பெற்ற கட்டுரை இது... இந்த இதழில் இடம்பெற்றுள்ள நூலகத் துறை பற்றிய கட்டுரை இதன் தொடர்ச்சி போல் அமைந்திருக்கும் அதிசயத்தைக் கவனியுங்கள்!**

# புத்தகாலயத்துக்கு வேண்டியது என்ன?

சென்னை நகர சபையில் சமீபத்தில் ஓர் அங்கத்தினர் கேள்வி ஒன்றைப் போட்டார். "புத்தகாலயத்துக்கு என்று வரி வாங்கிப் பணம் சேர்த்து வைத்திருக்கிறீர்களே? அந்தப் பணம் செலவாகவில்லையாதலால் வேறு எதற்காவது உபயோகிக்கலாமே?'' என்று கேட்டார். "புத்தகாலயப் பணத்தை வேறு காரியத்துக்கு உபயோகிப்பது சாத்தியமில்லை!" என்று பதில் சொல்லப்பட்டது.

நம்முடைய நாட்டில் சாதாரணமாய் நல்ல காரியங்களுக்குப் பணம் கிடைப்பதுதான் கஷ்டமாயிருக்கும். பணம்

## அமரர் கல்கி

இருந்தால் எவ்வளவோ காரியங்களைச் சாதித்து விடலாமே என்று தோன்றும். "திட்டம் போட்டு என்ன பயன்? திட்டத்தை நடத்தப் பணம் எங்கே?" என்று கேட்பார்கள்.

புத்தகாலயங்களை ஏற்படுத்துவதற்கு இப்போது பணம் தயாராயிருக்கிறது. ஆனால் புத்தகாலயங்கள் ஏற்படவில்லை. அந்தப் பணத்தைக் கொண்டு வேறு செலவு செய்யலாமே என்ற யோசனையும் சொல்லப்படுகிறது. இது விந்தையான நிலைமை அல்லவா?

இருபது ஆண்டுகளுக்கு முன்னால் சென்னையில் புத்தகாலயச் சங்கம் (Madras Library Association) என்று ஒரு சங்கம் ஆரம்பமாயிற்று. நாடெங்கும் புத்தகாலயங்களை ஏற்படுத்தி மக்களிடையே கல்வியறிவை வளர்க்க வேண்டும் என்பது சங்கத்தின் நோக்கம். இதற்காக இந்தச் சங்கத்தினர் மிக்க சிரமம் எடுத்துப் பிரயத்தனம் செய்து வந்தார்கள். அந்தப் பிரயத்தனம் இருபது ஆண்டுகளுக்குப் பிறகு பயன் தந்திருக்கிறது. இச் சங்கத்தின் முயற்சியினால் சென்னைச் சட்டசபையில் சென்ற வருஷம் புத்தகாலயச் சட்டம் நிறைவேறியது. இங்கிலாந்து முதலிய நாகரிக நாடுகளில் உள்ளதை அனுசரித்த சட்டம் இது. இதன்படி நகரசபைகளும் பஞ்சாயத்து போர்டுகளும் 'புத்தகாலய வரி' என்று ஒரு தனி வரி வசூலிக்கலாம். சென்னை நகரத்தைத் தவிர மற்ற இடங்களில் வசூலாகும் வரியைப் போல் சமமான தொகை மாகாண சர்க்கார் நன்கொடை அளிப்பார்கள். இந்தப் பணத்தைக் கொண்டு நகர சபைகளும் பஞ்சாயத்துக்களும் புத்தகாலயங்கள் ஏற்படுத்தலாம். மக்களிடையே கல்வியறிவைப் பரப்பலாம்.

சட்டம் சென்ற வருஷம் நிறைவேறிய உடனே சென்னை நகரசபையோர் புத்தகாலய வரி (Library Cess) வசூலிக்கத்



தொடங்கினார்கள். வசூலித்து ஐந்து லட்சம் ரூபாய் சேர்த்து வைத்திருக்கிறார்கள். ஆனால் புத்தகாலயம் ஒன்று கூட இதுவரை ஆரம்பித்தபாடில்லை. அதற்கென்று சர்க்கார் 'லைப்ரரி அத்தாரிட்டி' என்ற பெயருடன் அதிகார ஸ்தாபனங்களை ஏற்படுத்தியிருக்கிறார்கள். இன்னும் இந்த ஸ்தாபனங்கள் எங்கும் வேலை தொடங்கியதாகத் தெரியவில்லை.

ஆனால் சீக்கிரத்தில் வேலை தொடங்கி விடுவார்கள் என்பது நிச்சயம். அதிலும் சென்னை நகரசபையில் பணத்தைப் பற்றிக் கேள்வி கேட்டு விட்டார்கள் அல்லவா? ஆகையால் உடனே வேலை ஆரம்பித்து விடுவார்கள். சட்டென்று ஒரு பெரிய கட்டடத்தை வாடகைக்குப் பேசுவார்கள். அல்லது விலைக்கு வாங்குவார்கள். பளபளவென்று வார்னிஷ் கொடுத்து ஜொலிக்கும் மேஜைகளும் நாற்காலிகளும் வாங்கிப் போடுவார்கள். மானேஜர், உதவி மானேஜர், டைபிஸ்டுகள், குமாஸ்தாக்கள், பியூன்கள் முதலியவர்களை நியமிப்பார்கள். இவர்களுக்குச் சம்பளம் எவ்வளவு, வருஷா வருஷம் சம்பள உயர்வு எவ்வளவு, கிராக்கிப்படி எவ்வளவு, வீட்டு வாடகை அலவன்ஸ் எவ்வளவு என்பதை நிர்ணயிப்பார்கள்.

பிறகு பணம் பாக்கியிருந்தால் நகரின் பல பகுதிகளில் புத்தகாலயங்களுக்கு இடம்பிடிப்பார்கள். வாடகை கொடுப்பார்கள். பெஞ்சி நாற்காலி மேஜை அலமாரி முதலிய சாமான்களை வாங்கி நிரப்புவார்கள்.

கடைசியாக, புத்தகாலயத்தில் வைக்கப் புத்தகம் வாங்க வேண்டும் என்று பார்க்கும்போது, அதற்குப் பணம் இராது!

மேஜை நாற்காலிகள் வாங்கியது போகக் கொஞ்சம் பணம் மிஞ்சியிருந்தால், அதைக் கொண்டு சில புத்தகங்கள் வாங்கலாமா என்று பார்ப்பார்கள்.

அப்போது ஒரு முக்கியமான விஷயம் புலனாகும்.

அதாவது பணம் இருந்தாலும் அதைக் கொண்டு வாங்குவதற்குத் தகுந்த புத்தகங்கள் இல்லை!

பொது மக்கள் படித்துப் பயன் பெறுவதற்குரிய தமிழ்ப் புத்தகங்கள் இல்லை!

இந்த விஷயம் சந்தேகமறத் தெரிந்த பிறகு வேறு என்ன செய்வது? மிச்சமுள்ள பணத்தையும் கட்டடம் மேஜை நாற்காலி சிப்பந்திச் செலவுகளில் போட வேண்டியதுதான்.

புத்தகாலயத்துக்கென்று வரி கொடுத்த பொது மக்கள் மேற்படி கட்டடங்கள் நாற்காலிகள் மேஜைகள் அலமாரிகளை வலம் வந்து கன்னத்தில் போட்டுக் கொண்டு கும்பிட்டு விட்டுத் திரும்ப வேண்டியதுதான்!

புத்தகங்களைப் படித்துக் கண்ணைக் கெடுத்துக் கொள்ள வேண்டிய அவசியம் யாருக்கும் ஏற்படாது அல்லவா?

இத்தகைய விசித்திரமான அவல நிலைமை ஏற்படாமலிருக்கும் பொருட்டுச் சில காலத்துக்கு முன்பு தமிழ் எழுத்தாளர் சங்கத்தார் ஒரு யோசனையை வெளியிட்டார்கள். மாகாண அரசாங்கத்தார் புத்தகாலயங்களுக்குப் பண மானியம் கொடுத்து, அது மேஜை நாற்காலிகளில் வீண் விரயமாவதற்குப் பதிலாக, நல்ல புத்தகங்களைத் தேர்ந்தெடுத்து மொத்தமாக வாங்கிப் புத்தகசாலைகளுக்கு விநியோகிக்கலாமே என்பதுதான் அந்த யோசனை.

இப்படி மொத்தமாக வாங்குவதாயிருந்தால் பதிப்பாளர்களும் உற்சாகமாக நல்ல புத்தகங்களை வெளியிடுவார்கள்; குறைந்த விலைக்கும் கொடுப்பார்கள்.

அதுமட்டுமின்றி, பொது மக்களுக்கு உண்மையில் பயன்படக் கூடாத உபயோகமற்ற புத்தகங்களை வாங்கி நிரப்ப இடமில்லாமலும் போய்விடும்.

புத்தகாலயங்களில் உபயோகமான நல்ல புத்தகங்களே வைக்கப்படுகின்றன என்பதை அரசாங்கத்தார் நிச்சயப்படுத்திக் கொள்ளலாம் அல்லவா?

புத்தகாலயச் சட்டமும் புத்தகாலய வரியும் நல்ல முறையில் பயன்பட வேண்டும். புத்தகாலய வரி கொடுப்பவர்களும் இதில் சிறிது கவனம் செலுத்த வேண்டும்.

# காந்திஜிக்கு ஏன் நோபல் பரிசு கிடைக்கவில்லை?

ஐம்பது வருடங்களுக்குப் பிறகே வெளியிடப்பட வேண்டும் என்ற ரகசியக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட நூற்றுக் கணக்கான டாக்குமென்ட்டுகள், ஆஸ்லோவில் உள்ள நேபல் இன்ஸ்டிட்யூட்டில் இந்த ஆண்டு வெளிச்சத்துக்கு வந்திருக்கின்றன.

அதில் பெரும் பரபரப்பை உண்டாக்கிய ஒரே ஒரு டாக்குமென்ட் - காந்திஜிக்கு நோபல் சமாதானப் பரிசு கொடுக்கப்படாததன் காரணத்தைச் சொல்லுகிறது!

காந்திஜிக்கு 1937, 1947, 1948 ஆகிய மூன்று ஆண்டுகளிலும் நோபல் பரிசு கொடுக்கப் பரிந்துரை செய்யப்பட்டும், மூன்று முறையும் பரிந்துரை ஏற்கப்படவில்லை.

இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு, பிரிட்டன் மீதான நார்வேயின் விசுவாசம் முதல் காரணமாகச் சொல்லப்படுகிறது.

ஐந்து மெம்பர்கள் கொண்ட ஜூரி, முழுக்க முழுக்க பிரிட்டிஷ் விசுவாசிகளைக் கொண்டதாகவே இருந்திருக்கிறது. சுதந்தரம் கிடைத்த உடன், இந்தியாவும் பாகிஸ்தானும் மோதிக் கொண்டதைப் பார்த்த ஜூரியினர், காந்திஜிக்கு நோபல் சமாதானப் பரிசு கொடுக்கத் தயக்கம் காட்டினார்களாம்.

"குழுவின் விவாதக் கூட்டங்களில் குறிப்புக்கள் (மினிட்ஸ்) எடுக்கும் வழக்கம் இல்லாததால், காந்திஜிக்கு நோபல் பரிசு மறுக்கப்பட்டதன் உண்மையான காரணத்தை அறிய வழியே இல்லாமல் போய்விட்டது!" என்கிறார் நோபல் இன்ஸ்டிட்யூட்டின் இயக்குநர் கிர லண்டஸ்டட்.

"எனக்குத் தோன்றுகிற ஒரே ஒரு முக்கியக் காரணம், நார்வேயின் வெளிநாட்டுக் கொள்கை அப்பட்டமான பிரிட்டிஷ் சார்பு உடையதாக இருந்தது என்பதுதான்!" என்கிறார்.

"நார்வேயின் பாதுகாவலர்கள் பிரிட்டிஷார்தான் என்று அவர்கள் திடமாக நம்பினார்கள்!" என்கிறார் ஆஸ்லோ பல்கலைக் கழகப் பேராசிரியர் ஹெல்ஜ் ஃபாரோ.



ஆவணங்கள் எல்லாவற்றையும் ஓர் அட்டைப் பெட்டியிலிருந்து எடுத்துப் பார்த்ததில், 1947 ஆம் வருடப் பரிந்துரைப் பட்டியலில் இருக்கும் ஆறு பேரில் காந்திஜி பெயர்தான் பிரதானமாக இருந்திருக்கிறது.

1947 ஆம் வருடம் அவருக்குப் பரிந்துரை செய்யப்பட்ட குறிப்பில், 'காந்திஜிக்குக் கிடைத்த மிகப் பெரிய வெற்றியும் (இந்தியாவுக்கு விடுதலை), மிகப் பெரிய தோல்வியும் (பிரிவினை) இந்த வருடத்தில்தான் நடந்தது' என்று எழுதியிருக்கிறதாம்!

1948 முன்பகுதியில், அவர் சுடப்பட்டு இறந்த பிறகு, நோபல் சமாதானப் பரிசுத் தேர்வுக் குழுவுக்கு வந்த பரிந்துரைக் கடிதங்கள் ஏராளம்! அமெரிக்க நண்பர்கள் சர்வீஸ் கமிட்டியும், பிரிட்டனில் இருந்த ஃபிரண்ட்ஸ் சர்வீஸ் கவுன்சிலும் காந்திஜி பெயரைச் சிபாரிசு செய்திருந்தனவாம்.

பிப்ரவரி முதல் தேதி பரிந்துரைகள் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி. ஆனால் காந்திஜி சுடப்பட்டு இறந்தது அதற்கு இரண்டு நாள் முன்பு! 'உயிரோடிருக்கிற தகுதியான நபர் இந்த வருடம் (1948) யாரும் இல்லை' என்று, அந்த ஆண்டு நோபல் சமாதானப் பரிசே வழங்கவில்லையாம். ஆனால் "அன்றைக்கு இருந்த விதிமுறைகளின்படி, அவர் மறைவுக்குப் பிறகாவது காந்திஜிக்கு உலக சமாதானப் பரிசு கொடுத்திருக்கலாம்!" என்கிறார் லண்டஸ்டட்.

— சித்தார்த்

ஆதாரம் : ஹாங்காங் ஸ்டாண்டர்டு

# அக்னி சர்மா பக்கம்



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

பொதுவாவே மனக்கிலேசம், விரக்தியெல்லாம் இந்த வாரம் உங்களுக்கு இருக்கும்னாலும் இதையும் மீறி உங்க திறமை வெளிப்படும். மனசுக்குப் பிடிச்ச சில விஷயங்களும் நடக்கும். ஒரு எஸ்.டி.டி. கால் வந்து கூட உங்களுக்கு அனுகூலம் தர சான்ஸ் இருக்கு. திடீர்ப் பணவரவுக்கும் சான்ஸ் இருக்குங்க. ஆனாக் கூட கொடுக்கல் வாங்கல் விஷயத்தில அளவோட இருங்க. அரசுப் பணியாளர்கள் எச்சரிக்கையா இருக்கணும். வீடு, மனை, ஷேர் மாதிரியான விஷயங்களைத் தள்ளிப் போடுங்க. முடிஞ்சவங்க ஒரு நடை திருநள்ளாறுக்குப் போய் வாங்க.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

சனிப் பெயர்ச்சி இருக்கறதால சின்னச் சின்ன பிரச்னைகள் வருங்க. அலைச்சல், மனக் குழப்பமும் உண்டாகும். பொருளாதாரம் சுமுகமா இருந்தாலும் செலவுங்க எக்கச்சக்கமா வரும். நிர்வாகத் துறை, மருத்துவத் துறை மற்றும் ஆராய்ச்சித் துறைகள்ல இருக்கறவங்க பொறுப்போட செயல்படாட்டா சரிவு உறுதியாயிடும். அரசியல்ல இருக்கறவங்க ரொம்பவே எச்சரிக்கையா இருக்கணும். உத்தியோகஸ்தர்களுக்கு டிரான்ஸ்ஃபர் வரலாம்; இல்லேன்னா வேலைப் பளுவையாவது உங்க முதுகுல சுமத்துவாங்க.



**மிதுனம் :** *(மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

இந்த வாரம் உங்க காட்டுல மழைன்னு சொல்ற அளவுக்குப் பலன்கள் நடக்கும். எடுத்த காரியம் யாவிலும் வெற்றிதான். பணத்துக்கும் பஞ்சமில்லை. ஸ்பெகுலேஷன், ஷேரிலும் லாபம்தான். வெளிநாட்டுக்காரர் இல்லேன்னா வேறு மொழி பேசறவங்களால ஆதாயம் வர சான்ஸ் இருக்கு. சிலர் ஊட்டி, கொடைக்கானல்னு வெயிலுக்கு இதமா உல்லாசப் பயணம் போறதுக்கும் வாய்ப்பிருக்கு. வியாபாரிங்க, குறிப்பா கெமிகல்ஸ், தோல் பொருள் வியாபாரம் சம்பந்தப்பட்டவங்களுக்கு லாபம் உறுதி. உத்தியோகஸ்தர்களுக்குப் பதவி உயர்வு, ஊதிய உயர்வு இரண்டுக்குமே வாய்ப்புகள் அதிகம். வீட்டுல டும்டும் முக்கும் ஏற்பாடு நடக்கும். சிலர் புது வீடும் வாங்கலாம்.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

இந்த வாரம் 10-ம் இடத்துல சூரியன், செவ்வாய், சனி இருக்கறதால உங்க சக்தி அபாரமா வெளிப்படும். இதுவரைக்குமிருந்த சங்கடமெல்லாம் நீங்கித் தன்னம்பிக்கையும் தெம்பும் வரும். எதிரிகள் விலகி ஓடுவாங்க. எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர் துறைல இருக்கறவங்களுக்கு செழிப்பான திருப்பம் வரும். புதிய பதவிகள், பொறுப்புகளெல்லாம் உங்களைத் தேடி வரும். அதிக சிரத்தை காட்டுனீங்கன்னா பாராட்டும் புகழும் உறுதி. புதிய முயற்சிகளும் வெற்றியையே தரும். வீடு, மனை விஷயங்களிலும் ஆதாயம்தான். பெண்களுக்குப் புடைவை நகைன்னு வந்து சேரும். மொத்தத்தில சந்தோஷமா வாரம்தான்னாலும் கொடுக்கல் வாங்கலில் மட்டும் கொஞ்சம் உஷாராயிருங்க.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

உங்க மதிப்பும் அந்தஸ்தும் குப்புனு உசந்து நிக்கற வாரம் இது. எதிரிங்க அடங்கிப் போவாங்க. ஸ்பெகுலேஷன், ஷேர், கொடுக்கல் வாங்கல் எல்லாத்துலயும் அபிவிருத்திதான். திருமணம், குழந்தைப் பேறு மாதிரி குடும்பத்துல சுப காரியங்கள் நடக்கும். ஆனாலும் சிலருக்குச் சிறுசிறு பிரச்னைகள், அலைச்சல்கள் ஏற்படலாம். பிரயாணத்தைத் தள்ளிப் போடறது நல்லது. பெற்றோர் உடல் நிலைல கவனம் காட்டுங்க. கலைத்துறைல இருக்கறவங்களுக்குக் கொஞ்சம் மந்த கதிதான்.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

முக்கியமான கிரகங்கள் எதுவும் உங்களுக்கு இந்த வாரம் சாதகமா இல்லீங்க. அதனால எந்தக் காரியத்துலயும் முழு திருப்தி வராது. மத்தவங்களால மனச் சஞ்சலம் வரலாம். குடும்பத்திலும் அமைதி குறையும்கிறதால எதிலும் உணர்ச்சிவசப்படாம இருங்க. வாக்கினில் இனிமை அவசியம் இருக்கணும். செலவு அதிகமா இருக்கும். சிக்கனம் கட்டாயம். தொழிலாளி - முதலாளி உறவும் சுமுகமா இருக்காது. உத்தியோகஸ்தர்களுக்கு விரும்பாத இடத்துக்கு டிரான்ஸ்ஃபர் கிடைக்கற சான்ஸ் இருக்கு. சீக்கிரம் போயாகணுமேன்னு ஓடற பஸ்ஸிலோ ரயிலிலோ ஓடிப் போய் ஏறிடாதீங்க. விபத்து நிச்சயம். மகான்கள் தரிசனமும் தெய்வ வழிபாடும் ஒரு நம்பிக்கையைத் தரும்.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

## ஏப்ரல் 29 முதல் மே 5 வரை

**மேஷ ராசிக்காரரான கார்ட்டூனிஸ்ட் 'மதி' ஒரு நடை திருநள்ளாறு போயிட்டு வந்தால் தேவலையாம்.**



இதுவரை ஏதாவது குழப்பத்தில இருந்தீங்கன்னா, இந்த வாரம் அது போயே போச்சுங்க. பண விஷயத்திலும் நல்ல அபிவிருத்தி இருக்கும். சினிமா, நாட்டியம் மாதிரியான கலைத் துறையில் இருக்கறவங்களுக்கு நல்ல திருப்பம் வரும். இதுவரைக்கும் ஒத்திப் போய்க்கிட்டே இருந்த ஆசைகள் இந்த வாரம் தித்திக்கிற விதமா நிறைவேறும், பெண்களுக்கு! பயணத்தால ஆதாயம் கிடைக்கும்னாலும் எச்சரிக்கையா இருங்க. அரசு, தனியார் துறை உத்தியோகஸ்தர்களுக்குப் பதவி உயர்வு மாதிரியான நல்ல மாற்றம் இருக்கும்.



**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

இத்தனை நாளா தயங்கிக்கிட்டே இருந்த காரியங்களில் இந்த வாரம் துணிச்சலா இறங்கி ஜெயிப்பீங்க. எதிரிங்க பணாலாயிடுவாங்க. வீட்டுலயும் விருந்து கேளிக்கைன்னு சந்தோஷமே நிலவும். புதுசா ஏதாவது வாகனம் வாங்குவீங்க. இல்லேன்னா இருக்கற பழைய வாகனத்தை நல்ல விலைக்கு வித்து சந்தோஷப் படுவீங்க. வெளிநாட்டுத் தொடர்பு இருந்தா அதால உற்சாகம் பிறக்கும். சிலருக்குத் திடீர்ப் பயணம் போக வேண்டி வரலாம். வெகு நாளாத் தொந்தரவு குடுத்த பல்வலி, வாயுக் கோளாறு மாதிரியானதெல்லாம் இப்ப ஜகா வாங்கி ஓடிடும்.



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

கிரக சஞ்சாரம் சாதகமா இல்லீங்க. பண விஷயம் விசேஷமா இருக்காது. உடம்பும் படுத்தலாம். குடும்பத்திலும் பிரச்னைகள் வந்து மனசைக் குழப்பும். கொடுக்கல், வாங்கலில் மட்டுமல்ல; எல்லா விஷயத்திலயும் உஷாரா இருக்கணும். ஜாமீன் கையெழுத்துப் போடறது, பிரயாணம் இதெல்லாம் இந்த வாரம் வேண்டவே வேண்டாம். எந்தக் காரியமா இருந்தாலும் ரொம்பவும் சிரமப்பட்டுத்தான் கைகூடும். நண்பர்கள் உதவுவாங்க. எதுவானாலும் நிதானத்தைக் கடைப்பிடிச்சீங்கன்னா சிக்கல் இல்லாம சமாளிக்கலாம்.



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

குடும்பத்துல சுபகாரியங்கள், சொந்தக்காரங்க வருகைன்னு ஒரே குஷி தான்! உல்லாசப் பயணத்துக்கும் சான்ஸ் இருக்கு. சட்டம், காவல், ராணுவத் துறையினருக்குப் பாராட்டுக் கிடைக்கும்னாலும் சோதனைகளையும் சந்திக்க வேண்டியிருக்கும். நல்லவங்களோட நட்பு கிடைக்கும். ஆனாலும் புதிய முதலீடு மாதிரியான விஷயங்கள்ல உஷாரா இல்லேன்னா விரயமாயிடும். கால் தடுக்கி, வழுக்கி விழுந்து அடிபடறதுக்குச் சான்ஸ் இருக்கு.



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

இனி உங்க வாழ்க்கைல தெரியற பாதையெல்லாம் வெற்றிக்கே அழைத்துச் செல்லும். இதுவரைக்கும் இருந்த தடைகளெல்லாம் குளோஸ்! வழக்கு கிழக்குன்னு இருந்தா அதிலும் வெற்றிப் பாதையே தெரியும். வீடு, நிலம், ரியல் எஸ்டேட் வகைகளிலும் லாபமே வரும். அம்மணிகள் சந்தோஷப்படற மாதிரி ஏதாவது வாங்கிக் குடுப்பீங்க. அப்புறமென்ன, அம்மணிகள் சந்தோஷமானா குடும்பமே குதூகலத்தில மிதக்காதா!



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

இந்த வாரம் உங்களுக்கு குரு அனுகூலமாவே இல்லீங்க. அதனால உடல் நலத்துலேர்ந்து, பண விஷயம் வரைக்கும் எல்லாமே சொல்லும்படியா இருக்காது. கடின உழைப்பையும் அலைச்சலையும் தவிர்க்கவே முடியாது. இத்தனை ஏன், டயத்துக்குச் சாப்பிடக்கூட முடியாது. புரமோஷனுக்காகக் காத்திருக்கறவங்களுக்குத் திடீர்னு ஒரு முட்டுக்கட்டை வந்து தடைப்படுத்தும். இன்னும் சிலருக்கு ஆபீஸ்ல வேலைப் பளுதான் அதிகரிக்குமே தவிர, சம்பளம் உயராது. இத்தனைக்கும் நடுவுல குடும்பத்துல சந்தோஷம் இருக்க முடியுமா? இருந்தாலும் பல்லைக் கடிச்சுக்கிட்டுப் பொறுமை காட்டுங்க; பிரச்னைகளை சமாளிச்சிடலாம். ●

**நடக்குமென்பார், நடக்கும்!**

# காரணம் சொல்லவா?

பொதுவாகப் பணிகள் எதுவும் துரிதமாக நடைபெறாத பொதுப்பணித் துறையின் தலைமை அலுவலகம். மிக உயரத்தில் மெதுவாகச் சுழலுகிற மின்விசிறி. அகல சன்னல்கள் திறந்திருக்க, மேசை மேல் தாள்களைப் படபடக்கச் செய்கிற கட்டல் காற்று. காப்பி விசாரித்துப் போகிற ப்யூன். கமலஹாசன் பற்றிப் பேசுகிற டைப்பிஸ்ட். அமானுஷ்யமாக ஆங்கிலத்தில் கேட்கிற செக்ஷன் ஆபீஸரின் குரல். செய்தித்தாளில் ரேஸ்டிப்ஸ் பார்க்கிற பக்கத்து சீட். பேனாவை மூடி வைத்துவிட்டு, விரல்களில் சொடுக்கு எடுக்கிற சேதுராமன். வங்கக் கடல் போன்ற, அந்தச் சிவப்பு நிற அழுக்குக் கட்டடத்துக்கு, அவன் மாறுதலாகி வந்திருக்கிற முதல் நாள்.

''மீட் மிஸ்டர் சேதுராமன்...''

சீட் சீட்டாக நகர்ந்து நடந்த அறிமுகப்படலம் அத்தனை மகிழ்ச்சிகரமாக இல்லை. கேஷியர் டேபிளில், அவனுக்கான முதல் அதிர்ச்சி முகத்தில் அறைந்தது.

"திஸ் இஸ் ப்ரியா. முதல் தேதியானால் நமக்கெல்லாம் படியளக்கிற பரதேவதை."

நிமிர்ந்து பார்த்தவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"ஸாரி. நீங்கள் தப்பா எடுத்துக்கக் கூடாது. என் பெண்ணுக்கு ஏனோ இந்த சம்பந்தத்தில் இஷ்டம் இல்லை..''

சொற்களைப் பாதி விழுங்கி, வியர்த்துத் தகவல் சொல்லிவிட்டுப் போன மிஸ்டர் சிவகடாட்சம். ப்ரியாவின் தந்தை.

அறிவு கெட்ட முண்டம். அவனை யார் ஊருக்கு முன்னால், பெண்ணைப் பிடித்து விட்டதாக அறிவிக்கச் சொன்னது? இப்போது பார். பொட்டச்சி பிடிக்கலைன்னுட்டாள். முகரையை எங்கு கொண்டு



வைத்துக் கொள்ளப் போகிறான்? ஒரு அலயன்ஸ், ஓர்க் அவுட் ஆவதும் ஆகாததும் சாதாரண விஷயம். ஆனால் நம் 'க்ரிப்'பை விடலாமோ? அவள் சம்மதத்தைக் கேட்ட பிறகு அல்லவா இவன் வாயைத் திறந்திருக்க வேண்டும்? அவர்



பேசுவது மேல் ஷாவனிஸம் இல்லை. ஆனால் அவமானப்படுவது யார்?

விளாசி விட்டு வெளியே போனார் அப்பா.

அவமானம். கொஞ்சம் அதிகப்படியான பிரயோகம் என்று அவன் நினைத்தான். அது பற்றி அவன் இன்னும் யோசித்திருக்க வில்லை. ஒரு பெண் தன்னை வேண்டாம் என்று சொல்லிவிட்டால் அவமானமா? மாறாக, தான் அப்படிச் சொல்லியிருந்தால்? சமூகம் வகுத்த சூத்திரத்தில் இம்மாதிரியான விஷயங்கள் பெண்களுக்கு அவமான மில்லை. ஜஸ்ட் லைக் தட். பத்தோடு இன் னொன்று.

ஆனால் அவளை வேண்டாம் என்று சொல்லத் தோன்றவில்லை. பேரழகி இல்லைதான். பெரும் வசதி இல்லைதான். மாதாந்திர சீட்டு, மளிகைக் கடை பாக்கி, ப்ளாக் அண்ட் ஒயிட் டீவி என்று சரியான மிடில் கிளாஸ் லட்சணங்கள் உள்ள அவள் வீட்டில்தான் போய்ப் பெண் பார்த்தான். ஒரே துறை, கிட்டத்தட்ட ஒரே சம்பளம், ஒரே படிப்பு என்கிற விஷயம் தெரியவந் தபோது, கூடுதல் பொருத்தங்களாகக் கருதிக் கொண்டான். பிடித்திருந்ததால், பிடித்திருக் கிறது என்று, ஒத்திவைக்காமல் அறிவித்து விட்டான். அதுதான் தவறு என்று அப்பா சொன்னார்.

''எதிலும் லேடீஸ் ஃபர்ஸ்ட்னு ஏன் சொல்றான்? பெண்மையை வணங்குதல் என்றா நினைக்கிறாய்? நெவர்! எவனாவது இப்படி செருப்படி பட்டிருப்பான். ஞானம் வந்து, ஒரு டிஃபென்ஸிவ் நோக்கில் ஆரம் பிச்சிருப்பான்....''

அப்பா சற்று அதிரடி ரகம். அவருக் கான பிரத்தியேக நியாயங்கள் மட்டுமே நிஜமான நியாயங்கள் என்று தீர்மானமாக நம்புகிறவர். அதைப் பொருட்படுத்த வேண் டியது இல்லைதான். ஆனால், மெலிதாக வலிக்கத் தொடங்கியிருக்கிற மனத்துக்கு இப்போதைய தேவை, அறிவுரை அல்ல. ஆறுதலும் அல்ல. வெறுமனே விட்டுவிட்டு விலகிப் போய்விடுவதுதான்.

ஆனால், அவனை யாரும் விடுகிறதாக இல்லை. அவள் கிடக்கிறாள் திமிர் பிடித்த ராங்கிக்காரி என்று தொடங்கி, பூவுலகமும் மேலுலகமும் காணாத ஒரு பேரழகியை, பெரும் வசதியும் கல்யாண குணங்களும் ஒருங்கே படைத்தவளை நாளையே தேடி மணம் முடித்து வைப்பதாக அம்மா அறிவித்துவிட்டு, புடைவையை இழுத்துச் சொருகிக் கொண்டு அக்கம்பக்க வீடுகளுக் குப் போனாள். என் பிள்ளைக்கு என்ன குறைச்சல் என்று அனுதாப வோட்டு தேடும்விதமாக அவனை மேலும் அவமான முறச் செய்தாள். ஏன் இப்படி டமாரம் அடிக்கிறாய் என்று அவன் யாசிக்கிற தோர ணையில் கடிந்து கேட்டபோது, என்கிட்டே தான் வாய்கிழியும்; பொட்டச்சியிடம் வழிஞ்சு நின்னு வந்ததில் குறைச்சலில்லை என்று சேம் சைடு கோல் போட்டாள்.

கொஞ்ச நாளாவது இந்தச் சள்ளை யிலிருந்து தப்பிக்கச் செய் இறைவா என்று அவன் மானசீகமாக உருகும் நிலைக்கு வந்தபோது, ஹெட் ஆபீஸுக்கு ட்ரான்ஸ் பர் பண்ணினார்கள். சந்தோஷமாகப் பெட்டி, படுக்கையுடன் வந்து சேர்ந்த இடத்தில், விதி அவளையும் ட்ரான்ஸ்பர் செய்து அழைத்து வந்திருந்தது.

ஒரு வசதி. அவள் அமர்ந்திருந்தது ஒரு மூலை. இவன் இருந்தது எதிர் மூலை. கொஞ்சம் சீட்டிலிருந்து உடலை முன் நகர்த்தி, தலையை நீட்டிப் பார்த்தால் ஒரு வரை ஒருவர் பார்த்துக் கொள்ள முடியும். பார்த்துக் கொள்ள என்ன அவசியம்? அவசியமில்லைதான். ஆனால், பத்து நிமி ஷத்துக்கொருதரம் தலை தானாக அவள் பக்கம் திரும்புவதை அவனால் தவிர்க்க முடியவில்லை. மிகவும் uneasy ஆக உணர்ந் தான். அந்தத் தருணங்களில் எல்லாம் அவன் மனத்தில் ஒரே கேள்விதான். ஏன் அப்படிச் சொன்னாள்?

"இவளே, அங்க பார். அந்த ஆள்தான். அன்னிக்கு ஒரு படையைக் கிளப்பிட்டு என்னைப் பெண் பார்க்க வந்திருந்தான். நான் பிடிக்கலை; வேணாம்னு சொல் விட்டேன்..."

யாருடனாவது அவள் பேசும்போது, தற்செயலாகத் தலை அவன் பக்கம் திரும்பினால் கூட மனத்தில், இதுவாகத் தான் இருக்கும் என்று விடாத ஊசி...

---

''கட்சில யாரையும் நம்ப முடியல!''

''என்ன விஷயம் தலைவரே?''

''பிரசார பீரங்கிகளை ரிப்பேர் செய்து புதுப்பித்த வகையில் பத்தா யிரம் செலவுன்னு கணக்கு எழுதியிருக் காங்க!''

- அம்பை தேவா



உறுத்தல்.

திடீர் திடீரென்று ஏதாவது ஒரு பைல் அல்லது வவுச்சர் பேடைத் தூக்கிக் கொண்டு அவள், அவன் இருக்கைக்கு அருகிலோ, பக்கத்து டேபிள்களுக்கோ வந்து விட்டால், பக்கென்று வயிற்றில் ஒரு மின் உணர்வு கருளும். மறுபடி அவள் சீட்டுக்குப் போகிறவரை படபடப்பு நிற்காது.

ஓர் ஆண் இப்படி கூனிக்குறுகலாமா என்று அவ்வப்போது புராதனமான ஈகோ எட்டிப் பார்க்கும். ஆனால், ஒருபோதும் அது மிகுந்ததில்லை. சராசரி மிடில் கிளாஸ் குடிமகனின் உணர்வு தளத்தில் ஈகோ எப்போதும் எடுபடுகிறதில்லை. தன்னைத் தானே குத்திக் கிழித்துப் பார்க்கிற சுய சோகம்தான் தலைநிமிர்ந்து நிற்கும்.

**பா**ச்சுலர் அறையில், வேலை இல்லாத ஞாயிறுகளில், பிற்பகல் உறக்கத்துக்கு முன்னால் ஓரிரு நிமிடங்கள் தனக்கும் அவளுக்கும் அலுவலக கேன்டீனிலோ, கடற்கரையை ஒட்டிய புல்வெளியிலோ நடப்பதாக உரையாடல்களைக் கற்பனை செய்து பார்ப்பான். அந்த நேரத்தில் அவர்கள் தற்செயலாக, தனியாகச் சந்தித்துக் கொள்ளுவார்கள். அவன்தான் ஆரம்பிப்பான் : "ஐ'ம் ஸாரி."

அவனுக்கு அப்போது கோபமோ ஈகோவோ இருக்காது. முற்றும் கடந்த ஒரு மகான் போலப் பக்குவம் பெற்றிருப்பான். திடமான, ஆனால் சாந்தமான குரலில் பேசுவான் :

"எனக்கு வருத்தம் ஒண்ணும் கிடையாது. அவரவர் விருப்பங்கள் சுதந்தரமாகத் தேர்ந்தெடுக்கப்பட எல்லாருக்கும் உரிமை உண்டு. ஆனால், ஒரு விஷயம் நிராகரிக்கப்பட, சரியான காரணம் சொல்லப்படணும் இல்லையா? தவிர, நீங்களே என்னிடம் நேரில் விளக்கியிருக்கலாம். நான் தப்பாக நினைத்துக் கொள்ளப் போவதில்லை...."

அவனது பக்குவமும் பெருந்தன்மையும் அவளைப் புரட்டிப் போடும். பின்னணியில் வங்காள விரிகுடா ஆர்ப்பரிக்கும். அவள், தலை குனிந்து இருப்பாள். அவள் கண்களின் ஓரம் இரண்டு நீர்த்துளிகள் உதிரக் காத்திருக்கும்.

"ப்ளீஸ், கலெக்ட் யுவர்ஸெல்ஃப்..."

மிகுந்த அக்கறையும் கனிவுமாக, மனத்தின் வன்மம் மறைத்து அவன் பேசுவான்.

அதற்குள் தூக்கம் வந்திருக்கும்.

மறுநாள் அலுவலகத்தில் அவளைப் பார்க்கும்போது, முந்தைய தினத்து மானசீக உரையாடல் எதுவும் எடுபடாது. கனமான ஒரு நிசப்தம் மனத்தைக் கவ்விக் கொள்ளும். நாளெல்லாம் குறுகுறுப்புடன் தவித்து விட்டு, அறைக்கு வந்து விழுவான்.

**ப**த்து நாட்கள் ஆகிவிட்டன. இன்னும் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை, அவளுடன். மிகவும் ஜாக்கிரதை உணர்வுடன் விலகியே இருந்தான். ஒரே ஒருதரம் செக்ஷன் ஆபீஸர் அறையிலிருந்து அவன் வெளியேற முனைந்தபோது, "கேஷியரை வரச் சொல்லிட்டுப் போங்க சார்" என்று ஆபீசர் கேட்டுக் கொண்டார். வேறு வழியில்லாமல் அவள் இருக்கை அருகே சென்று, அவரது அழைப்பை அவன் தெரிவிக்க வேண்டியிருந்தது.

அவள் நிமிர்ந்து கூடப் பார்க்கவில்லை. சரேலென்று டிராயரை உள்ளே தள்ளி, நாற்காலியைப் பின்புறம் நகர்த்தி விட்டு எழுந்து கொண்டாள். அவனை ஏறிட்டுப் பார்க்காமலேயே அவனைக் கடந்து போனாள். ரொம்பத்தான் அலட்டல் என்று அவனுக்குத் தோன்றியது. எரிச்சல் மிகுந்தது. அடக்கிக் கொண்டு தன் சீட்டில் வந்து அமர்ந்தான்.

இந்த அலுவலகத்தில் ரொம்ப நாள் தன்னால் தாக்குப்பிடிக்க முடியாது என்று அவனுக்குத் தோன்றியது. ஏமாற்றமோ, அவமானமோ கூடப் பெரிதில்லை. ஆனால், அவளது அண்மையில் தாங்கவொண்ணாத ஒருவிதப் படபடப்பு கூடி விடுவதாக நினைத்தான். முன்னதாக நடந்த விஷயம், அலுவலகத்தில் வேறு யாருக்கேனும் தெரிந்து விடுமோ என்கிற பயம் தருகிற படபடப்பு.

மேலும், பெண்கள் ரகசியம் காப்பதில்லை. பெண்களுக்குப் பேச, விவகாரமான விஷயம் அகப்பட்டு விட்டால், அவர்களது சந்தோஷம் பிடிபடாத அளவுக்கு




''அந்த டாக்டர் என்னை நல்லா ஏமாத்திட்டார்!''

''எப்படி?''

''நான் ஊசி போட்டா, ஊசி போட்ட மாதிரியே தெரியாதுனு சொன்னவர், கடைசி வரை ஊசி போடாமலேயே ஃபீஸ் வாங்கிட்டார்!''

— எஸ். சரவணன்

உயர்ந்து விடுகிறது. பேச்சு சந்தோஷத்துக்காகவே விவகாரங்களை அவர்கள் உருவாக்குகிறார்கள் என்று அவன் கருதினான்.

தேநீர் அருந்தும் நேரங்களில், லன்ச் இடைவேளைகளில், செக்ஷன் ஆபீசர் இல்லாத சமயங்களில் டைப்பிஸ்டும் ஆபீசரின் செகரட்டரியும் அவனது டேபிளுக்கு அருகே கூடி விடுகிறார்கள். பல நேரங்களில் சற்றே உரக்கவும் சில சமயத்தில் படு ரகசியமாகவும் தமக்குள் பேசிக் கொள்ள எப்போதும் அவர்களுக்கு விஷயம் இருக்கிறது. ரகசியத் தொனியில் அவள் பேசும்போதெல்லாம் அவன் தவித்துப் போய் விடுவான்.

வாழ்க்கையில் சாதிப்பதற்கு ஏராள விஷயங்கள் இருக்கின்றன. திருமணம் ஒரு சாதனை அல்ல. அதற்கான முதல் முயற்சியில் தோல்வி கண்டது ஒரு சாதனை முறிவு அல்ல. ஆனால், தோற்றபின் தோற்கடித்தவளை, தினமும் சந்திக்க வேண்டியிருப்பது தான் ரணவேதனையாக இருக்கிறது. அதனாலேயே பிறருடன் பழகுவது கூட சிரமமாகத் தெரிகிறது.

நீங்கள் ஏன் யாருடனும் பழகறது இல்லை? நாலைந்து பேர் கேட்டு விட்டார்கள். அவர்களுக்கெல்லாம் தோழமை கலந்த ஒரு புன்னகையை அளித்துவிட்டுப் பேசாமலே இருந்து விடுவான். யாருடனும் பேசக் கூடாதென்று விரதம் ஒன்றுமில்லை. ஆனால், எப்போதும் அவள் தன்னை கவனித்துக் கொண்டிருக்கிறாள் என்கிற உணர்வு மேலோங்கியே இருந்தது. அந்த நிலையில் பேசுவதும் பேசாமல் இருப்பதுமே கூட மிகவும் சங்கடமானதாக இருந்தது. அவன் நிமிர்ந்து பார்க்கிறபோதெல்லாம் அவள் நேராகவோ, ரகசியமாகவோ அவனைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். அவன் அதைக் கவனித்து விட்டால், 'தன் கவனம் அவன் மேல் இல்லை' என்று நிருபிக்கும்விதமாக வேறு யாரையாவது உரக்கப் பெயர் சொல்லி அழைக்கிறாள்.

இது ஒருமுறை இருமுறை அல்ல. பல முறை அவள் இப்படி நடந்து கொள்வதை அவன் கவனித்தான். அவள் முற்றிலும் எதிர்பாராதவிதமாக எதிரே போய் நின்று நாலு வார்த்தை பேசிவிட்டு வந்து விடலாம். பாறையை உடைப்பது யார் என்கிற பிரச்னைதான் என்றால் சரி. ஆனால் என்ன பேசுவது?

பெண் பார்க்கப் போன போது கூட அவன் அவளிடம் ஏதும் பேசவில்லை. அவளது அப்பாவிடம்தான் பேசிக் கொண்டிருந்தான். ஒரு கொத்தாக அமர்ந்திருந்த அவனது வீட்டாரை அவள் வணங்க வந்த போது கூட, கண்ணியமாகத் தான் ஒதுங்கி நின்று தனக்கு இத்தகைய காரியங்களில் ஆர்வமோ உடன்பாடோ இல்லை என்பதை நாசூக்காக நிரூபித்திருந்தான்.

பாட்டுத் தெரியுமா, சமையல் தெரியுமா என்றெல்லாம் கேட்காமல், அவளைப் பற்றி அவளது பெற்றோர் கூறியவற்றை மட்டும் கேட்டு விட்டு, முற்றிலும் நம்பி, கம்பீரமாகத் தன் சம்மதத்தை சபை நடுவே அறிவித்தான். இரண்டு நாள் கழித்துத்தான் அவள் தன் அப்பா மூலம் விருப்பமில்லை என்று சொல்லி அனுப்பினாள்.

ஒருவேளை அம்மா சொன்னது போலத் திமிர் பிடித்த ராங்கிக்காரிதானோ? ஆனால், திமிர் கொள்ள அசாத்திய அழகோ, அபாரமான கல்வித் தகுதியோ, வளமான குடும்பப் பின்னணியோ இல்லை; நிச்சயம்! ஒருவேளை தான் அவளை விட தோற்றத்தில் சற்று மட்டு என்று கருதுகிறாளா?

இவ்வாறு தோன்றியதும் கறுகறுவென ஈகோ உயர ஆரம்பித்து விட்டது. அவனது தோற்றம், இதுகாறும் யாராலும் விமர்சிக்கப்பட்டதில்லை. படிய வாரிய தலையும் புன்னகை ஏந்திய முகமும் நேர்த்தியான உடையும் நாசூக்கான பேச்சுமாகத் தான் ஒரு கனவான்தான்; சந்தேகமில்லை என்று உறுதிபடக்கூறிக் கொண்டான்.

நிம்மதியும் ஆறுதலும் தோழமையும் அன்புமான ஒரு விலைமதிப்பற்ற வாழ்வைத் தனக்கு வாய்க்கிறவளுக்குத் தர வேண்டும் என்று உத்தேசித்திருந்தான்.

நடந்து விட்டதன் மூலம், நஷ்டம் தனக்கல்ல என்று சொல்லிக் கொண்டான். ஆனாலும் அவளைப் பற்றி நினைக்காமலோ திருட்டு கவனம் செலுத்தாமலோ இருக்க முடியவில்லை. அத்தகைய தருணங்களில் இயல்பாக வேலை பார்க்க இயலாமல் போய்விடுகிறது. இயல்பாக இல்லாத எது ஒன்றும் சிறப்பாக இருப்பதில்லை.

ஒரு மாத காலம். அதனைச் சமாளித்தது பெரிதல்ல. இன்று சம்பளம் வாங்க வேண்டும். அவளிடமிருந்துதான் பெற்றாக வேண்டும். கடவுளே, இறுக்கம் மிக்க தருணத்தை எப்படி எதிர்கொள்வேன்? அவளுக்கும் இத்தவிப்பு இருக்குமா? உணர்ச்சிகளுக்குச் சற்றேனும் மதிப்பளிப்பவளாயிருந்தால் கட்டாயம் இருக்கும்; இருக்க வேண்டும். ஆனால் ஒருபோதும் அவள் தன்னை வெளிக்காட்டிக் கொள்ளாதது அவனுக்குப் பெரும் ஆச்சர்யமாக இருந்தது. அத்தனை அழுத்தமும் தீர்மானமும் எப்படிச் சாத்தியமாகிறது? நாலு பேருக்கு நடுவில் நின்று பேச நேர்ந்து விட்டால், அவள் மிகச் சாமர்த்தியமாகத் தன்னை மட்டும் தவிர்த்து விடுவதை - அது மற்றவர்களால் உணர முடியாமல் போவதை அவன் கண்டு கொண்டான். இத்தனை சின்ன வயதில் எத்தனை அழகிய திமிர்! சாமர்த்தியம்!

மாலை நாலு மணிக்கு சம்பளக் கடை தொடங்கியது. வாழ்வின் அவலங்கள் மறந்து, எல்லாரும் அவள் முன் நின்று, சிரித்து, பணத்தை எண்ணி வாங்கிப் போனார்கள். இன்னும் இரண்டு நிமிஷங்கள். அலுவலகம் காலியாகி விடும். அவன் வாங்கிச் செல்வதற்காக அவள் காத்திருப்பாள். அப்போது வேறு வழியின்றிக் கூப்பிட்டுத்தானே ஆகவேண்டும்? எப்படி அழைக்கப் போகிறாள்?

"சார், எங்க யோசனை? கேஷியர் அம்மா வரச் சொல்றாங்க உங்களை."

உரக்க ஒலிபரப்பி விட்டுப் போகிற ப்யூன்.

நீண்ட பெருமூச்சுடன் எழுந்து போய் அவள் எதிரே அமர்ந்தான். அவள், சலனம் இல்லாமல் அவனது சம்பளக் கவரை எடுத்து அவனிடம் தந்து, "எண்ணிக்கங்க" என்றாள்.

அவன் எண்ணவில்லை. மாறாக அவளை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு புயல் போல அவனைக் கலைத்து விட்டு, ஒன்றும் அறியாதவள் போல அமர்ந்திருக்கிறவள்.

நெஞ்சைப் புரட்டும்விதமாக சட்டென்று அவனுக்குள் கிளர்ந்து எழுந்த உணர்வு கோபமா, வெறுப்பா, இயலாமையா, விரக்தியா, வேதனையா என்று அவனுக்கே குழப்பமாக இருந்தது. இந்தத் தவிப்பு, இவன் அருகே இருக்கிறவரை தணியப் போவதில்லை. நல்லது.

"நீங்கள் யாரையாவது காதலிக்கிறீர்களா?" என்று கேட்டான் திடீரென்று.

வியப்பும் அதிர்ச்சியும் விழிகளில் தெரிய, "இல்லையே?" என்றாள் அவசரமாக.

"பின் ஏன் அப்படிச் செய்தீர்கள்? டோன் யூ ஃபீல் இட்'ஸ் அன் இன்டீஸன்ட் மெத்தட் ஆஃப் எக்ஸ்பிரஸிங்?"

அவள் அதிர்ந்து இருந்தாள். இப்படிக் கேட்பான் என்று அவள் எதிர்பார்த்திருக்கவில்லை. அவள் விரல்கள் பேனாவை உருட்டிக் கொண்டிருந்தன. தலைகுனிந்து இருந்தாள்.

"ஸாரி. எனக்குக் கண்டிப்பாக பதில் வேண்டும்."

"என்ன பதில்?"

"ஏன் அப்படிச் செய்தீர்கள்?"

அவள் டிராயரைப் பூட்டிவிட்டு எழுந்தாள். ஒரு தீர்மானத்துக்கு வந்தவள் போல், உறுதியுடன் அவனைப் பார்த்தாள். ஒரு விநாடி இடைவெளி விட்டு, பின் சொன்னாள் :

"நிராகரிக்கப்படுவதன் வலி எனக்குத் தெரியும். நிராகரிப்பதன் சுகத்தை ஒரு முறையாவது அனுபவிக்க விரும்பினேன். அதனால்தான் செய்தேன்." ●

---

**"உங்க ராஜினாமா பத்தி தலைவர் உங்ககிட்ட உடனே பேசணுமாம். உங்களை இந்த இடத்துலேயே பாராசூட்ல குதிக்கச் சொல்லி மெசேஜ் வந்திருக்கு."**

**– நெல்லிக்குப்பம் வி.மோகன்**



# வீட்டுக்கார அம்மாங்களே,



கம்பவுண்டராகப் பணிபுரிந்த கணவன் டைபாய்டில் பத்து வருடங்களுக்கு முன் இறந்தபிறகு வேறு வழியில்லாமல் வீட்டு வேலை செய்யத் தொடங்கி 'வேலைக்காரி' அவதாரம் எடுத்தவர் பூமா. மூன்று குழந்தைகளை வளர்த்தாக வேண்டுமே.

மகன் வளர்ந்து டெய்லர் வேலை பார்க்கத் தொடங்கிய பிறகும் பூமாவால் தன் வீட்டோடு இருக்க முடியவில்லை.

"என்னங்க செய்யறது? வருமானம் போதல்லியே. இரண்டு வேளை சோத்துக்கே கஷ்டமாயிருக்கு. டிமாண்ட் இருக்குதுன்னாலும் நிறைய வீடுகளிலே வேலை செய்ய உடம்பு ஒத்துழைக்க மாட்டேங்குது. ரெண்டு பொட்டப்புள்ளங்க இருந்தாலும் இன்னும் விவரம் பத்தல்லே. வீட்டிலேயும் நான்தான் சமையலிலேயிருந்து எல்லாம் செய்ய வேண்டியிருக்கு."

இவரைப் போன்ற பணிப்பெண்கள் 'முதலாளி வீட்டு அம்மா'க்களால் எப்படி நடத்தப்படுகின்றனர்?

"அவங்களும் வேலைக்குப் போறதாலே எங்களை மாதிரிப்பட்டவங்களுக்கு மவுசு அதிகமாயிடுச்சுன்றது உண்மைதான். ஆனா முன்னை விட அதிக சம்பளம் தரோம்னு நினைக்கறாங்களே தவிர, விலைவாசி ஆகாயத்தை முட்டிக்கிட்டிருப்பதாலே, நாங்க ஒண்ணும் இதனாலே சுகப்படலேன்றதை புரிஞ்சிக்க மாட்டேங்கறாங்க. உடம்பு சரியில்லாம சில நாள் வேலைக்கு வரமுடியல்லேன்னா முகத்தைத் தூக்கி வச்சுக்கறாங்க. நாங்களும் மனுஷங்கதானே. மற்றபடி முன்னே மாதிரி பெரிய பெரிய வீடுகளாக இல்லாம சின்னச் சின்ன ஃப்ளாட்டுகளிலே இருக்கிறதாலே, பெருக்க, துடைக்கவெல்லாம் சுலபம்தான்."

வீட்டுப் பணிப் பெண்களைத் தக்க வைத்துக் கொள்வது என்பது ஒரு கலைதான். ஓரளவாவது மனிதாபிமானம். 'வேலைக்காரி வந்திருக்கா பாரு' என்றெல்லாம் குறிப்பிடாமல் பெயரைச் சொல்லிக் குறிப்பிடுதல். கருணை, கண்டிப்பு இரண்டையும் சீராக உணர்த்துதல். அவளுக்கு உடல் நலமில்லையென்றால் அக்கறையோடு விசாரிப்பு – முடிந்தால் கொஞ்சம் மருந்து, மாத்திரை அளிப்பது. வேலைக்கு அமர்த்துவதற்கு முன்பே என்னென்ன வேலைகளைச் செய்ய வேண்டியிருக்கும், சம்பளம் தவிர வேறென்ன

# கொஞ்சம் கோணக் கொடுங்க!

(காப்பி, டிபன் போல) தரமுடியும் என்பதையெல்லாம் தெளிவாகப் பட்டியலிடுதல்.

வேறு சில ஜாக்கிரதை உணர்வுகளும் தேவை. வேலைக்கு அமர்த்திக் கொள்ளுமுன் அவளது 'பூர்வோத்திரத்'தைப் பற்றிக் கொஞ்சமாவது விசாரியுங்கள். முடிந்தால் அவள் தற்போதோ முன்போ வேலை செய்து கொண்டிருந்த ஏதாவது வீட்டில் அவளது வேலைத்திறன் மற்றும் நாணயம் பற்றிக் கேட்கலாம். பலருக்குத் தங்கள் வீட்டுப் பணிப் பெண்களின் விலாசமே தெளிவாகத் தெரியாது. விலாசத்தை அறிந்து கொள்வது முக்கியம்.

அவர்களின் மீது எப்போதும் ஓர் அவநம்பிக்கை கூடாதுதான். அதே சமயம் அவர்களைக் குற்றவாளிகளாக்கக் கூடிய சூழலை நாம் உருவாக்கக் கூடாது. வீட்டில் அங்கங்கே அலட்சியமாகப் பணத்தை வைத்திருந்தால், அதீத பொருளாதாரத் தேவை ஏற்படும்போது பணிபெண் நாணயம் தவற வாய்ப்பு உண்டு. பணிப்பெண்ணின் வாழ்க்கைத் தரத்தையும் அவ்வப்போது கவனியுங்கள். வருமானத்திற்கு சற்றும் சம்பந்தமேயில்லாமல் அவளது வாழ்க்கைத்தரம் (உடை உட்படதான்) சமீப காலமாக மாறிவிட்டிருந்த தென்றால் கவனம் தேவை. வீட்டின் அந்தரங்க விஷயங்களை (பண விஷயங்கள் உட்பட) அவர்கள் எதிரே ஒருபோதும் விவாதிக்க வேண்டாம். அடிக்கடி முன்பணம் கொடுப்பதை வழக்கமாக்கிக் கொள்ளாதீர்கள். சுத்தம், சுகாதாரத்தில் நாம் முன்னுதாரணமாகவிரா விட்டால் பணிப் பெண்களிடம் அதை எதிர்பார்ப்பதில் அர்த்தமில்லை.

திருட்டு போன்ற காரணங்களுக்காக இல்லாமல் வேலையில் திறமைக் குறைவு போன்ற காரணத்திற்காக நிறுத்தினால் ஒரு மாத சம்பளத்தையாவது அதிகப்படியாகக் கொடுப்பதுதான் நியாயம். ●

— ஜி.

# அமரர் கல்கி படைப்புகள்— அரசுடைமை ஆக்கப்படுதல்

மாண்புமிகு முதல்வர் பட்ஜெட் உரையில் அமரர் கல்கி அவர்களுடைய நூல்கள் அரசுடைமை யாக்கப்படுவதாக அறிவித்தார். இதையொட்டி, சில பதிப்பகங்கள் இனி காப்பி ரைட் உரிமை யாருக்கும் இல்லை என்ற எண்ணத்தில் கல்கி அவர்களுடைய நூல்களைப் பிரசுரிக்க முற்பட்டுள்ளதாக அறிகிறேன்.

அரசுடைமையாக்கப்படுவதாக அறிவிப்புத்தான் வந்துள்ளதே தவிர, இது வரை அது தொடர்பான நடைமுறைகள் ஏதும் பூர்த்தியாகவில்லை. அவை பூர்த்தியான பிறகு முழு விவரங்களையும் நானே கல்கி பத்திரிகை மூலம் அறிவிக்கிறேன். அதுவரை பதிப்பக உரிமையாளர்கள் பொறுமை காக்குமாறு வேண்டுகிறேன்.

அவசரப்பட்டு தவறு இழைத்துவிட்டு சட்டச் சிக்கல்களில் அகப்பட்டு பொருளாதார நஷ்டத்துக்கும் உள்ளாக வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன்.

கல்கி ராஜேந்திரன்
(பதிப்பாளர், கல்கி நிறுவனப் பத்திரிகைகள்.)

பத்திரிகாசிரியர் மணியனை அமெரிக்க நாட்டை அறிந்து கொள்ள - அமெரிக்க அரசு அழைத்திருந்தது. அது தான் அவரது முதல் பயணத் தொடர் என்று நினைக்கிறேன். "அமெரிக்காவைப் பார்" என்று சோம. லெ. அவர்கள் ஒரு புத்தகம் எழுதி இருந்தார். அதைப் பாடப் புத்தகமாக வைத்திருந்தார்கள். இருந்தாலும் மணியன் எழுதியது மிகுந்த சுவாரஸ்யமாக இருந்தது. அவருடைய கட்டுரைத் தொடரை, பாஸ்போர்ட் வாங்குவதிலிருந்து விசா பெறுவதிலிருந்து விமானப் பயணம் என்றெல்லாம் எழுத மாட்டார்.

எது மிகவும் சுவாரஸ்யமான - ஆச்சரியமான - பிரமிப்பு ஊட்டும் சம்பவமோ அதிலிருந்து துவங்குவார். கற்பனை மிக்க கதாசிரியர்கள் எழுதும் விஷயத்திற்கும் மற்றவர்கள் எழுதுவதற்கும் வித்தியாசம், வாசகனைப் பிடித்து வைத்திருக்கும் இந்த விறுவிறுப்பு, சுவாரஸ்யம்தான்.

தம் கட்டுரைத் தொடரில் தமிழர்களிடம் காணப்படும் "நம்மிடம் இல்லாதது எது?" என்று பேசும் குணத்தை 'மமதை' என்று குறிப்பிட்டுச் சாடி இருந்தார். தற்செயலாக இதை அமெரிக்காவில் படித்த எனக்கு இது ஏதோ மனித நாடியை, நரம்பைத் தொட்டாற் போலிருந்தது.

அவருக்கு ஒரு கடிதம் எழுதினேன். "நமது வளர்ச்சிக்குக் குறுக்கே நிற்பது இந்த மனோபாவக் கோளாறுதான்" என்று பட்டியலிட்டு என் ஆதங்கத்தைக் கொட்டியிருந்தேன்.

இது நான் அவருக்கு எழுதிய தனிப்பட்ட கடிதம். ஆனால் மறுவாரமே, கடிதப் பகுதியில்கூடப் போடாமல், தன் கட்டுரையின் பகுதியாக என் முழுக் கடிதத்தையும் பிரசுரித்திருந்தார்.







மற்றொரு சம்பவமும் நிகழ்ந்தது. எனது 'எண்ணங்கள்' என்ற முதல் நூலுக்கு அணிந்துரை எழுதித் தந்த திரு. ஏ.சி. முத்தையா இந்தக் கடிதத்தினால் ஈர்க்கப்பட்டு இதை முழுவதுமாகத் தமது அணிந்துரையில் குறிப்பிட்டிருந்தார்.

இந்த அடிப்படையை உணர்ந்த சென்னை வானொலித் தலைவர் செல்வம் அவர்கள், "மாறட்டும் மனோபாவம்" என்கிற தலைப்பில் பதின்மூன்று வாரம் வானொலியில் என்னைப் பேச ஏற்பாடு செய்தார்.

நம் வளர்ச்சிக்குத் தடை நமது மனோபாவக் கோளாறுதான் என்பது அனைவருக்கும் தெரிகிறது. எனினும் அதை மாற்ற நாம் என்ன செய்கிறோம், என்ன திட்டம், யார் பொறுப்பு - இவையெல்லாம் இன்னும் அடிப்படையில் நிகழ வேண்டிய முக்கியக் காரியங்கள். ஆனால் அதற்கான செயல்தான் இல்லை.

# அலாஸ்கா பயணமும் அழியாத நினைவுகளும்

ஒன்பது ஆண்டுகள் கழித்து, நான் 1971ல் அமெரிக்காவிலிருந்து இந்தியா வந்தபோது, 'பத்தாண்டுகள் கழித்து நாடு எப்படி இருக்கிறது என்று எழுதுங்கள்' என்றார். எழுத்துக்கள் எல்லாம் ஒரு விழிப்புணர்வையும் எதிர்பார்ப்பையும் ஏற்படுத்தியது உண்மை. ஆனால் அதற்கு அடுத்தக் கட்டத்திற்கு நாம் போகவில்லை; காரணம் நாம் திட்டமிடவில்லை; செயல்படவில்லை.

வெளிநாட்டுப் பயணம் மணியனை ஒரு மாறுபட்ட மனிதராய் ஆக்கியிருந்தது என்றால் அது மிகையல்ல. அவர் கட்டுரைகள் பிற நாட்டுப் பண்பாடுகளையும் நடப்பு விவரங்களையும் மட்டும் பேசவில்லை; அத்துடன் அவர்களை எது உயர்த்தி இருக்கிறது என்பதையும் அடிக்கடி குறிப்பிட்டுக் காட்டியது. இதன் விளைவாக நான் அவர் அலுவலகத்தில் இருந்த ஒரு சமயம், சில மாணவர்கள் அவரது பயணக் கட்டுரையை ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டிருப்பதாக வந்தார்கள்.




பயண இலக்கியம் என்ற பிரிவு பிறந்தது. மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தில் பயண இலக்கியம் பற்றிய கருத்தரங்குகள் பல நடத்தப்பட்டன. 'சென்றிடுவீர் எட்டுத் திக்கும் கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்'' என்றாரே பாரதி. அதைத் தன் பாணியில் செய்து கொண்டிருந்தார் மணியன். இதனால் உலகம் சுருங்கியது.

**நா**ன் இது பற்றி அடிக்கடி யோசிப்பதுண்டு. ''இந்தியாவில் உள்ள ஒவ்வொரு மாநிலங்களிலும் ஒரு தமிழ்நாட்டுப் பிரதிநிதி அல்லது குழு நிரந்தரமாக இருக்க வேண்டும். அங்கு இயற்றப்படும் சட்டங்களை நடைமுறைகளை நமது நாட்டுத் தலைவர்களுக்கும், மக்களுக்கும் தெரிவித்துக் கொண்டிருக்க வேண்டும்'' என்று. மங்களம் சீனிவாசன் என்று நமது ஊர்ப் பெண்மணியை ஆந்திர முதல்வர் என்.டி. ராமராவ் ஆந்திராவின் வாஷிங்டன் பிரதிநிதியாக நியமித்திருந்தார். அதேபோல முக்கியமான ஜப்பான், ஜெர்மன், பிரான்ஸ், மலேசியா, கொரியா போன்ற நாடுகளிலும் நமது மாநிலத்துப் பிரதிநிதி இருந்தால் அங்கு ஏற்பட்டிருக்கும் புதிய தொழில் நிறுவனங்கள், புதிய கண்டுபிடிப்புகள், அந்நாட்டுக் கல்வி முறை, நாம் எடுத்துக் கொள்ள வேண்டிய கலாசார குடும்பப் பண்புகள், சமுதாய இணக்க வாழ்வு முறை என்று பலவற்றிலுமிருந்து நாம் நிறைய தெரிந்து கொள்ள முடியும்; வளர முடியும். ஜப்பானில் கூட்டணி ஆட்சிப் பிரச்னை வந்தபோது ஜப்பானிய அரசு உடனே ஒரு பல்துறை அறிஞர் குழுவை ஐரோப்பாவுக்கு

டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

அனுப்பி, கூட்டணி ஆட்சியை அவர்கள் எப்படிச் சமாளித்தார்கள் என்று கண்டறியச் செய்தது. மொரார்ஜி காலத்திலிருந்து கூட்டணியில் வாழும் நாம் என்ன செய்தோம்? நம்மைச் செதுக்க வேண்டிய புதிய எண்ணங்கள் என்ன என்று அறிய வேண்டாமா? மனிதன் தனக்குத் தெரிந்ததை வைத்துக் கொண்டு வாழ்ந்து விடலாம் என்று எண்ணுகிறவரை எங்கே விமோசனம்?

இந்த சமயத்தில்தான் நான் அமெரிக்காவில் புதிய பொருளைக் கண்டுபிடிக்கும் விஞ்ஞானிகளின் சிந்தனா முறை பற்றிய (THOUGHT PROCESS TO DISCOVERY) என் ஆராய்ச்சியை முடித்து, பின் மூன்றாண்டுகள் அதைப் பாடமாக சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தேன்.

ஓர் எண்ணம் எழுந்தது. "நம் நாட்டில் அரசியலிலும், அதிகார வர்க்கத்திலும் சமுதாய வாழ்விலும் அவல எண்ணங்கள் தனி மனித வாழ்வை சிக்குப் பிடித்து சீரழித்துக் கொண்டிருக்கின்றன. நமக்கு இப்போது புதிய நோக்கு, புதிய கருத்து, புதிய மனிதர்கள் தேவை. எண்ணங்கள் என்ற ஒரு தொடரை எழுதலாமா என்று நினைக்கிறேன். உதவுமா, பாருங்கள்!" என்று எழுதினேன். "மேடை காத்திருக்கிறது" என்று பதில் எழுதினார் மணியன்.

அதன்பின் ஓராண்டில் ஒரு தொடர் என்ற ரீதியில் சில கட்டுரைத் தொடர்களை எழுதினேன். அத்தகைய வரவேற்புதான் தொடர்ந்து எழுதப் பெருங்காரணம்.

மனம், பிரார்த்தனை, மந்திரம் எனும் நூலில் பிரார்த்தனை எப்படிப் பலனளிக்கிறது என்று; தலைவனை இயக்கும் மனவியல் உண்மைகள் என்ன என்று தலைவனைப் பற்றிய தொடரில்; உயர் மனிதனை உருவாக்கும் மனவியல் தத்துவம் எது என்று - இப்படி எல்லாவற்றையுமே மனவியல் நோக்கில் எழுதத் துவங்கினேன்.

மணியன், உலகின் முக்கியமான எல்லா நாடுகளையுமே பார்த்து விட்டு வந்த நிலையில் அலாஸ்கா செல்ல வேண்டும் என்று கூறினார். எனது நண்பர் தொழிலதிபர் சங்கர் ரமணியிடம் சொந்த ஜெட் விமானம் இருந்தது. மணியனுக்கு

அவரை அறிமுகம் செய்து வைத்தேன். அவருடன் அலாஸ்கா பயணம் சென்றார். நான் அப்போது ஒரு உணவு நிறுவனத்தில் தலைமை நிர்வாகியாக இருந்தேன். வேலை அதிகம். எனினும் நண்பர் சங்கர் ரமணியின் நிர்ப்பந்தம் காரணமாக நானும் அவர்களுடன் சென்றேன். அலாஸ்கா பயணத்தின் சிறப்பு என்னவென்றால், அவர் எங்களை வடதுருவத்தின் எஸ்கிமோ மக்கள் வாழும் கடைசி கோடிக்கு - "பாயிண்ட்ஸ் பரோ" எனப்படும் எஸ்கிமோ ஊருக்கே அழைத்து சென்றார். அங்கே செல்ல விமான சர்வீஸ் கிடையாது. சங்கர் ரமணியிடம் தனி விமானம் இருந்தது. மேலும் அரசின் தனி அனுமதி பெற்றுத்தான் அங்கே செல்ல முடியும். மணியனைப் பற்றிச் சொல்லி எளிதாக அனுமதி வாங்கி இருந்தார் சங்கர் ரமணி. அலாஸ்கா பெரிய அனுபவம். வட துருவத்திற்கு அருகில் இருப்பதால் இரவில்கூட சூரியன் இருக்கும்!

இப்படிப் போன்ற பல சம்பவங்களால் நான் மணியனைப் பல்வேறு கோணங்களில் பார்க்க முடிந்தது. எங்கு சென்றாலும் தமிழ்ப் பாட்டுக்கள் கொண்ட - குறிப்பாக மதுரை சோமுவின் கேசட்டுகளை எடுத்துக் கொண்டு வந்து விடுவார். கேசட் முடிந்தவுடன் தானும் பாடுவார். இனிமையானது அவர் குரல். உபநிடதக் கதைகளைச் சொல்வார். அயர்ந்து போவேன் - நான் உபநிடதம் படித்ததில்லை. இடையில் தமிழ்நாட்டிலிருந்து அவர் குரல் வரும். "அமெரிக்கா வருகிறேன். உங்கள் வீட்டில் ரஸம் சாதம் கிடைக்குமல்லவா? என்பார். சாப்பாட்டுப் பிரியர். சுவாமி சின்மயானந்தா மீது அவருக்குத் தனி மரியாதை. அவருடன் சர்வசகஜமாக, ஒரு நண்பருடன் பேசுவது போல் பேசுவார். ஒருசமயம் சுவாமி சின்மயானந்தாவின் காலில் விழுந்தபோது சின்மயானந்தா சொன்னார். "மணியன் மணியன்! நீ என் காலில் விழாதே! உன்னை என்னால் தூக்க முடியாது!"

மணியனுக்குப் பெரிய்ய தொப்பை!

ஒருசமயம் சொன்னார் மணியன். "கன்கார்டு விமானத்தில் முதல் முறைப் பயணம் செய்த தமிழன் என்று பெருமையுடன் எழுதியிருந்தேன். மறுநாள் ஒரு

**இந்த இதழ் அட்டைப்படம்: யோகா**
**மாடல்: புவனேஸ்வரி**




''எங்க ஆபீஸ் புகார் பெட்டியில் யாரும் புகார் போடுற அளவிற்கே நாங்க விடுவதில்லை.''

''பரவாயில்லையே, அவ்வளவு சிறப்பா வேலை செய்யுறீங்களா?''

''புகார் பெட்டிக்கு பக்கத்துலயே பெரிய அல்சேஷன் நாயைக் கட்டி வெச்சிருக்கோம்!''

— தாரை மா. மகேஷ்ப்ரியன்

கடிதம் வந்தது ஒரு பெண்மணியிடமிருந்து. "நீங்கள் என்ன கன்கார்டில் போவது? ஒரு நாய்க் குட்டியை வைத்தால்கூட போய் வரும்! இதில் உங்கள் சாதனை என்ன?" என்று கேட்டிருந்தார் என்று சொல்லிச் சிரித்தார். தன்னைப் பார்த்தே சிரிக்கும் பண்பு.

எனது எண்ணங்கள் அவரைப் பாதித்தது உண்மை. இதன் வெளிப்பாடு தான் அவர் துவங்கிய மயன் பத்திரிகை. அதேபோல அவருடைய தெளிவும், சரியாக, சட்டென்று முடிவெடுக்கும் அபாரத் திறனும் என்னை அசர வைத்தது. எனக்கு அருமையான யோசனைகள் சொல்வார். 1962 என்று நினைக்கிறேன். சி.எஸ். அவர்கள் எழுதிய "நான் சென்ற சில நாடுகள்" என்ற நூலின் வெளியீட்டு விழா, ஒரு பொங்கல் திருநாளில்... முக்கியமான வி.ஐ.பிக்களையும் சில எழுத்தாளர்களையும் அழைத்திருந்தார்கள். மொத்தம் ஒரு நூறு பேர் இருக்கும். விகடன் அலுவலகம் முன். அப்போது விகடன் ஆசிரியர் வாசன் இருந்தார். "இக்கூட்டத்தை இவ்வளவு சிறப்பாக ஏற்பாடு செய்த மணியனைப் பாராட்டுகிறேன்" என்று ஆசிரியர் வாசன் அவர்கள் பாராட்டினார்.

நான் முதன் முறை மணியனைச் சந்தித்த இரண்டு மாதத்தில் நடந்த நிகழ்ச்சி இது. விருந்து முடிந்த பின் வெளியே வந்தேன். அவரது நிர்வாகத் திறமை பற்றிய வியப்புத் தான் என்னுள் நிறைந்திருந்தது!

(தொடரும்)

## சன் டீ.வி. vs ஜெ. :

# வண்ணம் எண்ணம்?

**தொ**லைக்காட்சி நிலையத்துக்குச் செல்லும் டெலிபோன் கேபிள்கள் வெட்டப்பட்டதால் தமிழ்ப் புத்தாண்டு நிகழ்ச்சிகள் பாதிக்கப்பட்ட விவகாரம், பெரிய சர்ச்சையை உருவாக்கியிருக்கிறது. "இந்த சம்பவத்துக்கு சன் தொலைக்காட்சியின் சதியே காரணம்" என்று ஜெ. அறிக்கை விட, அவர் மீது மானநஷ்ட வழக்கு போடப்போவதாக ஐந்து கோடி கேட்டு நோட்டீஸ் அனுப்பியிருக்கிறது சன். 'இந்த விஷயத்தை விட்டேனா பார்' என்று ஜெவும், தம் எம்.பிக்களின் மூலமாக மத்திய அமைச்சர் சுஷ்மா ஸ்வராஜிடம், "முழு விசாரணை வேண்டும்" என்று மனு கொடுத்திருக்கிறார். மத்திய அரசும் விவகாரத்தை உளவுத்துறை மூலமாக விசாரிக்க உத்தரவிட்டுள்ளதாக தில்லிச் செய்தி ஒன்று கிசுகிசுக்கிறது.

சென்னைத் தொலைக்காட்சியைப் பொறுத்தவரை இது போன்ற சம்பவம் நடைபெறுவது இது இரண்டாவது முறை. முதல் முறை – சென்ற தீபாவளியின் போது. தொலைக்காட்சி நிலையத்தின் எதிர்ப்புறம் நேப்பியர் பாலத்தை ஒட்டி கேபிள்கள் வெட்டப்பட்டன. இந்தச் சம்பவங்களுக்கு யார் காரணம் என்று சொல்ல தொலைக்காட்சி வட்டாரம் தயங்குகிறது. "டெலிபோன் கனெக்ஷன்கள் பாதிக்கப்பட்டன. அது உண்மை. அவ்வளவுதான். அரசியலுக்குள் எங்களை இழுக்காதீர்கள்!" என்றார் ஓர் அதிகாரி.

"எங்கள் இலாகாவின் கீழ்மட்ட ஊழியர்களின் ஒத்துழைப்பு இல்லாமல் இது போன்று நடக்க முடியாது. அரசு அலுவலகங்கள் நிறைய இருக்கும் அந்த ஏரியாவில் ஊழியர்களுக்குப் பண்டிகை நாட்களில் எதுவும் கிடைக்காது. ஊழியர்களில் 'தண்ணி' கேஸ்கள் உண்டு. அதிவேக ரயில் விடப்பட்டதன் காரணமாக அந்தப் பகுதிகளில் அடிக்கடி கேபிள்களை மாற்றும் வேலை நடந்தவாறு இருந்தது. இந்த விஷயத்தில் நிலையான ஏற்பாடு இன்னமும் செய்யப்படவில்லை. முக்கியமான நேரங்களில் தொலைக்காட்சி நிலையம் பாதிக்கப்படும்போது விவகாரம் பெரிதாகிறதே தவிர, சென்னை தொலைபேசித் துறையில் கேபிள் திருட்டு சர்வ சாதாரணம். தொழிற்சங்கம் பலமாக உள்ளதால் சடாரென்று ஊழியர்கள் மேலும் நடவடிக்கை எடுக்க முடியாது. சம்பவம் நடந்த இரண்டு முறையும் போலீஸில் புகார் கொடுக்கப்பட்டுள்ளது" என்றார் சீனியர் தொலைபேசித் துறை அதிகாரி ஒருவர்.

• ஜெயலலிதா



"கேபிள் வெட்டப்பட்ட தினத்துக்கு முன்பு அந்தப் பகுதியில் பொறுப்பாக இருந்த எல்லா ஊழியர்களையும் நாங்கள் விசாரித்தோம். குறிப்பாக யாரையும் பிடிக்க முடியவில்லை. தொடர்ந்து விசாரணை நடக்கிறது" என்கிறது போலீஸ் வட்டாரம்.

"சன் தொலைக்காட்சியின் 'வீச்சு' அதிகமாகிக் கொண்டே போவதால் பொறாமைக்காரர்கள் கிளப்பிவிட்ட வதந்தி இது. வெறும் வாயை மெல்லும் ஜெவுக்கு இது பேல் பூரியாகப் போய்விட்டது!" என்று சன் வட்டாரத்தில் சொல்கிறார்கள். சதி வேலை என்று சொன்னால் சென்ற தீபாவளிக்கு அப்புறம், ஆங்கிலப் புத்தாண்டு, பொங்கல் சமயங்களில் கூட தொலைக்காட்சியில் சிறப்பு நிகழ்ச்சிகள் நடந்ததே. அப்போது ஒன்னும் நடக்கவில்லையே!" என்றும் சொல்கிறார்கள் அவர்கள்.

• கலாநிதி மாறன்



இதற்கிடையில் வி.எஸ்.என்.எல். மூலமாக இயங்கி வரும் சன் செய்திகளை முடக்க முடியுமா என்று முயன்று பார்க்குமாறு, தம் அமைச்சர்களுக்கு ஜெ. உத்தரவு போட்டிருக்கிறாராம்!

— ப்ரியன்

# ஜீன்ஸ்

இரட்டையராகப் பிறந்து, வேறு வேறு இடத்தில் பெண் எடுத்து, பிரச்னைகளால் பிரிகிறார்கள் நாசர் & நாசர். நாசர்-1க்குப் பிறக்கிற இரட்டையர் பிரசாந்த் & பிரசாந்தில், பிரசாந்த்-1க்கு ஐஸ்வர்யாராய் மேல் காதல். இரட்டைப் பிறவிச் சகோதரிகளைத்தான் தம் பையன்களுக்குக் கட்டி வைப்பது என்று கொள்கை முடிவில் இருக்கிற நாசர்-1 இதை எதிர்க்க, ஆள் மாறாட்டம், ஐஸ்வர்யா டபுள் ஆக்ஷன், தகிடுதத்தங்கள் என்று வளர்ந்து, கிளைமாக்ஸில் சுபமாவதற்குச் செலவு 23 கோடி!

ஹாலிவுட் ஸ்டுடியோவில் படப்பிடிப்பு, அதிசயங்கள் ஏழில் பாடல் காட்சிகள், டிஜிட்டல் கிராஃபிக் ஜாலங்கள் என்று ஏராள எக்ஸ்ட்ரா ஃபிட்டிங்ஸ். போதாக்குறைக்கு, ஃபிஃப்டி கேஜி. தாஜ்மஹால், பாக்கட் சைஸ் வெண்ணிலவு (நன்றி : வைரமுத்து) ஐஸ்வர்யா ராய்.

பிரம்மாண்டத்தால் பயமுறுத்துவதில் ஓரளவுக்கு மேல் ஆசைப்பட்டால் கதை எப்படி அடி வாங்கும் என்பதை ஷங்கர் இந்தப் படத்தில் புரிந்து கொண்டிருக்கக்கூடும்.

பாட்டியின் ட்ரீட்மெண்ட்டுக்காக இந்தியாவிலிருந்து அமெரிக்கா வருகிறார் ஐஸ்வர்யா ராய். அங்கே பிரசாந்தைச் சந்திப்பது முதல், காதலாவது வரைக்கும் முதல் பாதி. ஓரிரு ஷாட்களில் வெளிப்பட வேண்டிய இச்சமாசாரம் ஒன்றரை மணி நேரம் இழுபடுவது எத்தனை அலுப்பூட்டுகிறது என்பதை தியேட்டரில் ரசிகர்களின் ரியாக்ஷன் காட்டுகிறது.

தவிரவும் பிரசாந்த் & பிரசாந்த் இரட்டைப் பிறவியின் அந்நியோன்யம், தோழமை மிக்க சகோதரத்துவத்தை வெளிப்படுத்த ரொம்பவே நீட்டியிருக்கிறார்கள்.

இருவரில் ஒருவனைக் காதலிக்கிற ஐஸ், 'யார் நம் ஆள்?' என்று சட்சட்டென்று குழம்பித் தவிப்பதும் எரிச்சல் படுவதும் இயல்பு. இதே இயல்பில் கதை நகர்ந்திருக்கலாம்.

ஆனால் நாசர் அவர்கள் காதலை ஏற்க மறுத்ததும் சட்டென்று ஐஸ்வர்யாவும் இரட்டைப் பிறவிதான் என்று பாட்டி லட்சுமி (தான்!) பொய் சத்தியம் செய்ய உடனே படத்தில் கடைந்தெடுத்த நாடகத்தனம் ஒட்டிக்கொண்டு கடைசி வரை உடன் வருகிறது.



ஒவ்வொரு பாடலிலும் ஒரு புதையலை ஒளித்து வைத்து, அடுத்தது, அடுத்தது என ஏங்கச் செய்திருக்கிறார் ரகுமான். மிகவும் பேசப்பட்டுவிட்ட 'கண்ணோடு காண்பதெல்லாம்'ல் கிராஃபிக்ஸின் உச்சக்கட்டமாக ஹோலோகிராம் ஐஸ்வர்யாராய் பிம்பத்தை ஆட வைத்து பிரமிப்பூட்டியிருக்கிறார் (கிராஃபிக்ஸ்) வெங்கி.

ஏமாற்றம் தரும் முக்கிய விஷயம் ஒளிப்பதிவு. எகிப்திய பிரமிடுகளையும் பைசா நகரத்து சாய்ந்த கோபுரத்தையும் சுதந்தர தேவி சிலையையும் – என்ன முயன்றும் அவற்றின் பிரம்மாண்டத்தை, சிலிர்ப்பூட்டும்விதமாகக் காட்ட முடியவில்லை ஒளிப்பதிவாளரால்.

ஏர்போர்ட் செக்யூரிடியிடம் தன் பையைப் பரிசோதனைக்குத் தருகிறார் ஐஸ். பிரசாந்த் மீதான அவரது காதல் வெளிப்படும் இடம் அது. செக்யூரிடி ஆசாமி பையிலிருந்து, கிள்ளியெறிந்த வெற்றிலைக் காம்புகளையும் உபயோகித்து ஒதுக்கிய பாட்டரிகளையும் குடித்து வீசிய கோக் டின்னையும் எடுக்க, அடுத்தடுத்த கட் ஷாட்களில் அவை பிரசாந்த் உபயோகித்து எறிந்ததைக் காட்டுகிற ஓரிடத்தில் மயிர்க்கூச்செறியச் செய்யும் விதமாக விஸ்வரூபம் காட்டுகிறார் ஷங்கர்.

இந்த ஓரிடம் தவிர மிச்ச எதுவுமே மனத்தில் நிற்கவில்லை!

— ஆர்.பி.ஆர்.

அடை கூட்டி வைத்த கோழியைத் திறந்து விடாமல் கவிழ்ந்த கூடை நிழலாடியதும் கட்டிலிலேயே எழுந்து அமர்ந்தாள் அக்குபாரிக் கிழவி. மிச்சமிருக்கும் ஒரு முழ வெள்ளைக் கூந்தலை பிடறியில் பரப்பி, தட்டி, அள்ளிச் சொருகியது பழக்க தோஷக் கைகள். சுருங்கிய தோலுக்குள் எலும்புக் கூடு தெரிந்தது. தலைவாசலைத் தாண்டியதும் தெருவில் வெள்ளரிக்காய் தின்ற சிறுவனின் திரும்பிய கண்கள் மிரண்டு போயிருந்தன. உதட்டில் தொட்டுத் தழுவிய நாக்கு, பற்களற்ற மாயத்தை உணர்ந்து குழிக்குள் படுத்தது. கிழவி கையேந்தினாள். அலறிக் கொண்டு கிளம்பிய பையன், "தர மாட்டேன் போ" என்று ஓடினான்.

கேவலமா இல்லையா? இப்படியே எத்தனை நாளைக்கி நாங்க அசிங்கப்படுறது?"

"கோழிய தொறந்து விடணும்!"

"பேசாம வாய மூடிட்டு நட"

கேட் சாத்தியது.

திருநெல்வேலி நகரத்துக்கு வந்தே இரண்டு மாதமாகி விட்டது. பட்டிய கல்லில் ஆடையற்று இளம் வெயில்காய, படுத்திருப்பதை கிராமத்தார் எத்தனை நாளைக்குப் பார்த்து முகஞ்சுழிக்க முடியும்? கடைசி காலத்தில் ஏச்சுக்கு ஆட்படக் கூடாது என்று அக்குபாரியை மகன் இங்கு கொண்டு வந்தும் அதே கதி தொடர்கிறது.

"ஒனக்கு நான் என்ன பாவம் செஞ்சேன்? தெனமும் இந்த ரோதனையா... ஆமா கோழி... எந்த வருசம் மூடுன? இது காக்கரச்சான் கிராமமில்ல... டவுன்... எனக்கு பேரன் பேத்தி வந்தாச்சு..." சிந்தாமணியின்

# அக்குபாரிக் கிழவியின் அட்டகாசங்கள்!

ஜன்னலில் எட்டிப் பார்த்த எதிர் வீட்டுக்காரர்களின் வெறுப்படைந்த முகத்தில் முணுமுணுப்பு கிளம்பியது.

"இந்த வயசில இப்படியா சேலையில்லாம வந்து நிக்கிறது? சே! சொரணையில்லாம தெருவில எறங்குறதப் பாரு!"

தலைவாசலுக்கு வந்த புஷ்பம், "அவுங்க மாடியில இருக்காங்க. கிழவி தெருவுல எறங்குனது தெரியாது. தண்ணி பிடிக்கிறதில எனக்கு அந்தம்மாவோட மனஸ்தாபம். நீ சொல்லுக்கா" என்றாள் கோதையிடம்.

தெருவிலிருந்து, "சிந்தாமணியம்மா, சிந்தாமணியம்மா கெழவி, கெழவி..."

வரும் குரல்கேட்டு மாடியிலிருந்து எட்டிப் பார்த்தாள். மாடியில் டடங் டங்ங்ங் ஓசை மெல்லிதாக ஓய்ந்து முடிந்தது. கேட்டைத் தாண்டி, கிழவி முஷ்டியைப் பிடித்துத் திருப்பினாள் சிந்தாமணியம்மாள்.

"இப்பிடி கிளம்பி தெருவுக்கு வர்றயே,

சத்தம் தெருவில் வந்து விழுந்து கொண்டே இருந்தது.

சரியாக உடுத்தி விட்டிருக்கிறாளா மருமகள்? கண்கள் பார்த்தன. அசையும் குட்டியுருவத்தை இடுங்கிய கண்களால் பார்த்ததும் முந்தானை முடிச்சைத் தேடின விரல்கள். மகன் வயிற்றுக் கொள்ளுப் பேரன் முடிச்சைக் கவனிக்கவில்லை. முடிச்சை உள்ளங்கையால் இறுக்கி மறைத்தாள். மகள் சரோஜா ஊரிலிருந்து நாளை வரலாம். வராமலும் போகலாம். இந்த கொள்ளுப் பேரனுக்குத் தர மனசில்லை. கட்டில் தலைமாட்டுக்குப் பின் பெஞ்சு மேல் இருந்த ட்ரங்க் பெட்டியைப் பார்த்த வண்ணம் நின்றாள் மகேஷ்.

"ஓடுறா, எங்கிட்ட ஒண்ணுமில்ல. அம்மாகிட்டே போ" விரட்ட, மாடிப் படியேறிப் போனான்.

கிழவியை டாக்ஸியில் தாத்தா கொண்டு வந்து இறக்கும்போது டிக்கியி

லிருந்து இறங்கியது இந்த ட்ரங்க் பெட்டி. கொள்ளுப் பாட்டியின் உடைமைகளைத் தாத்தா பரிசீலித்து கணக்குச் சொல்லும் போது வெள்ளி குதிரை டாலர் கிடந்தது. பழைய எட்டு முழ சேலைக்கு அடியில் தேவையில்லாமல் ஒரு முழக் கம்பி ஒன்று கிடந்தது. கலைக்குப் போடும் இரண்டு இரும்பு குப்பிகளோடு அந்த குதிரையும் கிடந்தது. பித்தான்கள், நாய்காசு, புலிக்காசு என்று அரைஞாண் கயிறு தோரணங்கள் கிடந்தாலும் அவை ஈர்க்கவில்லை. குதிரையைத் தொடப் போனதும் கிழவி கையைத் தட்டி விட்டாள்.

"அதயேண்டா தொடுற" பற்கள் இல்லாததால் தொபதொப குரலில் அதட்டினாள்.

முதுகில் திடுமென்று தாத்தா அன்று அறைய, அழுதுகொண்டு மேலேறினான் மகேஷ். நெளுக்காகப் படிந்திருக்கும் பிடறி மயிர்; திரண்ட துடைச் சதை; விடைத்த காதுகள். கனைத்த வாக்கில் பாயும் முன்னங் கால்கள்; முதுகின் சுறித்திமிர்; சுழட் டும் மயிர்க்கொத்து வால்; பிடித்த மான குதிரை டாலர். அதை கயிற்றில் கட்டி கழுத்தில் போட்டுக் கொள்ள ஆசை.

கிழவி ட்ரங்க் பெட்டியைத் தொட்டுக் கொண்டாள். மூடிய கதவின் சாவி துவாரத்தில் பார்த்தாள். வெளிப் பார்வை மங்கலாக இருந்தது. கட்டிலில் வந்து படுத்தாலும் தென்னை மட்டை கழன்று தரையில் விழுந்தது போல் உடலுக்குள் உணர்வு. கெட்ட முட்டை நாற்றம் கிளம்பியது. கிழவி எழுந்து பெட்டியைத் திறந்து அடிப்பாகத்தைத் துழாவினாள். கிறுக்புறுக் ஓசை எழுந்தது. கழுத்தில் மடிந்து புரளும் முடியுடைய கம்பீரக் குதிரை அவள் கையில் தடுக்கியது. துணிக் குவியலுக்குள் எதையோ பறித்துத் தோண் டிக் கொண்டே "எந்தோட காணாம், என் தோட காணாம்...."

கத்தினாள்.

திமுதிமுவென்று படியிறங்கின சித்தா மணியின் கால்கள். கதவைத் தள்ளியதும் நாற்றம் குப்பென்று வந்தது. கட்டில், சேலை, தரையெல்லாம் அசிங்கம். சேலை தொடை யோடு ஒட்டிக் கிடந்தது.

"இங்க பக்கத்திலதானே டாய்லெட் இருக்கு? அங்க போனா என்ன? கொலை காரப் பாவி. வெளிக்கு வருதுன்னு கூப்பிட்டா வந்துவிட மாட்டோமா? என்னத்தையோ பறிகொடுத்த மாதிரி கத்தினயே என்ன!"

"எந்தோட காணோம்."

"ஐயையோ எந்தலைவிதி! நேத்துதான் எங்கிட்ட, மக வர்ற வரைக்கும் பத்திரமா வச்சிருன்னு கொடுத்த. அம்மா தாயி.



ஒந்தோடு எனக்கு வேணாம். ஓம் மக ளுக்கே கொடுத்துக்க. இப்பிடி கட்டிலு, வராண்டா பூராவும் அசிங்கமாக்கிட்டு தோடு நெனப்பா?"

சிந்தாமணி சேலையை உருவப் போனாள். அக்குபாரி அவசர அவசரமாக முடிச்சை அவிழ்த்து சில்லறைகளைக் கைப்பற்றினாள். சேலையைச் சுருட்டி மூலையில் போட்டு விட்டுத் தண்ணீர் ஊற்றிக் கழுவினாள்.

"சாப்பாட்ட அளவா கொடுங்கத்த.

பேச்சியம்மா வந்திருக்கு. பாத்திரத்த கழுவிட்டு பாட்டி துணிமணிகள தொவச் சுப் போடச் சொல்லியிருக்கேன்..."

ஆபீஸ் போகும் அவசரத்தில் மகேஷை இழுத்துக் கொண்டு கேட்டில் உரக்கக் கத்தி விட்டுப் போனாள் சிந்தாமணியின் மருமகள்.

செக்கண்ட் ஸ்டேண்டர்ட் போனாலும் ஸ்கூல் பக்கம் என்பதால் மதியம் மேல் ஓடிவந்து விடுகிறான். மறுபடி போக மறுக் கும் வீம்பு. அடுத்தாண்டு அவனை டவு னுக்குள் வேலை பார்க்கும் அலுவலகத்தை ஒட்டியுள்ள ஸ்கூலில் விட்டால்தான் சரிப் பட்டு வருவான் என்ற பேச்சு நாள்தோறும் அடிபடும் ஒன்று.

"இந்தா ஒஞ்சொத்து. மறந்திட்டு ஒப்பாரி வச்செ அவ்வளவுதான்'' ஒரு ஜோடி தோடுகளை மடியில் எறிந்து விட்டுப் போனாள் சிந்தாமணி. பொக்குவாயில் மென்று கொண்டு சிந்தாமணி மறையும் வரை நோட்டம் விட்டுத் திரும்பியது கிழவி. துணி அலசும் பேச்சியம்மாளுக்கு முன், கர்வமாக உட்கார்ந்து கொண்டு பொத்தி னாள், தோடை.

"இன்னக்கி கொஞ்சம் லேட்டாயிடுச்சு. சிந்தாமணி அம்மாவ வேல வாங்கிட்டீங்க. பாட்டீ தினந்தினம் ஒன்ன குளுப்பாட்டு றேன். துணி துவைக்கிறேன். இப்பிடி வராந்தாவில அசிங்கப்படுத்திட்டா, நாந்தானே எல்லாம் பாக்குறேன். ஒங்க தோட எனக்குத் தந்திடுங்க. நீங்க சாகுற வரைக்கும் நா பக்கத்தில இருந்து பாத் துக்கிடுறேன். ஒங்க மக டீச்சர் வேல பாக்குறப்போ இதென்ன கொகறு!"

"வேண்ணா அந்த துணிய வச்சுக்க" - முறைத்துப் பார்த்தாள் பேச்சியம்மா.

"இன்னும் ஒந் தெனாவெட்டு போகலையே"

தலையைச் சிலுப்பிக் கொண்டு கவன மாகப் பெட்டியில் வைத்தாள் கிழவி.

"பேச்சி இங்க வா"

"தோட எனக்குத் தரப் போறயா"

"நீ சும்மாதான் தோட கேக்கிறேன்னு எனக்குத் தெரியும்."

பேச்சியம்மாளுக்கு கிழவியின் சாதுர்யப் பேச்சு பக்கென்றது.

"என்ன" துணியைப் பிழிந்தவண்ணம் அருகில் வந்தாள்.

"மேல போயி எம் மருமக எம் பையங் கிட்ட எதாவது பொறணி பேசுறாளான்னு கேட்டுட்டு வா"

"சாகப் போற நேரத்திலயும் ஒனக்கு தேவையா இந்த வியாதி? நா இந்த வீட்டுக்கு வேலைக்கு வந்து நாலு வருசமாகுது. அந்த அம்மா அப்புறாணி. நாலு வீட்டுக்குத் தள்ளி போயி கேட்டா யாருக்கும் தெரி யாது. இருபது வருசமா இந்த வீட்டில இருக்குதெங்கிறாங்க. நீ என்னயன்னா ரெண்டு மாசத்துக்குள்ள திருநெல் வேலியவே கலக்குறயே? இரு, ஓம் மகன்கிட்ட போயி சொல்றேன்."

"ஐயையோ வேணாம் பேச்சியம்மா"

கட்டிலில் முடங்கிக் கொண்டாள்.

மதியம் வைத்த சாப்பாட்டுத் தட்டை எடுக்க கீழிறங்கி வரும்போது மகேஷ், "குதிரை வாங்கிக் கொடு" என்று அடம் பிடித்து, பின் வந்தான். "நெதம் மதியத்துக்கு மேல டிமிக்கிக் கொடுத்திட்டு ஏண்டா இப்பிடி வீம்பு பிடிக்கிற. ஒங்கம்மாவென் னடான்னா நாலு சாத்து சாத்தி அனுப்பச் சொல்றா. வாய மூடுறா. எத்தனை பிளாஸ் டிக் குதிரை வாங்கித் தர்றது? பூராத்தையும் ஒரு நாளுக்குள்ள பிச்சுப் போட்டுடற. நீ இப்பதான் சின்ன பப்பா. ஆளும் அவனும்... இப்ப வாய மூடுறயா... தாத்தாவ கூப் பிடணுமா?"

சிணுங்கிக் கொண்டு கிழவியறைக்குப் படி இறங்கினான்.

அண்ணாந்து படுத்திருந்தாள் கிழவி. கட்டிலுக்கடியில் மல்லாந்து கிடந்தது தம்ளர். தட்டைக் காணவில்லை. சிந்தாமணி குனிந்து தேடினாள். ட்ரங்க் பெட்டி சந்திலும் காணவில்லை.

"தட்ட எங்க வச்சிங்க?"

கிழவி பரபரக்க முழித்தாள்.

"சொல்றது காதில விழலையா?"

பேசிக் கொண்டே ஜன்னல் பக்கம் பார்த்தாள். இல்லை.

"எதுக்கு இப்பிடி அம்மகள்ளியா இருக்கிங்க? கொஞ்ச லேட்டானா எனக்குச் சாப்பாடு போட மாட்டெங்கிறான்னு வெளியில சொல்லத் தெரியுதில்ல? இன்ன் தட்டு எங்க?"

கிழவி ஒன்றும் சொல்லவில்லை. பாத் ரூமை எட்டிப் பார்த்துவிட்டு டாய்லெட் கதவைத் திறந்தாள், தட்டு கழிவறை பள்ளத்தில் கிடந்தது.

"சாப்பிடுற தட்ட கொண்டு போயி இதுல வச்சிருக்கயே, சோறுதாந் திங்கிறியா? வேற எதாவது திங்கிறயா? எதுக்கு இப்படி வாயாத்தம் பண்ற?"



# இருதய கோளாறுகளுக்கு

## மாரடைப்பு, இரத்த அழுத்தம், இருதய ஓட்டை,

# தெய்வீக மூலிகை மருத்துவம்



இருதயக் கோளாறு ஆரம்ப நிலையாக நெஞ்சு படபடப்பு, லேசான நெஞ்சுவலி, கடின உழைப்பின்போது உடற்சோர்வு, மூச்சு வாங்குதல், லேசான மயக்கம், இரத்த அழுத்தம் அதிகரித்தல் (அ) குறைதல் போன்ற அறிகுறிகள் காணப்படும். இருதயத் தசைகள் தானியங்கும் தசை வகைகளினால் ஆனது. இவைகளின் இயக்கங்கள் முழுக்க, முழுக்க நரம்பு மண்டலக் கட்டுப்பாட்டினால் இயங்கும் தன்மை கொண்டது. சிறு நீரகங்களில் கோளாறு ஏற்படினும், நரம்புப் பகுதியில் கோளாறு ஏற்படினும், இரத்தம் தூய்மையை இழப்பதாலும், இரத்த நாளங்கள் சுருங்குவதாலும் இருதய அடைப்பு (மாரடைப்பு) இரத்த அழுத்தம் இருதயத்தில் ஓட்டை போன்ற கோளாறுகள் உண்டாகின்றன. தூய்மையான உணவு, போதிய உறக்கம், அதிக உடலுழைப்பினை தவிர்த்தல், கடுமையான உடற்பயிற்சி, தேவைக்கு மீறிய உணவு, அதிக கொழுப்பு சத்துள்ள உணவு வகைகள் போன்றவைகளை தவிர்த்தல் மூலமும் உடலுக்கு நல்ல எதிர்ப்பு சக்தியினை அளித்து இரத்த நாளங்களில் அடைபட்டிருக்கும் கொழுப்புப் பொருட்களை கரைத்து வெளியேற்றவல்ல தெய்வீக மூலிகைகளான வேப்பிலை, வில்வம், அத்தி, துளசி, அருகு போன்ற மூலிகைகளை எவ்வாறு உபயோகிப்பது என்பது பற்றிய ஆலோசனைகளை கீழ்க்கண்ட முகவரியிலும், முகாமிலும் டாக்டரிடம் நேரில் பெறலாம்.

50



தெய்வீக மூலிகை வைத்தியர்கள்

தலைமை முகவரி : Dr.C.K.M.குருபரன் & Dr.C.K.M.சபாபதி, S/o.Dr.C.K. மாணிக்கவாசகம்

P.B. No: 30, No: 3, திருநாத முதலி நகர், காலேஜ் எதிரில், திருப்பத்தூர் (N.A.A.) 635 601 ✆ : 04179-20469, 22769.

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரிஸ்ஸ் மேனர் பக்கத்தில் கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8

✆ : 6424285, 6427638

Singapore Enquiry : Mrs. Renuka, Blk 101, #04, -176, Jurong East Street-13, Singapore - 600 101. ✆ : 0065 - 5621218

## 1998 வைத்தியரிடம் நேரில் ஆலோசனை/மருந்தினைப் பெற முகாம் விவரம்.

(முக்கிய பண்டிகை தினங்களிலும் முகாம் உண்டு)

| தேதி | ஊர் | நேரம் / இடம் |
|---|---|---|
| 2-ந் தேதி | வேலூர் (N.A.) | பிற்பகல் 1 to 2 மணி வரை ஹோட்டல் கன்னா (வேகா), 16, ஆப்பீசர்ஸ் லைன், ✆ : 0416 / 23060. |
| 2-ந் தேதி | காஞ்சிபுரம் | மாலை 5 to 6 ராஜம் லாட்ஜ், பஸ் நிலையம் அருகில் 9, காமராஜர் தெரு, ✆ : 04112 / 22519. |
| 1,3,10,11,18,19,21,27,28 ந்தேதி | சென்னை | காலை 9 to 2 மேலே உள்ள சென்னை முகவரியில், ✆ : 044 / 6424285, 6427638. |
| 4-ந் தேதி | கடலூர் (S.A.D.) | காலை 9 to 11 ஆதவாஜ் கட்லண்ட்ஸ் ஹோட்டல், ✆ : 04142 / 30707, 30717. |
| 4-ந் தேதி | விழுப்புரம் | பிற்பகல் 2 to 3 ஹோட்டல் ஆனந்தா, பஸ்நிலையம் எதிரில், ✆ : 04146 / 22962. |
| 4-ந் தேதி | திருவண்ணாமலை | மாலை 5 to 6 ராதா லாட்ஜ் பஸ் நிலையம் எதிரில் ✆ : 04175 / 22536. |
| 9-ந் தேதி | பெங்களூர் | காலை 11 to 12.30 ஹோட்டல் பிராட்வே, கெம்பண்ண தியேட்டர் அருகில் கெம்பே கவுடா ரோட், ✆ : 2266374 |
| 9-ந் தேதி | ஓசூர் | மாலை 3 to 4 சீனிவாசா லாட்ஜ், பாகலூர் ரோட், ✆ : 04344 / 22899. |
| 9-ந் தேதி | கிருஷ்ணகிரி | மாலை 5 to 6 அமராவதி லாட்ஜ், ✆ : 04343 / 22120. |
| 12-ந் தேதி | சேலம் | காலை 11.30 to 12.30 ஹோட்டல் செல்வம், புதிய பஸ் நிலையம் எதிரில், ✆ : 0427 / 449333. |
| 12-ந் தேதி | ஈரோடு | மாலை 4 to 5 ஹோட்டல் ஆக்ஸ்போர்டு, பஸ் நிலையம் எதிரில், ✆ 0424 / 226611 / 12 / 13 / 14 / 15 / 16 / 17 / 18 |
| 13-ந் தேதி | கோயம்புத்தூர் | காலை 9.30 to 12.30 சேரன் பேலஸ் லாட்ஜ் (சாந்தி தியேட்டர் பின்புறம்) ✆ : 0422 / 302211, 302220 |
| 14-ந் தேதி | மதுரை | காலை 9 to 11 ஹோட்டல் கிராண்ட்ஸ் சென்ட்ரல், மேலப் பெருமாள் மேஸ்திரி தெரு, ✆ : 0452 / 743341 |
| 14-ந் தேதி | தஞ்சாவூர் | மாலை 5 to 6 அசோகா லாட்ஜ், ✆ : 04362 / 30021 / 30022 |
| 15-ந் தேதி | திருச்சி | காலை 9 to 11 ஹோட்டல் ஆனந்த், (சென்ட்ரல் பஸ் நிலையம் அருகில்), ✆ : 0431 / 460545. |
| 15-ந் தேதி | நாமக்கல் | பிற்பகல் 2.30 to 3.30 ஹோட்டல் தேவி அன்னபூர்ணா, ✆ : 04286 / 20433 |
| 22-ந் தேதி | தர்மபுரி | காலை 9 to 10 ஸ்ரீ மாதேஸ்வரா லாட்ஜ், ✆ : 04342 / 60226. |
| 22-ந் தேதி | திருப்பூர் | பிற்பகல் 2 to 3 ராமகிருஷ்ணா லாட்ஜ், ✆ : 0421 / 740418. |
| 22-ந் தேதி | உடுமலைபேட்டை | மாலை 6 to 7 குறிஞ்சி லாட்ஜ், பஸ் நிலையம் எதிரில் ✆ : 04252 / 24353. |
| 23-ந் தேதி | திண்டுக்கல் | காலை 9 to 10.30 ஹோட்டல் குறிஞ்சி, பஸ் நிலையம் பின்புறம் ✆ 27017. |
| 23-ந் தேதி | தூத்துக்குடி | மாலை 5 to 6 ஹோட்டல் ஆனந்த், தேவர் புரம் ரோடு, ✆ : 0461 / 327789 |
| 24-ந் தேதி | திருநெல்வேலி | காலை 8.30 to 11 ஹோட்டல் ஸ்ரீ சிந்தாமணி, மதுரை ரோடு, ✆ : 0462 / 333312. |
| 24-ந் தேதி | நாகர்கோவில் | பிற்பகல் 2 to 3 ஹோட்டல் சரவணா, மீனாட்சிபுரம், ✆ : 04652 / 25669. |
| 25-ந் தேதி | விருதுநகர் | காலை 9 to 10 அண்ணன் லாட்ஜ், மதுரை ரோடு, ✆ : 04562 / 45537. |
| 25-ந் தேதி | கரூர் | பிற்பகல் 2.30 to 3.30 மணி வரை அரசி லாட்ஜ், ஜவகர் பஜார், ✆ : 63763. |

Dr.CKM

DIVINE HERBAL CENTRE

தகவல் : டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 23 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.60/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.60/-ம் தலைமை முகவரிக்கு M.O. அல்லது D.D. அனுப்பவும்.

7-ந் தேதி – மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), Ph : 4011589

# KALKI SHOPPING PAGE



SARJAN

திட்டிக் கொண்டே வராந்தாவுக்குப் போனாள் சிந்தாமணி.

பாவமாக உக்கார்ந்திருந்த அக்குபாரிக்கு உருவம் மறைந்ததும் குறும்புச் சிரிப்பு தோன்றியது. எதையோ சாதித்து விட்ட உணர்வு கிழவிக்கு.

பெட்டியைப் பார்த்தவண்ணம் நின்றான் மகேஷ்.

''டேய், பிஸ்கோத்து இருந்தா ஒம் பாட்டிக்குத் தெரியாம கொண்டு வா.''

"அந்த குதிரைய கொடுப்பியா பாட்டி?"

"எந்த குதிரை?"

"பெட்டியில வச்சிருக்கியல்ல?"

"மொதல்ல கொண்டு வா"

வேகமாகப் படியேறினான்.

"பிஸ்கோத்தே பிஸ்கோத்தே.." மாடியில் சத்தத்தோடு உருளுவது கேட்டது.

தாத்தா, "இனிமே வீம்பு பிடிப்பியா. ம்ம். ஸ்கூலுக்குப் போகாம. ம்ம். ம்ம்."

அடிக்க, மகேஷின் அழுகைச் சப்தம் அடர்ந்து கிளம்பியது. இருப்பினும் இறுதி வெற்றி குழந்தைதானே பெற்று விடுகிறது?

பாய்ந்து வரும் குதிரைகளைத் திரைப் படங்களில், டீ.வி.யில் பார்க்கும் போதெல் லாம் இனந்தெரியாத மோகம், அந்த டாலர் குதிரை மேல் மகேஷிற்குப் படர்ந்து விடு கிறது. அதிலும் வெள்ளைக் குதிரை மிகவும் வசீகரிக்கிறது. நாள்தோறும் அப்பா தன் னைக் குதிரை மேல் ஏற்றி டவுனுக்குள் கொண்டு செல்ல மாட்டாரா என்ற ஏக்கம். ஆனால் அவர் நீண்ட நாட்களுக்கு ஒரு முறை வந்து, போய் விடுகிறார். ஸ்கூல் முன், வகுப்புத் தோழர்களை டாக்ஸி இறக்கி விட்டுப் போகும் அந்த நிமிடமெல்லாம் குதிரையிலிருந்து இறங்கி கூட்டாளிகள் முன் வர ஆர்வம் கொப்பளிக்கிறது. சில சமயம் டகடக் டக் டகடக் டக்கென்று டாக்ஸியை முந்திக் கொண்டு கிளம்பும் கனவு கலையாமல் இருக்கிறது.

மெதுவாய்ப் படியிறங்கி வந்த மகேஷ் அக்குபாரிக் கொள்ளுப் பாட்டி அறைக்குள் குடுகுடுவென்று ஓடி ஒளிந்தான்.

"கதவ லேசா சாத்திட்டு வாடா"

அவன் ஒருக்களித்து விட்டு, கட்டிலுக்கு வந்தான். சுற்றுக் காகிதத்தைக் கிழித்து ஏழெட்டு பிஸ்கட்டுகளை எடுத்து நீட்டி னான். கிழவி மடியில் இட்டுக் கொண்டு ஒன்றை உடைத்து வாயில் குதப்பினாள். கிழவியின் உதடுகளில் பிஸ்கட் துகள்



''இதோ பாருங்க மாப்ளே, ஸ்கூட்டர் கேட்டீங்க வாங்கி குடுத்துட்டேன். இப்போ ஆபீஸுக்குப் போற வழியெல் லாம் குண்டும் குழியுமா இருக்கு, ரோடு போட்டு குடுங்கன்னு கேக்கறது கொஞ் சம் கூட நல்லாயில்லே!''

– நெல்லிக்குப்பம் வி.மோகன்

தெரிந்தது.

"சூஸ்பரி இருக்காடா?"

"பாட்டி அம்மா பீரோவில வச்சிருக்கு வரவும், எடுத்துத் தர்றேன்."

''ஒங்க அம்மாவுக்குத் தெரியாம கொண்டு வாடா."

"சரி. பாட்டி அந்த குதிரை..."

"தர்றேன் அவசரப்படாதே."

கட்டில் ஓரத்தில் அமர்ந்து பல்லில் லாமல் கிழவி மென்று விழுங்குவதையே பார்த்தான்.

மறுநாள் மதியப் போதில் படியேறி வந்த கிழவியின் மகள் சரோஜா, பொசுக் கென்று சேரில் உட்கார்ந்தாள். அக்குபாரி பாட்டி வந்தபின் அத்தையை அடிக்கடி இங்கு பார்க்க முடிகிறது. டீ.வி. ஓடிக் கொண்டிருந்தது. மகேஷின் தாத்தா படித் துக் கொண்டிருந்த புத்தகத்தை மூடிவிட்டு கண்ணாடியை மடக்கினார்.

"போன வாரம் நீ வல்ல. அம்மா பக லெல்லாம் வருவாளா வருவாளான்னு கேட்டது."

"பரீட்சை பேப்பரைத் திருத்த வேண் டியதாயிருச்சி. அதான்"

அண்ணன் தங்கையிடையே பெரிய தொரு சம்பாஷணை நிகழவில்லை.

போன வாரத்துக்கு முந்தின வாரம் முன்கூட்டி வந்து அவதிப்பட்டுப் போனாள் டீச்சரம்மா. டாய்லெட்டெல்லாம் நாஸ்தி



''எல்லா அரசியல் கட்சிகளிலும் அவருக்கு நல்ல செல்வாக்கு இருக்கு துங்க!''

''அப்படியா?! யாருங்க அவர்?!''

''கட்சிக் கூட்டங்களுக்குக் கூட்டம் சேர்க்கறவரு!''

– யமுனா ரெங்கநாதன்

பண்ணியதைப் பார்க்க வந்த மகள் கழுவும் படியாக சூழ்நிலை நிர்பந்தித்தது. இடைவிட்டு இந்த வாரம் தாமதமாக வந்தமர்ந்த ரகசியம் மற்றவர்களுக்குத் தெரிய வாய்ப்பில்லை.

பையை வைத்து விட்டு கீழிறங்கிப் போனாள். "அம்மா சரோஜா வந்திருக்கேன்'' எழுப்பினாள். கிழவி எழுந்து உட்கார்ந்தாள். கிழவி கசுபுசு குரலில் பேசினாள்.

"ஊருல கட்டையன்கிட்ட ஆயிரம் ரூவா வட்டிக்குக் கொடுத்தேன். வட்டிய வாங்கிட்டயா''

''அவன் எண்ணூரு வாதான் தரணுமாம். இருநூறு, தொட்டி வாங்கணுமன்னு வாங்கிட்டயாமே."

"அவங்கிட்டதான் வாங்கி எடுத்தேனா?''

''வேற யாருகிட்டயும் கொடுத்து வச்சிருக்கயா?''

"வேற யாருகிட்ட? செவனாண்டிகிட்ட..''

படியிறங்கும் காலடி ஓசை கேட்டதும் டீச்சரம்மா உதட்டில் விரல் வைத்துக் காட்டினாள். சட்டென கிழவியிடம் பேச்சு நின்றது. சிந்தாமணி இரண்டு காப்பியை வைத்து விட்டுப் பேசாமல் திரும்பினாள்.

"இருக்கிறவங்களுக்கு இம்சதராம ஒனக்கு நடக்கத் தெரியாதா...?'' சத்தம் கூட்டி சரோஜா காலடி ஓசை படியில் மறையும் வரை சொன்னாள். சட்டென தணிந்த குரலில், "சிவனாண்டி...''யென்று ஞாபகப்படுத்தினாள்.

மகேஷ், பிஸ்கட் பாக்கெட்டை ஒளித்து கதவைத் தள்ளி நுழைந்தபோது கிழவி ட்ரங்க் பெட்டியைத் திறந்து எதையோ தேடிக் கொண்டிருந்தாள். டீச்சரம்மா கையில் ஒரு ஜோடி தோடு. அதைப் பேப்பரில் சுற்றி மணிபர்சில் வைத்தாள்.

"டேய், நீ போய் வெளையாடுறா"

டீச்சரம்மா சொல்லியும் கதவோரத்தில் சாய்ந்து நின்றான். "கொண்டு போயி எம்பேத்திக்குக் கொடு. பத்திரம்'' அக்குபாரி கிழவி வெள்ளிக் குதிரை டாலரை நீட்டினாள்.

மேலேறிய சரோஜா அத்தைப் பாட்டி பின்னால் ஓடினான். அந்த குதிரை டாலரைக் கேட்டால் தாத்தாவிடம் சொல்லி விடுவாளோ என்ற பயம் ஒட்டிக் கொண்டது. தனியாக இருக்கும்போது கேட்கலாமா என்ற ஆசையும் தொடுக்கியது.

சாப்பிட்டு விட்டு எல்லோரிடமும் சொல்லிக் கொண்டு மறுபடியும் அக்குபாரி பாட்டியைப் பார்க்கப் போனாள் சரோஜா பாட்டி.

முடிச்சில் மறந்து போய் இருந்த சில்லறைகளை கவனமாக அவிழ்த்து மகளிடம் கொடுத்தாள். உயரமும் திடகாத்திரமும் கொண்ட டீச்சரம்மாவைப் பார்க்கவே பயமாக இருந்தது மகேஷிற்கு. கேட்கத் துடித்தாலும் அந்நியோன்யமற்ற உருவம் பயத்தை அளித்தது. சரோஜா பாட்டி என்ற அந்த டீச்சரம்மா தெருவில் இறங்கிய பின்னும் மகேஷிற்கு அந்த குதிரையைக் கேட்க முடியாமல் கேட் கதவுகளை ஓடிப் போய், பிடித்து நின்றான்.

சரோஜா அப்போதிருந்து தன்னை வளைய வந்த மகேஷை கவனித்ததாகத் தெரியவில்லை. இருப்பினும் ஒரு புன்னகையைச் சிந்தியிருந்தால் அவன் கேட்டிருக்கக்கூடும். பொலபொலவென மர முதிர்க்கும் இலைகளென தன் உலகமே நெஞ்சுக்குள் நழுவி, பாரமாய் இறங்குவது வெலவெலப்பைக் கொடுத்தது. முதன் முதலாக எதையோ இழந்து விட்ட அதிர்வு அவன் உடலில் பரவியது.

ஆஜானுபாகுவான டீச்சரம்மா முக்கில் மறைந்தாள். குப்பென்று கண்கள் பூத்தன. கீழ் இமைகளில் பெரும் துயரமாய்த் திரண்ட கண்ணீர்த் துளிகள் உதிர்ந்தன. குழந்தையின் வேதனை நிறம் கூடப் பவளமாய் ஜொலித்த வண்ணம் பூமியை முத்தமிட்டன.

''டேய் தெருவில் என்ன வேடிக்கை?'' தாத்தா அதட்டும் குரல் மேலிருந்து கேட்டது.



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

16, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
சென்னை- 600 063. தொலைபேசி : 2376129



## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர்! வணக்கம்

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த ஒன்பது ஆண்டுகளாக நடைபெற்று வரும் **"ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்"** தாய், தந்தையற்ற, வசதியற்ற, திக்கற்ற 50 மாணவர்களும் 20 மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை, மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன் உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்த்து வருகிறார்கள்.

மேலும் பகவான் **ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர்** ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே, தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியை செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| காலை சிற்றுண்டி ( 70 பேருக்கு ) | ரூ. | 500/- |
| மதிய உணவு ( இனிப்புடன் ) | ரூ. | 1,000/- |
| இரவு சிற்றுண்டி | ரூ. | 750/- |
| இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 300/- |
| ஒரு மாணவனுக்கு ஓரண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு ( உணவு, உடை, கல்வி ) | ரூ. | 6,000/- |
| குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 40,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

உங்கள் நன்கொடைகளை **"ஸ்ரீ சாரதா சக்தி பீடம்"** என்ற பெயருக்கு Cheque/DD/MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி சர்வாத்மானந்தர்.

ADCHOICE

வருமான வரி விலக்கு ( **Section 80 G** ) உண்டு

சர்க்கரை வியாதி இருக்கிறதா இல்லையா என்பதை அறிந்து கொள்ள ஒரு சின்ன ரத்தப் பரிசோதனை செய்து கொண்டு வரச் சொல்லுவார் டாக்டர். உண்மையில் இது 'ஒரு' அல்ல; இரு ரத்தப் பரிசோதனைகள். காலை வேளையில் வெறும் வயிற்றில் இருக்கும்போது ஒரு முறையும், சாப்பிட்ட ஒன்றரை மணி நேரத்துக்குப் பிறகு ஒரு முறையுமாக இரண்டு தடவைகள் ரத்தப் பரிசோதனைச் சாலைக்குச் சென்று ரத்த சாம்பிளைக் கொடுத்துவிட்டு வர வேண்டியிருக்கும். (இரண்டாவது முறை கொஞ்சம் ஸ்வீட்டை சாப்பிட்டுப் போனால் நலம் என்றும் சொல்வார்) எதற்காக இப்படி சோதனை மேல் சோதனை? டயாபடிஸ் பற்றிய சில அடிப்படை உண்மைகளைத் தெரிந்து கொண்டால் இது விளங்கும்.

நம் உடலில் வயிற்றுக்குப் பின்னால் மறைந்து கொண்டு எட்டிப் பார்க்கும் பாகம் கணையம். இந்தக் கணையத்திலிருந்து சுரப்பதுதான் இன்சுலின். இந்த இன்சுலினால் இரண்டு பயன்கள். நம் உடலுக்குத் தேவைப்படும் சக்தியை திசுக்களில் சேமித்து வைக்க இது உதவுகிறது. அதே சமயம் இப்படிச் சேமிக்கப்பட்ட சக்திகள் மீண்டும் ரத்தத்தில் கலந்து உடலெங்கும் பரவி புத்துணர்வு ஊட்ட உதவுவதும் இதே இன்சுலின்தான்.

இந்த இரண்டு செயல்பாடுகளும் நேரெதிராக இருக்கிறதே. இவை இரண்டுக்குமே காரணமாக ஒரே வஸ்து - இன்சுலின் - இருக்க முடியுமா என்ற சந்தேகம் வருகிறதா?

அதுதான் இன்சுலினின் தனிச் சிறப்பு! நேரம் அறிந்து அதிகமாகவோ அல்லது குறைவாகவோ இந்த இன்சுலினை வெளிப்படுத்துவதன் மூலம் கணையம் இந்த இரண்டு வேலைகளையும் செய்கிறது. எப்படி?

உணவு வயிற்றுக்குள் இறங்கியவுடன் கணையத்தில் இன்சுலின் அதிகமாகச் சுரக்கும். இதன் காரணமாக ரத்தத்தில் உள்ள இன்சுலின் அளவு அதிகமாகும். இந்த இன்சுலின் காரணமாக உணவில் உள்ள கார்போஹைட்ரேட் எனப்படும் மாவுச் சத்தில் உள்ள க்ளுகோஸ், திசுக்களில் ஸ்டோர் செய்யப்படுகிறது.

இன்சுலின் குறைவாகச் சுரந்தால்

• இரண்டாவது டெஸ்டுக்கு முன்னால் கொஞ்சம் ஸ்வீட்டும் சாப்பிட்டுப் போகச் சொல்வார் டாக்டர்





அவஸ்தைகள் தொடங்குகின்றன. உணவிலிருந்து பெறப்படும் க்ளூகோஸ் சக்தி தேவைப்படும் அளவுக்கு திசுக்களில் சேமித்து வைத்துக் கொள்ளப் படுவதில்லை. அதாவது அதிகப்படி க்ளூகோஸ் சத்து ரத்தத்திலேயே இருந்து கொண்டு, உடலில் சுற்றிச் சுற்றி வருகிறது. இந்த நிலை ஒருவருக்கு இருந்தால் அவருக்கு டயாபடிஸ் என்று பொருள்.

ரத்தத்திலிருந்து சிறுநீரகம் பிரித்தெடுக்கும் தேவையற்ற, வெளியேற்றப் பட வேண்டிய திரவம்தான் சிறுநீர். சிறுநீரை சோதித்தாலேகூட, அதிலுள்ள க்ளூகோஸ் அளவைக் கொண்டு ஒருவருக்கு டயாபடிஸ் இருக்கிறதா இல்லையா, எந்த அளவில் என்பதைத் தோராயமாகத் தெரிந்து கொள்ளலாம்.

ஆனாலும் டயாபடிஸை உறுதி செய்து கொள்ள ரத்தப் பரிசோதனைதான் ஏற்றது.

பொதுவாகப் பல மணி நேரங்கள் எதுவும் சாப்பிடாமல் இருக்கும் ஒரு சராசரி மனிதனின் ரத்தத்தில் உள்ள க்ளூகோஸ் அளவு, அறுபதிலிருந்து நூறு மில்லிகிராம் வரை இருக்கும். (அதாவது நூறு மில்லிலிட்டர் ரத்தத்துக்கு இவ்வளவு என்கிற கணக்கு.) இரவில் எதுவும் சாப்பிடாததால் காலையில் ஒரு சராசரி மனிதனின் ரத்தத்தைப் பரிசோதனை செய்தால் அதில் இந்த அளவுக்குள்தான் ரத்தத்தில் உள்ள க்ளூகோஸ் இருக்கும்; இருக்க வேண்டும்.

# சேமிப்பு குறைந்தால் அபாயம்!



சாப்பிட்டு ஒரு மணி நேரத்தில் ரத்தத்தில் உள்ள க்ளூகோஸின் அளவு 80லிருந்து 140 வரை அதிகமாகும். இதைக் கண்டுபிடிக்கத்தான் நாம் இரண்டாவது முறையாக ரத்த சாம்பிளைக் கொடுத்து விட்டு வருகிறோம்.

இரண்டாவது முறை எடுக்கப்படும் ரத்த சாம்பிள் மட்டுமே போதாதா? அதாவது சாப்பிட்ட ஒன்றரை மணி நேரம் கழித்து மட்டுமே இந்தச் சோதனையைச் செய்து கொண்டால்கூட டயாபடிஸ் உண்டா இல்லையா என்பதை அறிந்து கொள்ளலாமே என்று நினைக்கக் கூடாது. வெற்று வயிற்றிலேயே ரத்தத்தில் சர்க்கரை அதிகம் இருக்கிறதென்றால் அதுவும் கவலைப்பட வேண்டிய விஷயம்தான்.

சில சமயம் அனுமதிக்கப்பட்ட சராசரி க்ளூகோஸ் அளவைவிட, ஓரளவு அதிகமாக நம் உடலில் இருப்பது மேற்படி சோதனைகளில் தெரிய வரும்போது டாக்டர் இன்னொரு பரிசோதனையைச் செய்து கொண்டு வரச் சொல்லுவார். அதிக நேரம் எடுத்துக் கொள்ளும் அந்த சோதனை அடுத்த வாரம்! ○

— ஜி.எஸ்.எஸ்

# குறையொன்றுமில்லை

பகவானுடைய முதல் ஒன்பது குணங்களைச் சொன்னேன். இப்போது அடுத்த ஒன்பதைப் பார்ப்போம். இந்த இரண்டாவது ஒன்பதிலே முதல் குணத்தைப் பார்த்தோமானால், 'அமலத்வம்' என்கிற குணம்.

மலம் என்றால் அழுக்கு என்று அர்த்தம். அமலம் - என்றால் அழுக்கற்றது. அழுக்கற்றவன் பரமாத்மா என்று பொருள். அப்பழுக்கற்றவன்!

***அமலன், அவியாத சுடர், அளவில்லா ஆரமுதம்***
***அமலனாதிப் பிரான்; அடியார்க்கு என்னை ஆட்படுத்த***

***விமலன்....*** - திருப்பாணாழ்வார் உயர்ந்த ரீதியிலே ரங்கநாதரைக் கொண்டாடுகிறார்.

அமலன், விமலன், நிர்மலன் என்று பலவிதமாகச் சொல்கிறார்.

மலத்துக்கு எதிர்த்தட்டானவன் பரமாத்மா. அவனிடத்திலே குணங்கள் நிறைய இருக்கின்றன...

நிர்குண : நிரஞ்சன : பரமாத்மாவுக்கு குணமில்லை என்று ஓரிடத்திலே வேதம் சொல்கிறது!

இந்த இடத்திலே ஆசார்யர்கள் வியாக்யானம் பண்ணும்போது, 'குணம் அற்றவன் என்றால் குணங்களே அற்றவன் என்று அர்த்தமில்லை. கெட்ட குணங்கள் பகவானிடத்திலே கிடையாது; எல்லாம் சுகுணம் தான்...' என்று விளக்கம் அளிக்கிறார்கள்.

ஆதிசங்கர பகவத் பாதாள், சகுணோபாசனையைச் சொல்லி, அதற்கும் மேலே நிர்குணோபாசனையைச் சொல்கிறார்.

சகுணோபாசனை என்பது எல்லோரையும் ஆகர்ஷிக்கக்கூடியது. எப்படிப்பட்டவர்களுடைய இதயத்தையும் அப்படியே இழுக்கவல்லது. அதை 'இல்லை செய்ய' முடியாது என்பதைத்தான் ஸ்பஷ்டமாக விவரிக்கிறார் ஆதிசங்கரர்.

அவர் வாக்கைப் பாருங்கள் :

***ஜீவன் முக்தோபி லீலையா, விக்ரஹம் க்ருதவா பஜந்தே...***

ஜீவன் முக்தர்கள் இருக்கிறார்களே... - அதாவது இனி முக்தி அடைய வேண்டும் என்பது அவர்களுக்கு இல்லை. இங்கேயே முக்தியை அடைந்திருக்கும்படியான மகான்கள் அவர்கள். அவர்களுக்கு இனி பூலோகத்தில் எதுவும் ஆக வேண்டும் என்பது இல்லை. பூஜை பண்ண வேண்டும் என்பது இல்லை; விரதத்தை அனுஷ்டிக்க வேண்டும் என்பது இல்லை; யக்ஞ யாகாதிகள் பண்ணவேண்டும் என்பதில்லை...

இனிமேல் ஒன்று பண்ணி அவர்கள் முக்தியைச் சம்பாதிக்க வேண்டும் என்பது இல்லாமல் அவர்கள் வந்து பூமியிலே இருந்து கொண்டிருக்கிறார்கள்.

அப்படிப்பட்ட மகான்களுக்குக் கூட விக்ரஹ ஆராதனை, பகவானுடைய வடிவழகு - இந்த திவ்யமான ரூபம், குணம்... இதைப் பார்க்கும்போது, தாங்கள் கூட ஆராதனம் பண்ண வேண்டும் என்று தோன்றுமாம்! ஆகையினாலே ஜீவன் முக்தர்கள் கூட, எதிரே விக்ரஹத்தை வைத்துக் கொண்டு ஆராதிக்கும்படியான குண விசேஷமும் அழகும் உடையவன் அவன்.

அதே போல் மாண்டு, பிறப்பொழிந்து வைகுண்டம் புக்கவரும் அவனையேதான் எண்ணுகிறார்கள் :

எல்லாவற்றையும் முடித்துக் கொண்டு, அந்த உயர்ந்த மார்க்கத்திலே போகும்போது; மின்னல் புருஷன் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போவானாம். அப்போது போய் அங்கே வைகுண்டத்திலே பகவானைப் பார்க்கிறான்....

அந்த எம்பெருமானைப் பார்த்து, தூரத்திலேயே நின்றபடி கைகூப்புகிறான்.

இதைப் பார்த்துவிட்டு பகவான் என்ன பண்ணுகிறான்...? சட்டென்று கைதட்டி அருகே கூப்பிடுகிறான்!

நாம் திருவேங்கடமுடையானை சேவிக்கப் போனோமானால் 'ஜருகு ஜருகு'தான்! உள்ளே இருக்கிறவன் நம்மைப் பார்த்துக்

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்



# அருள்வாக்கு

''போச்சு! போச்சு! கலியில் எல்லாம் போச்சு! ஏதாவது கொஞ்சம் மிச்சமிருந்தாலும் அதுவும் கால க்ரமத்தில் போயே போயிடும். எல்லாம் மிருகப் பிராயமாயிடும்'' என்று புராணங்கள் பயமுறுத்துகின்றனவென்றால், நாம் ஆலஸ்யமாக (மெத்தனமாக) இருந்து விடக் கூடாது என்று எச்சரித்து உசுப்பிவிட்டு உஷார்ப்படுத்துவதற்குத்தான். ரொம்பவும் ஆபத்தாக வர்ணித்தால்தான் நாம் அசைந்து கொடுப்போம் என்பதால்தான்.

'கலிதான் அதர்ம யுகமென்றால் நாம் அதர்மமாகத்தான் இருந்துவிட்டுப் போவோமே!' என்று சொல்வது தப்பு. ''திருடர்கள் ஆபத்து ஜாஸ்தி இருக்கிறது'' என்று போலீஸ் தண்டோராப் போட்டால் என்ன செய்வோம்? திருடர்கள் வந்து எடுத்துக்கொண்டு போகட்டும் என்று நாமே உடைகளைத் தெருவில் போட்டுவிட்டா உட்கார்ந்து கொண்டிருப்போம்? 'காப்பாற்ற முடிகிறவரையில் காப்பாற்றிக் கொள்வோம்' என்றுதானே ஜாக்ரதை செய்து கொள்வோம்? போலீஸ் தண்டோரா போட்டதன் நோக்கமும் இப்படி ஜாக்ரதை செய்து, முடிந்தமட்டும் ரக்ஷித்துக் கொடுப்பதற்குத்தானே? ''கலி அதர்ம ஆட்சியை ஆரம்பித்து விட்டான்'' என்று சாஸ்த்ரங்கள் தண்டோரா போடுவதற்கும் தாத்பர்யம், கூடிய மட்டும் தர்மத்தை ஜாக்ரதையாக ரக்ஷித்துக் கொள்வதற்குத்தானே ஒழிய, 'ஒன்றும் பண்ணிக் கொள்வதற்கில்லை' என்று, இருப்பதையும் விட்டுவிட்டு வீணாகப் போவதற்கல்ல.

இந்த யுகத்தில் வரும் அதர்ம ப்ரவாஹத்தை ஒருவன் எதிர்த்து நின்றால்தான் மற்ற யுகங்களில்

கைதட்டிக் கூப்பிட்டானானால் எவ்வளவு அழகாக இருக்கும்! அப்படி அவன் கூப்பிடும்படியான காலம் குறுகாதா!

அதுபோல வைகுண்டத்திலே பகவான் கூப்பிடுகிறான்... வாசலில் நிற்பவரை 'வா' என்று அருகில் அழைக்கிறான்.

அப்போது இவருக்கு ஒரு சந்தோஷம். கிட்டே போகிறார். போனால், அங்கே ஆதிசேஷ சர்ப்பத்தின் மேலே உட்கார்ந்திருக்கிற பரமாத்மா கீழே குனிந்து கையை நீட்டி அப்படித் தூக்கி விடுகிறார் அவனை. கை கொடுத்துத் தூக்கி அந்த ஆதிசேஷ சர்ப்பத்தின் மேலே நிறுத்தி.... அப்படியே மேலும் அங்கே அவனை நிறுத்தாமல் தன் மடியிலேயே அமர்த்திக் கொண்டு, கட்டி அணைத்து உச்சி முகந்து.... "நீ இத்தனை நாட்களாக எங்கே போயிருந்தாய்...?" என்று கேட்கிறான்!

இவரும், ''அங்கே போயிருந்தேன்... இங்கே போயிருந்தேன்... மெட்ராஸ்ல கொஞ்ச நாளாக இருந்தேன்; ஆஸ்திக சமாஜத்திலே கதை கேட்டேன்; ஆஸ்திக சமாஜத்திலே கதை சொன்னேன்!.... ....பல இடங்களிலும் சுற்றி அலைந்திருக்கிறேன்...

இன்றுதான், சேர வேண்டிய இடத்திற்கு வந்து சேர்ந்திருக்கிறேன். இத்தனை நாளாகப் போயிருந்தேன்.... இப்போதுதான் வந்திருக்கிறேன்'' என்று பேசுகிறார்!

இந்த 'வருவது' 'போவது' பிரயோகத்துக்கும் ஒரு விளக்கம் இருக்கிறது. வால்மீகி ராமாயணத்திலே, விபீஷணன் 'ராவணன் சபையிலிருந்து ராமன் இருக்கும் இடத்துக்குப் போனான்' என்று வருகிறது. வால்மீகி அதை அப்படித்தானே சொல்ல வேண்டும்...? ஆனால், அவர் என்ன சொல்கிறார்... 'விபீஷணன் ராமனிருக்கும் இடத்துக்கு வந்தான்' என்கிறார். வந்தான் என்ற பதம் தான் பிரயோகம் பண்ணுகிறார்.

நித்யம் வரக்கூடியவர் ஒருத்தர்... ஒரு நாளைக்கு அவரைக் காணோம்.... அவர் பிள்ளை – எப்பவும் அவர் பக்கத்திலேயே உட்கார்ந்து பிரவசனம் கேட்கக்கூடியவர் – வந்திருக்கிறார். அவர் அப்பாவைக் காணோம்!

பிள்ளையைப் பார்த்துக் கேட்கிறேன் அப்பா ஏன் வரவில்லை என்று...

பிள்ளை சொல்கிறார் : ''ஸ்ரீரங்கம் போயிருக்கிறார் அப்பா... உங்களிடம் சொல்லச்

செய்யும் தர்மாநுஷ்டான பலனை விடக் கோடி மடங்கு பலன் பெறலாம். எதிர்ப்பு உண்டான ஸமயத்தில் தடுத்து நின்றால்தான் பெருமை அதிகம்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

சொன்னார். இன்னும் இரண்டு நாட்களில் வந்து விடுவார்....''

ஆக, சுவஸ் தானத்துக்கு - உரிய இடத்துக்கு - வருகிறபோது 'வந்து விடுவார்' என்கிற பதப் பிரயோகம். சுவஸ் தானத்தை விட்டு வெளியே போகிறபோது, 'போயிருக்கிறார்' என்கிறோம்.

இப்போது, 'விபீஷணன் வந்தான்' என்று சொல்லும்போது... அவன் இத்தனை நாட்களாக இருக்க வேண்டிய இடத்தில் இல்லை... என்று அர்த்தம்! ராமனுடைய திருவடி தான் அவன் இருக்க வேண்டிய இடம் என்பத னாலே அவன் அங்கு போன போது, 'வந்தான்' என்ற பதப் பிரயோகம்!

இதை வைத்துக் கொண்டு நாம் எல்லோரும் இப்போது கேள்வி கேட்டுக் கொள்ளலாம்... நாமெல்லாம் போயிருக் கிறோமா...? வந்திருக்கிறோமா...?

நாமெல்லாம் போயிருக்கிறோம்.... எங்கேயோ போயிருக் கிறோம். பகவானை விட்டு தூரப் போயிருக்கிறோம். எப் போது நாம் வந்தவர்களாவோம்...?

அவன் திருவடியிலே சேர்ந்து, என்றைக்குக் கைங்கர்யம் பண்ணுகிறோமோ... அன்றைக் குத்தான் வந்தவர்களாகவும் ஆவோம்; வாழ்ந்தவர்களாகவும் ஆவோம். இல்லையென்றால் வாழ்ந்த வர்களாக மாட்டோம்...

நாமெல்லாம் ரொம்ப அழகாக வாழ் கிறதாக நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் உபநிஷத் நமக்கெல் லாம் ஒரு பெயர் வைத்திருக் கிறது....! என்ன பெயர் என் றால்... வாழாவெட்டி! வாழா வெட்டி என்று பெயர் வைத்திருக் கிறது நமக்கு!



சர்வலோகத்துக்கும் பதி அவன். கணவன் அவன்... அவனை விட்டுப் பிரிந்து நின்றால் வாழாவெட்டிதானே! பகவானோடு ஒன்றி நின்றால் அல்லவோ நாம் வாழ்ந்தவர் களாவோம்.

அப்படியானால் வாழ்தல் என்பது என்ன...? பகவானு டைய திருவடியை அடைந்து, நித்ய கைங்கர்யம் பண்ணி னால், அப்போதுதான் நாம் வாழ்ந்தவர்கள் ஆகிறோம்!

அவ்வாறு அவன் திருவடியிலே நித்ய கைங்கர்யம் நமக் குச் சித்திக்க வேண்டும் என்பதை ஆசார்யர்கள் இப்படி வலியுறுத்துகிறார் கள்.

ஆனால், வைகுண்டம் புக்கவரும்

மீண்டுதொழ காதலிக் கும் வேங்கடமே!

- வைகுண்டம் போகிற வரும், அங்கே பகவானால் கூப்பிடப்பட்டு அவன் மடியிலே உட்கார்ந்து உச்சி முகரப்படும் போகத்தை அனுபவிக்கிறவரும் கூட இந்தத் திருவேங்கடமுடை யானை ஒரு தடவை பார்க் கிறபோது - அங்கேயிருந்து திருவேங்கடத்தைப் பார்க் கிறாராம் - மறுபடியும் ஒரு தடவை பூலோகத்திலே பிறக்க மாட்டோமா! திரு வேங்கட யாத்திரை போக மாட்டோமா? 'கோவிந்தா கோவிந்தா' என்று சொல்லிக் கொண்டு போக மாட்டோமா...? என்று ஏங்குகிறார்களாம்!

ஆகையினாலே திருவேங்கடமுடை யானின் தோற்றம், திருவேங்கட மலை... அப்படி ஆகர்ஷிக் கிறது நம்மை!

(தொடரும்)

**''நைட்ல டிராவல் பண்ணினாத் தான் சார் 'பெர்த்' வசதி உண்டு! நீங்க பகல் பயணத் துக்கே தூங்கும் வசதி கேக்கறீங் களே?''**

**''நான் ஆபீஸ் வேலையா வெளி யூர் போறேன் சார்...!''**

**— சீர்காழி வி. ரேவதி**

# நம்பிக்கை

இந்த ஆண்டு கோடை விடுமுறையில் எந்தெந்த ஊர்களுக்குப் போகலாம் என்று எங்கள் குடும்ப அங்கத்தினர்கள் நால்வரும் ஒன்று கூடி ஒரு முடிவிற்கு வருவதற்குள் வீடு, உத்திரப் பிரதேச சட்டமன்றம் போல் அமளி துமளிப்பட்டது. அலுவலகத்திலிருந்து கிடைக்கும் எல்.டி.சி.யையும், கொளுத்தும் வெயிலையும் வீணடிக்காமல், சென்னை, கோயம்புத்தூர், பெங்களூர், மைசூர் எல்லாம் சுற்றி விட்டு, பம்பாய் வழியாக தில்லி திரும்பலாம் என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. விவாதத்திற்கு எடுத்துக் கொண்ட அடுத்த விஷயம், க்யூவில் நின்று ரயில் டிக்கெட்டுகள் வாங்குவது யார் என்பது. கல்லூரியில் படிக்கும் குழந்தைகள் இருவரும் பரீட்சை நெருங்குகிறது என்றும், என் கணவர் ஆபீசுக்கு நேரம் கழித்துப் போனால் வேலை போய் விடும் என்றும் பயமுறுத்தி தப்பித்துக் கொள்ள, க்யூவில் நின்று டிக்கெட் வாங்கும் அதிர்ஷ்டத்தை நான் பெற்றேன்.

அவசர அவசரமாக வீட்டு வேலைகளை முடித்து, ஆட்டோவைப் பிடித்து, தெற்கு தில்லியில் உள்ள சரோஜினி நகர் ரயில்வே ரிசர்வேஷன் அலுவலகத்தை அடைந்தேன். ஒவ்வொரு கவுண்டரிலும் க்யூ அனுமார் வால் போல் நீண்டு, கட்டடத்திற்கு வெளியே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது. உள்ளதில் நீளம் குறைவாகத் தோன்றிய ஒரு க்யூவில் போய் என்னை ஒட்டிக் கொண்டேன்.

பாராளுமன்றத்தில் பெண்களுக்கு இட ஒதுக்கீடு, நடந்து முடிந்த பொதுத்தேர்தல், பா.ஜ.க அரசு, ஜெயலலிதா அம்மாவின் மறு அவதாரம், டைடானிக் திரைப்படம் என்று பட்டிமன்றம் நடத்தாத குறையாக ஒவ்வொரு விஷயத்தைப் பற்றியும் க்யூவில் நின்ற நாங்கள் அலசித் தீர்த்தோம். டிக்கெட் கவுண்டரை அடைய, குறைந்த பட்சம் இரண்டு மணி நேரமாவது



ஆகும் என்ற நிலையில், பொழுதைக் கழிப்பதற்கு வேறு என்னதான் வழி?

தாக சாந்திக்காக, குளிர்பானம் அல்லது காப்பி, டீ அருந்த என்று யாராவது வெளியே போனால், க்யூவில் அவர்களுடைய இடத்தை பத்திரமாகப் பாதுகாப்பது, காதுகளில் டிரான்ஸிஸ்டரை ஒட்டிக் கொண்டு கிரிக்கெட் காமெண்ட்ரி கேட்டுக் கொண்டிருப்பவர்களிடமிருந்து அவ்வப்பொழுது ஸ்கோர் கேட்டுத் தெரிந்து கொள்வது என்று ஒவ்வொருவருக்கொருவரும் மிகவும் சிநேகபாவத்துடன் நேரத்தைக் கழித்துக் கொண்டிருந்தோம். ரயில் சிநேகம் என்பது போல், இது ரயில்வே ரிசர்வேஷன் சிநேகிதம் போல!

சுமார் இரண்டரை மணி நேரம் கால் கடுக்க நின்று, வாய் வலிக்க அரட்டைக் கச்சேரியும் செய்த பிறகு, ஒருவழியாக எனக்கு முன்பு நின்று கொண்டிருந்த வழுக்கைத் தலை மனிதரின் (மன்னிக்கவும்! அவருடைய பெயர் தெரியாததால் வழுக்கைத் தலை மனிதர் என்ற காரணப் பெயர்) முறை வந்தது. கையில் தயாராக எழுதி வைத்துக் கொண்டிருந்த படிவத்தை நீட்டினார் அவர். கவுண்டரில் உட்கார்ந்திருந்த பெண்மணி, கணிப்பொறியின் கீ போர்டை தட்டிப் பார்த்து, அவர் குடும்பத்துடன் பயணிக்க வேண்டிய தேதிக்கு டிக்கெட்டுகள் கிடைக்கின்றன என்று தெரிவித்தாள். அந்த மனிதருக்கு வாயெல்லாம் பல். ஏதோ, எவரெஸ்ட் சிகரத்தையே எட்டிப் பிடித்து விட்ட மாதிரி, வெற்றிக் களிப்பில் முகம் பிரகாசித்தது. ஆனால், அவர் முகத்தின் பிரகாசம் மறைய ஒரு நொடிகூட ஆகவில்லை. டிக்கெட்டிற்காக அவர் கொடுக்க வேண்டிய தொகை நாலாயிரத்து நூற்று ஐம்பது



ரூபாய் என்று அறிவித்தாள், கவுண்டர் பெண்மணி. ஆனால், அந்த மனிதர் வீட்டிலிருந்து எடுத்துக் கொண்டு வந்திருந்த தொகையோ, நாலாயிரம் ரூபாய்தான். பர்ஸ், பாண்ட் பாக்கெட்டுகளைத் துழாவி, கிடைத்த பணத்தைப் பலமுறை எண்ணிப் பார்த்தும் டிக்கெட்டிற்கு வேண்டிய தொகை தேறவில்லை. மனிதருக்கு, பேயறைந்தாற்போல் ஆகிவிட்டது. இதற்குள் க்யூவில் பின்னால் நின்று கொண்டிருந்தவர்கள், பொறுமை யிழக்க ஆரம்பித்தனர். இத்தனை நேரம் சகஜமாக அரட்டை அடித்துக் கொண்டிருந்த கூட்டம், ''பணம் இல்லையென்றால், கவுண்டரை காலி பண்ணி, அடுத்த ஆளுக்கு இடம் கொடுக்க வேண்டியதுதானே, எங்க நேரத்தை ஏன் வீணடிக்கிறீர்?'' என்று கூச்சல் போட ஆரம்பித்தது.

அந்த வழுக்கைத்தலை மனிதரைப் பார்க்கவும் பரிதாபமாக இருந்தது. பாவம், அவர் இரண்டு மணி நேரம் கால் கடுக்க நின்றது வீண்! வீட்டிற்குப் போய் குறைந்த பணத்தை எடுத்துக் கொண்டு திரும்பி வந்து மறுபடியும் இரண்டு மணி நேரம் க்யூவில் நிற்க வேண்டும். அப்படியே மறுபடியும் க்யூவில் நின்றாலும் டிக்கெட் கிடைக்கும் என்பது என்ன நிச்சயம்? அவருடைய நிலையைக் கண்டு மனம் கலங்கிய நான், சற்றும் யோசிக்காமல் டக்கென்று என்னுடைய பர்ஸிலிருந்து நூற்றி ஐம்பது ரூபாயை எடுத்துக் கொடுத்து அவரை சீக்கிரமாக டிக்கெட் வாங்கும்படிக் கூறினேன். முன்பின் தெரியாதவரிடமிருந்து, இத்தனை பெரிய தொகையைப் பெறுவதா என்று அவருக்கு ஏகத் தயக்கம். ஆனால், நிலைமையைச் சமாளிக்க வேறு வழி ஒன்றும் தோன்றாததால், சற்றுத் தயக்கத்துடன், நான் கொடுத்த பணத்தை வாங்கிக் கொண்டார், அவர்.

அவ்வளவுதான்! சுற்றியிருந்தவர்களின் விமர்சனத்திற்குக் கேட்க வேண்டுமா? ஆள் ஆளுக்கு ஒரு கமெண்ட்.

'தேவலையே, டக்கென்று பணத்தை எடுத்துக் கொடுத்துட்டாங்களே! அவ்வளவு சுலபமா, யாரும் நம்பி பணம் கொடுக்க மாட்டாங்க தெரியுமா?'' என்று எனக்கு புகழ் மாலை சூட்டினான் ஒருவன். "யார் கண்டாங்க! அந்த அம்மாகிட்டே நிறைய பணம் புரளுது போல இருக்கு'' என்று என்னை கறுப்புப் பணக்காரி என்று முடிவு கட்டினான், மற்றொருவன்.

''துட்டு இருந்தால் போதுமா? கொடுக்க மனசு வர வேண்டாமா? தில்வாலி ஹே!'' என்று அவனை மடக்கினான் இன்னொருவன்.

''அந்த ஆள் இனிமே எங்க இவங்க கண்ணிலே படப் போகிறான்!'' என்று என்னை ஏமாந்த சோணகிரியாக்கிய கும்பலுக்கும் குறைவில்லை, அங்கே.

நான் டிக்கெட் வாங்கி முடிக்கும் வரையில், என் அருகில் நின்று கொண்டிருந்த அந்த வழுக்கைத் தலை மனிதர், நா தழுதழுக்க "நீங்கள் செய்த இந்த உதவியை நான் ஒருநாளும் மறக்க மாட்டேன். இந்தப் பணத்தை நான் எப்படி உங்களுக்குத் திருப்பித் தருவது?'' என்று கேட்டார்.

ஒரு காகிதத்தில் என்னுடைய விலாசத்தை எழுதிக் கொடுத்து விட்டு, எல்லோரும் என்னை ஒரு அதிசயப் பிறவியாக அல்லது அசட்டுப் பிறவியாகப் பார்க்கும் பார்வைகளை லட்சியம் செய்யாமல் அந்த இடத்தை விட்டு நடையைக் கட்டினேன்.

**ம**னத்திற்குள் ஒரு சிறு உறுத்தல். முன்னே, பின்னே யோசிக்காமல் நூற்றைம்பது ரூபாயைத் தூக்கிக் கொடுத்து விட்டோமே என்று. என்னதான் என் கணவர் அப்படிக் கறாராகக் கணக்குக் கேட்கும் மனிதர் இல்லை என்றாலும், நடந்த விஷயத்தை அவரிடமிருந்து மறைக்க முடியுமா? உதவ வேண்டும் என்று தோன்றியது, பணத்தைக் கொடுத்தாகி விட்டது. இப்பொழுது குழம்பு வானேன்?

''திரும்பக் கிடைத்தால் பாக்கியம், கிடைக்கா விட்டால் லேகியம்!'' என்று என்னை நானே தேற்றிக் கொண்டு, நான் செய்த 'அசட்டுக்' காரியத்தைப் பற்றி அப்போதைக்கு மறந்து போனேன்.

வழக்கம் போல் ரயில்வே ரிசர்வேஷன் அலுவலகத்திற்கு அருகில் உள்ள சரோஜினி நகர் மார்க்கெட்டிற்குப் போய் காய்கறி, பழம், மேட்சிங் ரவிக்கைத் துணிகள் என்று ஒரு மணி நேரம் ஷாப்பிங் செய்து விட்டு, ஆடி அசைந்து கொண்டு வீடு வந்து சேர்ந்தேன். வீட்டிற்குள் நுழைந்தால் அங்கு எனக்கு ஒரு பெரிய ஆச்சரியம் காத்திருந்தது!

ரிசர்வேஷன் அலுவலகத்தில் என்னிடமிருந்து நூற்றி ஐம்பது ரூபாய் பெற்றுக் கொண்ட அந்த மனிதர், வரவேற்பு அறையில் எனக்காகக் காத்திருந்தார். என்னைக் கண்ட உடன் இரு கைகளையும் கூப்பி வணக்கம் தெரிவித்த அவர், உடன் அழைத்து வந்திருந்த தன் மனைவியை எனக்கு அறிமுகம் செய்து வைத்தார். நான் கூச்சத்தால் நெளியும் அளவிற்கு, தன் மனைவியிடம், நான் மட்டும் தக்க சமயத்தில் பணம் கொடுத்து உதவியிராவிட்டால், டிக்கெட் கிடைக்காமல் ரொம்ப கஷ்டப்பட்டிருப்போம் என்றெல்லாம் புகழ்ந்து என்னை உச்சாணிக் கொம்பில் ஏற்றி வைத்தார், அந்த மனிதர். காப்பி, டீ ஏதாவது குடித்து விட்டுப் போகலாமே என்று நான் செய்த உபசாரத்தையெல்லாம் பணிவுடன் மறுத்து விட்டு, கொண்டு வந்திருந்த பணத்தை என்னிடம் கொடுத்து விட்டு அவர்கள் மாடிப்படி இறங்க ஆரம்பித்தார்கள்.

நான், அப்பொழுதுதான் கவனித்தேன், டைனிங் டேபிளின் மேல் எனக்காக வாங்கி வந்திருந்த ஒரு டஜன் மாம்பழங்களும், ஒரு டஜன் வாழைப்பழங்களும் அடங்கிய பிளாஸ்டிக் பைகளை, அவர்கள் நாசூக்காக வைத்து விட்டுப் போயிருந்ததை. பால்கனிக்கு ஓடிப் போய், ஸ்கூட்டரை உதைத்துக் கிளப்பிக் கொண்டிருந்த அவரைக் கூப்பிட்டு, "என்ன இதெல்லாம்?" என்று கேட்டேன்.

"தாங்கள் செய்த உதவியுடன் ஒப்பிடுகையில் இது ஒன்றுமே இல்லை" என்று அவர் அடக்கத்துடன் பதிலளித்தார்.

நான் அவசரத்திற்கு நூற்றி ஐம்பது ரூபாய் கொடுத்து உதவியதற்குக் கைமாறாக, அந்தப் பணத்தை உடனடியாகத் திருப்பிக் கொடுத்ததோடல்லாமல், ஐம்பது ரூபாய் வரை செலவழித்து பழங்கள் வாங்கி வந்து என்னை திக்குமுக்காடச் செய்து விட்டாரே, இந்த மனிதர்! நான், அவருக்கு செய்த உதவி பெரியதா, இல்லை அவர் செய்த பதில் மரியாதை பெரியதா என்று எடை போடுவது அவ்வளவு எளிதான காரியமில்லை. கிளம்பிய அந்த மனிதருக்கு கை அசைத்து விடை கொடுத்தேன். ○

# கல்கி—B. M. SILK SAREES

BMSS

## இணைந்து வழங்கும்

## பட்டுப் புடவை பரிசுப் போட்டி - 4

"கம்யூனிஸ்டுகள்தாம் எங்கள் முதல் எதிரி" என்று இந்த இதழில் ஒரு பிரமுகர் கூறியிருக்கிறார். யார் அவர்?

இந்த இதழைப் படித்துக் கண்டு பிடித்துக் கீழுள்ள ஒரு பாதிக் கூப்பனில் எழுதியனுப்புங்கள். பலர் சரியான விடையெழுதினால் குலுக்கல் முறையில் ஒருவருக்கே பட்டுப் புடவை பரிசு!

மீதிப் பேருக்கு ஏமாற்றம்தானா? இல்லை. கூப்பனிலுள்ள மறுபாதியிலும் இதே விடையை எழுதிப் பத்திரப்படுத்திக் கொள்ளுங்கள். பன்னிரண்டு வாரம் தொடரப் போகும் இப் போட்டியின் முடிவில் பம்பர் பரிசு ஒன்றும் காத்திருக்கிறது! விவரங்கள் விரைவில்.

- விடைகளைக் கூப்பனில் மட்டுமே எழுதியனுப்ப வேண்டும். ஒரிஜினல் கூப்பன்தான்; ஜெராக்ஸ் பிரதிகள் செல்லாது.
- ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

முடிவு தேதி: 11.5.98

**பட்டுப் புடவை பரிசுப் போட்டி – 4**
(நீங்கள் பத்திரப்படுத்த வேண்டிய கூப்பன்)

அந்த பிரமுகரின் பெயர் :

..............................................................................

என் பெயர் : ..............................................................

முகவரி : ..................................................................

..............................................................................

**பட்டுப் புடவை பரிசுப் போட்டி – 4**
(எங்களுக்கு அனுப்ப வேண்டிய கூப்பன்)

அந்த பிரமுகரின் பெயர் :

..............................................................................

என் பெயர்: ...............................................................

முகவரி: ...................................................................

..............................................................................

# தேவை — ஒரு மானேஜர்!

மண் வாசனைப் படங்களாகவே எடுத்து வந்த மு. களஞ்சியம், அடுத்து நகரத்தின் இரைச்சல்களில் இனிமையான காதல் கதை ஒன்றை 'பூந்தோட்'டத்தில் சொல்லப் போகிறார். வழக்கம் போல் இளையராஜாவின் பக்கபலமும் உண்டு. வரும் இரண்டாயிரமாவது வருஷத்தை வரவேற்று, ஒன்பது நிமிஷத்திற்கு இளையராஜா போட்டுக் கொடுத்திருக்கும் பாட்டு, படத்தின் முக்கியங்களில் ஒன்று. இதற்காக எழுபது லட்சம் ரூபாய் செலவில் பிரம்மாண்ட செட் ஒன்றை நிர்ணயிக்க தயாரிப்பாளர்கள் முடிவு செய்துள்ளனர். 'பூந்தோட்ட'த்திற்குப் பின் களஞ்சியம் காலடி எடுத்து வைக்க இருக்கிற நிறுவனம் கவிதாலயா. இவர்கள் தயாரிக்கும் படத்திலும் முரளிதான் கதாநாயகன். வரிசையாய் களஞ்சியம் ஒப்பந்தமாயிருக்கும் மூன்று படங்களிலும் முரளியே ஹீரோ. இசைக்கு இளையராஜா என்றால், ஹீரோவிற்கு முரளிதான் என்கிற அளவிற்கு களஞ்சியத்தின் ஆஸ்தான நடிகராகிவிட்டார் முரளி!

“நடிக்கிறது துட்டுக்காக. கோர்ட்டுக்குப் போக வசதியில்லாமல் வாடுகிறவர்களுக்கு சர்வீஸ் பண்ணவே வக்கீல் தொழில். படித்துவிட்டு வீட்டில் சும்மா உட்கார்ந்திருக்க மாட்டேன். நிச்சயம் பிராக்டீஸ் பண்ணுவேன்'' - என்று சத்தியமே செய்கிறார் சுவலட்சுமி. வித்தியாச லட்சுமி!

பத்மினி சகோதரிகள் போல் இன்று நக்மா சகோதரிகள். நக்மா, ரோஷினி, ஜோதிகா என்று மூன்று பேரும் திரையுலகை ஒரு கை பார்த்துவிடுவது என்று வந்திருக்கிறார்கள். நக்மாவுக்கு இப்போது நேரம் சரியில்லை. இன்கம்டாக்ஸ் ஆபீசுக்கும் வீட்டுக்குமாய் அலைந்து கொண்டிருக்கிறார். 'துள்ளித் திரிந்த கால'த்திற்குப் பின் ரோஷினியும் வீட்டில் தான். வஸந்த்தின் 'பூவெல்லாம் கேட்டுப்பார்' படத்தில் அறிமுகமாகும் கடைசி சகோதரி ஜோதிகாவை எப்படியும் நம்பர் ஒன்னாக்கி விடுவது என்று சகோதரிகள் முடிவெடுத்திருக்கிறார்கள். ஆனால், அதற்கு இன்னும் சில மாதங்களாவது காத்திருக்க வேண்டும். காரணம் 'காதலுக்கு மரியாதை'யின் இந்தி பதிப்பில் ஜோதிகாதான் நாயகி. இந்தப் படத்தின் ரிலீஸுக்கப்புறம்தான் ஜோதிகாவின் பிற படங்களை ரிலீஸ் பண்ண வேண்டும் என்கிற அக்ரிமென்ட்! நல்ல நேரத்துக்காக நக்மா சகோதரிகள் காத்திருக்கிறார்கள்.

பிரச்னை செய்ததால் பல படங்களை இழந்த கீர்த்தி ரெட்டி தமிழில் மீண்டும் வலம் வர ஆசைப்படுகிறார். பந்தா பண்ணுகிற நடிகை என்கிற இமேஜுக்குத் தாம் ஆளானதற்குத் தமது அம்மாதான் காரணம்

• பூந்தோட்டம் - முரளி, தேவயானி



என்பதை உணர்ந்த கீர்த்தி ரெட்டி, இனி அம்மாவை பெங்களூரிலேயே விட்டுவிட்டு தாம் மட்டும் சென்னைக்கு வந்துவிட முடிவெடுத்திருக்கிறார். சென்னையில் தமக்கு ஒரு மானேஜர் தேவை என்று பலபேருக்கு வலைவீசினார். பழைய அநுபவங்களைக் கேள்விப்பட்டவர்கள் 'கீர்த்தி ரெட்டியா அய்யோ வேண்டாம்' என்று பின் வாங்கி

விட்டார்கள். யாராவது மாட்டாமலா போய் விடுவார்கள் என்று முன் வைத்த காலைப் பின் வாங்காமல் கீர்த்தி ரெட்டி காரியத்தில் கண்ணாயிருக்கிறார்.

தலைமறைவாகிப் போன சங்கீதாவைப் பற்றி கிசுகிசுக்கள் வருவது மட்டும் குறைவதில்லை. முதலில் பார்த்திபனோடு. இரண்டாவதாக ராமராஜனோடு. இப்போது ஒளிப் பதிவாளர் சரவணனோடு. புது வீடு கட்டி குடிபோயிருக்கும் கையோடு இந்தப் புது கிசுகிசு சங்கீதாவை பாதித்ததோ என்னவோ – சரவணனை ரொம்ப பாதித்தது! நிஜத்தில் பெண்கள் என்றாலே பத்தடி தூரம் தள்ளி நிற்கிற சரவணனுக்கு, இந்த சேதி அதிர்ச்சியைக் கொடுத்தாலும் சினிமா என்றால் அப்படித்தான் என்கிற நிலைக்கு வர கொஞ்சம் சிரமப்பட வேண்டியிருந்தது. அப்பா உளுந்தூர்ப்பேட்டை சண்முகம், அக்கா, பின்னணிப் பாடகி வித்யா – என்று வி.ஐ.பி. குடும்பமாக இருப்பதால் கிசுகிசு என்றாலே பயம்தான் சரவணனுக்கு. அதுவும் ஒரு நடிகையோடு இணைத்து கிசுகிசு என்றால்! "கடவுள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்" என்று சரவணன் கையெடுத்துக்கும்பிட்டார்.



• சுவலட்சுமி - லாயர்

ஆர்.கே. செல்வமணி, பார்த்திபன் ஆகியோரின் படங்களுக்கு ஒளிப்பதிவாளராகப் பணிபுரியும் எம்.வி. பன்னீர்செல்வம் 'ஸ்டார்ட்', 'காமிரா', 'ஆக்ஷன்' சொல்ல ரெடியாகி வருகிறார். இவர் கதை சொன்ன முதல் நபர் ஏ.ஆர். ரஹ்மான். அவருக்குப் பிடித்துப் போய்விட, இசையமைக்கவும் ஒப்புக் கொண்டுவிட்டார். ஏ.ஆர். ரஹ்மான் ஓ.கே. சொன்னதும் வேலை படு ஜரூராக நடக்கிறது. ஹீரோவாக நாகார்ஜுன் ஒப்பந்தம் செய்யப்பட்டிருக்கிறார். ரசிகர்கள் 'ரட்சிக்க' வேண்டும்!

— மஹேந்த்



• கீர்த்தி ரெட்டி

● ஆர். இருதயராஜ், அம்மாசத்திரம்.

? தி.மு.க. ஆட்சியைக் கலைக்கக்கோரும் ஜெயலலிதா, 'மக்கள் இந்த ஆட்சியை விரும்பவில்லை; மக்கள் இதை நீக்க வேண்டுகிறார்கள்....' என்று சொல்கிறாரே...? யார் அந்த மக்கள்?

! வழக்குகளில் மாட்டிக் கொண்டுள்ள மக்கள்தான்!

● கே.எம்.சுப்பிரமணியன், பூனாம்பாளையம் (தெற்கு).

? ஒரு தரமான பத்திரிகை என்றால் எப்படி இருக்க வேண்டும்?

! கல்யாணப் பத்திரிகை மாதிரிதான்! ஆண் - பெண் சம்பந்தப்பட்ட விஷயமாக இருந்தாலும் ஆபாசமில்லாமல் இருக்கிறதல்லவா!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? இந்த நாட்டை யார் ஆள வேண்டும் என்பதை நிர்ணயிக்க வேண்டியது ஹிந்துக்கள்தான் என்று ராமகோபாலன் கூறியிருப்பது சரிதானா?

! வெறும் ஆட்களை நிர்ணயித்தால் மட்டும் போதுமா? ஆட்சியின் தரத்தையும் நிர்ணயிக்க வேண்டாமா?!

● பா. ரவிச்சந்திரன், அசூர்.

? இனி நடிக்கப் போவதில்லை என பாக்கியராஜ் எடுத்துள்ள முடிவு பற்றி...?

! பிரசவ வைராக்கியம்!

● வி. மோகன், நெல்லிக்குப்பம்.

? பால்விலை உயர்வு ஏழை மக்களை பாதிக்காது என்று முதல்வர் கூறியிருப்பது பற்றி...?

! ஏழைகள் பால் வாங்குவதில்லை என்கிற அர்த்தத்தில் சொல்லியிருக்கிறார். இது கொடுமை! பால் சிறந்த சத்துணவு என்பதால் ஏழைகளும் வாங்குகிற விலையில் இருப்பது அவசியம்.

● ஜெ. சந்திரசேகரன், கல்லுக்குழி.

? சேடப்பட்டியாரின் ராஜினாமா பற்றி...?

! விடுதலை பெற்ற பாட்டில் பூதம்!

● எஸ். பரமசிவம், சீர்காழி.

? 'நான் அதிகாரத்தில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் ஆட்சியிலே இருந்தாலும் இல்லாவிட்டாலும் பெரியாருடைய தொண்டன்; அண்ணாவின் தம்பி; என்றென்றும் மக்களுக்காகப் போராடுவேன்...' என்கிறாரே கலைஞர்...?

! நெருக்கடி வருகிறது என்பதைப் புரிந்து கொண்டிருக்கிறார் என்று அர்த்தம்!

● உமரி. பொ. கணேசன், பம்பாய் - 37 ❑

? ஏழை விவசாயிகளுக்கு அரசு இலவச மின்சாரம் கொடுக்கிறது. ஆனால் பம்ப்செட் நிறுவி கிணறு வெட்ட ஆகும் செலவு கிட்டத்தட்ட இரண்டு லட்சம் ரூபாய். இவ்வளவு செலவு செய்யக்கூடிய நிலையிலுள்ள விவசாயி எப்படி ஏழையாயிருப்பார்? இத்தகைய ஒருவருக்கு இலவச மின்சாரம் தருவது அரசுக்கு வீண் செலவுதானே?



• முடிவுக்குப் பின் ஆரம்பம்!



• நெருக்கடி உணர்ந்து....



• விடுதலை!....

# கொழுக்கட்டை விருந்துக்கு



• கொழுக்கட்டை அழைப்பு!



• தன்னை உணராமல்....



• ரோஷம்!



• கடமை வீரர்

# நீங்கள் கேட்டவை — தராசு

! கிணறு வெட்டுதல் – பம்ப் செட் நிறுவுதல் என்பது ஏழை விவசாயிக்குச் சக்திக்கு மீறிய முதலீடுதான். அதனால்தான் அரசு மின்சாரத்தை இலவசமாகக் கொடுத்து உதவுகிறது. உண்மையில், உபயோகமாகும் மின்சாரத்தின் மதிப்பைக் காட்டிலும் பாசனத்துக்கு விநியோகிக்கப்படும்போது விரயமாகும் (transmission loss) மின்சாரத்தின் மதிப்புதான் பெரிய நஷ்டம். இதைக் குறைக்க வேண்டும்.

● சி. தெ. ரஜினி அருள், மணக்காடு.

? *வீரப்பன் கதை மீண்டும் ஆரம்பமாகி விட்டதே?*

! சும்மா ஜெயலலிதாவும் வாஜ்பேயும் மட்டுமே செய்தியில் அடிபட்டுக் கொண்டிருந்தால் அவனுக்கு ரோஷம் வராதா...?

● சுப்பு வேதையா சித்திரவேலு, கருப்பம்புலம்.

? *அரசு பஸ்களில் இரவில் பாட்டு, சினிமாவுக்கு டாட்டா காண்பித்தது சரியா?*

! மிக நல்ல விஷயம். தூங்க விரும்புவோர் நிம்மதியாகத் தூங்கலாம். எப்படியிருந்தாலும் பழைய படம்தான் போடுவார்கள் என்பதால் நஷ்டமும் இல்லை!

● ஆர். சரோஜா, நாட்டரசன்கோட்டை.

? *''இந்தி திணிப்புக்குத்தான் நான் எதிரியே தவிர இந்தி இசைக்கு எதிரி அல்ல...'' என்கிறாரே மு.க.?*

! அச்சா ஜீ!

● சூர்யநிலா, சேலம் – 2.

? *விநாயக சதுர்த்தி கொழுக்கட்டை சாப்பிட முதல்வருக்கு அழைப்பு விடுக்கிறாரே ராம கோபாலன்...?*

! கொழுக்கட்டையிலோ பிரியாணியிலோ நமது இறையுணர்வு அடங்குவதில்லை... ரமலான் நோன்பு முடிந்து ஒரு பொது விருந்து நடத்துவது என்பது இஸ்லாமிய வழக்கம். அதில் நட்புமுறையில் ஓர் அரசியல் தலைவர் பங்கேற்பதில் தவறில்லையே. இதைப் போன்ற பொது விருந்து பிள்ளையார் சதுர்த்தியிலோ வேறு ஹிந்து பண்டிகையிலோ கிடையாது. வீம்புக்காகப் புதிய வழக்கத்தைப் புகுத்தக் கூடாது.

● கே. கண்ணன், மதுரை – 9.

? *தெலுங்கு தேசக் கட்சிக்கு அமைச்சர் பதவி கொடுப்பதற்கு முன் கூட்டணிக் கட்சிகளைக் கலந்து பேச வேண்டும் என்று ஜெயலலிதா வாஜ்பேயிக்குக் கடிதம் அனுப்பியிருப்பது பற்றி...?*

! பிரதமர், அமைச்சரவைக் கூட்டம் நடத்துவதற்கு முன்பு சூப்பர் பிரதமரைக் கலந்தாலோசிக்க வேண்டும் என்று கடிதம் வந்தால் கூட ஆச்சர்யப்படுவதற்கில்லை

● ப. சுகுமார், தூத்துக்குடி – 1.

? *தி.மு.க. அரசைக் கலைப்பது தமிழர்களுக்குச் செய்யும் கடமை என்கிறாரே வாழப்பாடி?*

! அவர், அம்மாவுக்கு வால்பிடிக்கும் தம் 'கடமை'யைச் செய்கிறார்!

● ஜே. ரஜினிராம்ஜி, மயிலாடுதுறை.

? *தன்னைப் பற்றி அறிந்து கொள்வது கஷ்டமா...?*

! கஷ்டம்தான் போலும்.. இல்லாவிட்டால் பாரத ரத்னா போன்ற அதி உன்னத விருது பெற்ற சி.எஸ்., ''முதல்வர் என்னைப் பாராட்டவில்லையே...'' என்று அற்ப ஆசைப்பட்டு குறைபட்டுக் கொண்டிருப்பாரா? அப்படி குறைப்பட்டுக் கொண்டதும் தவறான அனுமானத்தின் மீது என்பது மேலும் வேதனை!

● செந்தாமரை நாதன், செந்தாரப்பட்டி.

? *கடவுள் மீது எந்த அளவுக்கு நம்பிக்கை வைக்கலாம்?*

! இப்படிக் கணக்குப் போட்டுப் பார்ப்பது நம்பிக்கையின் அடையாளம் ஆகாது.

## அழைக்கிறாரே ராமகோபாலன்?

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
உமரி. பொ. கணேசன்,
ஸ்ரீ நாராயணா ஸ்டோர்,
A-114, எம். என். நகர்,
செக்டர் VII அருகே
அன்டாப் ஹில், மும்பை- 400 037.

### தி.மு.க. அரசின் ஸ்கோர் போர்டு:

# என்ன ஆச்சு இதெல்லாம்?



பட்ஜெட்டின் ஹைலைட்டுகளை முழுப் பக்க விளம்பரமாகக் கொடுத்திருக்கிறது தி.மு.க. அரசு. 'சொன்னதைச் செய்வோம்; செய்வதைச் சொல்வோம்' என்பதுதான் தி.மு.கவின் தேர்தல் தாரக மந்திரம். அந்த அடிப்படையில் 1996ம் ஆண்டு தி.மு.க.வின் தேர்தல் வாக்குறுதிகளை ஒரு பார்வை பார்த்தபோது இதுவரை செய்ய மறந்தவை சில கண்ணில் பட்டன:

- முதலமைச்சர் உட்பட, அமைச்சர்கள் மற்றும் வாரியத் தலைவர்கள் மீது ஊழல் புகார் கொடுக்கப்பட்டால் அதைப் பற்றி விசாரித்துத் தீர்ப்புக் கூற நடுவர் அமைப்பு ஏற்படுத்தப்பட்டு ஊழலற்ற அரசிற்கு உத்தரவாதம் அளிக்கப்படும்.
- குற்றங்களைத் தடுக்கவும், கண்டு பிடிக்கவும் நவீன முறையில் பாதுகாப்பு, தணிக்கை முறை மேற்கொள்ளப்படும்.
- திருப்பூர், சிவகாசி, ஆம்பூர் போன்ற இடங்களில் தண்ணீர் வசதி, மின் வசதி, மாசுப் பிரச்னை போன்றவை உருவாகி, அந்தப் பிராந்தியங்கள் முழு வளர்ச்சியை எய்த முடியாமல் இருக்கின்றன. எனவே ஒவ்வொரு பகுதிக்கும் ஏற்ற தொழில் வளர்ச்சிக்கான திட்டங்களை (Area Specific Packages) உருவாக்குவோம்.
- வரியினங்களைச் செலுத்துவது, கடன் பெறுவது உள்ளிட்ட எல்லாமே பதிவு செய்யப்பட்டு எளிமையாக்கும் விதத்திலும் விவசாயிகள்படும் அவஸ்தை நீங்கும் விதத்திலும் பட்டா பாஸ் புத்தகம் வழங்கும் முறை அமுலாக்கப்படும்.
- இந்த ஆண்டிலேயே (1996) கிருஷ்ணா நீர் சென்னைக்குக் கிடைத்திட முயற்சிகள் மேற்கொள்ளப்படும்.
- ஒவ்வொரு வட்டத்திலும் கிராம வளர்ச்சி வங்கிகள் அமைக்கப்படும்.
- மூடப்பட்டிருக்கும் முப்பதுக்கும் மேற்பட்ட பஞ்சாலைகள், ஸ்டாண்டர்ட் மோட்டார் தொழிற்சாலை உட்பட சிறு தொழிற்சாலைகள் மூடப்பட்டிருப்பதால் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலையின்றி தவிக்கிறார்கள். மூடிய ஆலைகளைத் திறப்பதற்குத் துரித நடவடிக்கை எடுக்கப்படும்.
- அழிந்து வரும் வன வளத்தைப் பாதுகாக்க விரிவான வன வளர்ப்புத் திட்டம் துவக்கப்படும்.
- ரேஷன் கடைகளில் நடைபெறும் தில்லுமுல்லுகளை முடிவுக்குக் கொண்டு வர நிரந்தரத் தீர்வு காணப்படும்.
- தமிழ்நாட்டு வரலாற்றினை எழுதி வெளியிடும் முயற்சி தொடங்கப்படும்.
- விவசாயிகளுக்குக் குறிப்பிட்ட நேரம் சீரான மின்சாரம் கிடைக்க உறுதிப்படுத்தப்படும்.
- சத்துணவு ஊழியர்களின் கோரிக்கை பரிவுடன் கவனிக்கப்படும்.
- பனைத் தொழிலில் ஈடுபடுவோர், தொழில் நடைபெறாத சீசனில் வருமானம் பெற மாற்று ஏற்பாடுகள் கண்டறியப்படும்.

வந்த பின் உள்ளாட்சி தேர்தல் நடத்தியது, மற்றும் திருமண உதவி, நலிந்தோர் ஓய்வூதியம் ஆகியவைகளை உயர்த்தியது மட்டுமல்லாமல் அதிக அளவில் மக்கள் பயன் பெற்றிருப்பது ஆகியவை, பாராட்டத்தக்கவை. "எங்களுக்கு ஐந்தாண்டுக் காலம் அவகாசம் இருக்கிறது" என்று தி.மு.க. அரசு சொல்லலாம். ஆனால் இப்போதிருக்கும் அரசியல் சூழலில் Earlier the better என்பதைச் சொல்லவும் வேண்டுமோ!

— ஸ்ரீநி

**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621**
**Annual Subscription : India Rs. 250/-; Overseas Rs. 1600/- (Air Mail)**
**Half Yearly Subscription : India Rs. 125/-; Overseas Rs. 800/- (Air Mail)**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN/MS (S) M4392/98 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN/MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka